உ

சிவமயம்

# மேலைச்சிவபுரி
# அருள்மிகு மீனாட்சி சொக்கலிங்கர்
# திருக்குட நன்னீராட்டு விழா

சிறப்புமலர்:

19-08-1994.



அற்புதக் கீர்த்தி வேண்டின்
ஆனந்த வாழ்க்கை வேண்டின்
நற் பொருள் குவிதல் வேண்டின்
நல மெல்லாம் பெருக வேண்டின்

கற்பக மூர்த்தி தெய்வக்
களுஞ்சியத் திருகை சென்று
பொற்பாதம் பணிந்து பாரீர்
பொய்யிலே கண்ட உண்மை

- கவிஞர் கண்ணதாசன்

சிவன் கோயில் பழைய தோற்றம்







மேலச்சிவபுரி
சாமி நாத
விநாயகர் கோயில்
முன் தோற்றம்



அருள்மிகு
சக்தி வேலாயுதசாமி
கோயில்



வினை தீர்த்த
விநாயகர் கோயில்

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு

# ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் ஸ்ரீமடம் ஸமஸ்தானம்

காஞ்சிபுரம்

*நகரத்தார் நெருங்கி வாழும் மேலைச்சிவபுரியில் கோயில் கொண்டு அருள் பாலிக்கும் ஸ்ரீ மீனாட்சி சொக்கலிங்கம் நகரத்தார் கோயிலுக்கு ஜீரணோத்தாரணப்பாலி முடித்து வரும் 19–08–94ல் கும்பாபிஷேகம் நடத்தி மலரும் வெளியிடுவது அறிந்து மகிழ்கிறோம்.*

*ஸ்ரீ மீனாட்சி சொக்கலிங்கம் அருளால் கும்பாபிஷேக நிகழ்ச்சிகள் நல்ல விதமாக நடந்தேறவும். மலர் ஆலயம் பேணுதல் சாலவும் நன்று என்ற உண்மையைப் பரம்பரைச் சொத்தாகப் பெற்றிருக்கும் நகரத்தார் தம் சிறப்புடன் ஆலய வழிபாட்டின் பெருமையையும் முக்கியத்துவத்தையும் விளக்கி ஆஸ்திகம் தழைத்தோங்க வைப்பதாக விளங்கவும் ஆசீர்வதிக்கிறோம்.*

*நாரயணஸ்ம்ருதி !*

சிவமயம்

வாழ்க வையகம்







மேலைச்சிவபுரி நகரத்தார்களுக்குச் சொந்தமான
அருள்மிகு மீனாட்சி அம்மன் உடனாய சொக்கலிங்கப் பெருமான் திருக்கோயில்
திருக்குட மங்கல நன்னீராட்டுப் பெருவிழா

# அழைப்பிதழ்



## 19 - 08 - 1994 வெள்ளிக்கிழமை



### விநாயகப் பெருமான்

திருவும் கல்வியும் சீரும் தழைக்கவும்
கருணை பூக்கவும் தீமையைக்காயவும்
பருவமாய் நமதுள்ளம் பழுக்கவும்
பெருகுமாழத்துப் பிள்ளையைப் பேணுவாம்

### முருகப் பெருமான்

[illegible]



### சொக்கலிங்கப் பெருமான்

பொன்னும் மெய்ப் பொருளும் தருவானை
போகமும் திருவும் புணர்ப்பானை
பின்னைஎன் பிழையைப் பொறுப்பானை
பிழைஎலாம் தவிரப் பணிப்பானை
இன்ன தன்மையன் என்று அறியொண்ணா
எம்மானை, எளிவந்த பிரானை
அன்னம் வைகும் வயற்பழனத்து அணி
ஆரூரானை மறக்கலும் ஆமே.

### மீனாட்சி அம்மன்

கரும்புமுரல் கடிமலர்ப்பூங் குழல்போற்றி!
உத்தரியத் தொடித்தோள் போற்றி!
கரும்புருவச் சிலைபோற்றி! கவுணியர்க்குப்
பால் சுரந்த கலசம் போற்றி!
இரும்பு மனம் குழைத்தென்னை எடுத்தாண்ட
அங்கயற்கண் எம்பிராட்டி
அரும்பும் இள நகைபோற்றி! ஆரணநூ
புரம்சிலம்பும் அடிகள் போற்றி!

மெய்யன்பு சான்றீர்!

எல்லாம் வல்ல முழுமுதற் கடவுளாம் சிவபெருமானை 'செல்வன் கழல் ஏத்தும் செல்வம் செல்வமே' என மனங்கொண்டு, நாளும் வழிபட்டு வாழும் வகை கண்டவர்கள் நகரத்தார் பெருமக்கள். 'மன்னர் பின்னோர்' என அழைக்கப் பெறும் நாட்டுக்கோட்டை நகரத்தார் பெருமக்கள் தாம் வாழும் இடமனைத்தும் திருக்கோயில்களை எழில்பெற அமைத்தும் ஏற்றமுறப் பேணியும் வரும் தெய்வப்பணிகள் பலவாகும்.

பாரி ஆண்ட பறம்பு மலைக்குக் கிழக்கே உள்ளதும், சைவமும் தமிழும் தழைத்தினிதோங்கத் தோன்றிய சன்மார்க்க சபையை நிறுவிப் புகழ்பெற்றதும் ஆகிய இம் மேலைச்சிவபுரி நன்னகரின்கண் அருள்மிகு மீனாட்சி அம்மன் உடனாய சொக்கலிங்கப் பெருமான் திருக்கோயில் அமைந்துள்ளது.

சிவபெருமான் திருவிளையாடல்களால் சிறப்புற்ற மதுரையம்பதியை அடியொற்றி 1921இல் இக்கோயில் அமைக்கப் பெற்று மூன்று குடமுழுக்கு விழாக்கள் நிறைவேறியுள்ளன. இப்போது [illegible] திருக்கோயில்களும் இராசகோபுரமும் கல் திருப்பணியாகச் செய்தும் கோயில் முழுவதும் புதிதாக அமைத்தும் ஆலயத் திருப்பணி வேலைகள் காலச் சிறப்புடன் நிறைவேறியுள்ளன.

நிகழும் மங்களகரமான பவ ஆண்டு ஆவணித் திங்கள் 3ஆம் நாள் (19–8–1994) வெள்ளிக்கிழமை, சுக்கில நிரயோகமும் உத்திராட நட்சத்திரமும் சித்தயோகமும் சிம்மலக்கினமும் கூடிய நல்வேளையில், காலை மணி 6.00க்கு மேல் 7.30 மணியளவில், புதிய ஆலயத் திருக்குட மங்கல நன்னீராட்டுப் பெருவிழா, திருவருளின் துணை கொண்டு நிகழவிருக்கிறது. மெய்யன்பர்கள் அனைவரும் வந்திருந்து, இத்திருக்கோயிலின் திருக்குட மங்கல நன்னீராட்டுப் பெருவிழாவினைக் கண்டு மகிழ்ந்து, இறையருட் பெருங்கருணைக்கு உரியவராகி, எல்லா நலன்களும் எய்திப் பெருவாழ்வு பெற வேண்டுகிறோம்.

<u>வாழ்த்து</u>

வான்முகில் வழாது பெய்க! மலிவளம் சுரக்க! மன்னன்
கோன்முறை அரசு செய்க! குறைவிலாது உயிர்கள் வாழ்க!
நான்மறை அறங்கள் ஓங்க! நற்றவம் வேள்வி மல்க!
மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்!

**திருக்குட மங்கல நன்னீராட்டு நிகழ்முறை**

| தமிழ் | ஆங்கிலம் | கிழமை | நேரம் | |
|---|---|---|---|---|
| பவ ஆண்டு<br>ஆவணி மாதம் 1ஆம் நாள் | 17-8-94 | புதன் | அதிகாலை மணி 5-6<br>காலை மணி 9-12<br>மதியம் 2 மணி<br><br>இரவு மணி 8-30 – 9-00<br>இரவு மணி 11 | அனுக்ஞை, விக்னேஸ்வர பூஜை, தன பூஜை<br>கணபதி ஹோமம், நவகிரக ஹோமம்<br>வாஸ்து சாந்தி, மிருத் சங்கிரஹணம், அங்குரார்ப்பணம், ரக்ஷாபந்தனம்<br><br>கடஸ்தாபனம்<br>பூரண ஆகுதி, தீப ஆராதனைகள் |
| பவ ஆண்டு<br>ஆவணி மாதம் 2ஆம் நாள் | 18-8-94 | வியாழன் | காலை மணி 9-12<br>மாலை மணி 5-30 – 8-30 | இரண்டாம் கால யாக பூஜை<br>மூன்றாம் கால யாக பூஜை |
| பவ ஆண்டு<br>ஆவணி மாதம் 3ஆம் நாள் | 19-8-94 | வெள்ளி | அதிகாலை மணி 4-6<br>காலை மணி 6 | நான்காம் கால யாக பூஜை<br>பூரண ஆகுதி, தீப ஆராதனைகள் |

19.08.94 காலை மணி 6.00–7.30க்குள் திருக்குட மங்கல நன்னீராட்டுப் பெருவிழாவும் காலை மணி 10க்கு மகா அபிஷேகமும் நடைபெறும்.

அன்று இரவு ஐம்பெருங்கடவுளர் திருவுலா நிகழும்.

நிகழ்ச்சிகளின் போது, திருமறை, திருமுறைப் பாராயணம் நடைபெறும்.

விழாக்காலங்களில் கலை இலக்கிய நிகழ்ச்சிகள் நடைபெறும்.

சர்வசாதகம்: சிவநெறிச்செம்மல் சிவாகமவிசாரதா டாக்டர் K. பிச்சைக்குருக்கள், பிள்ளையார்பட்டி.

இங்ஙனம்,
**நகரத்தார்,**
மேலைச்சிவபுரி – 622 403
புதுக்கோட்டை மாவட்டம்

மேலைச்சிவபுரி,
பவ ஆண்டு, ஆனித் திங்கள் 26ஆம் நாள்,
[illegible] 7 - [illegible]

சிவமயம்

மேலைச்சிவபுரி

# அருள்மிகு மீனாட்சி சொக்கலிங்கப் பெருமான் திருக்கோயில்

# திருக்குட நன்னீராட்டு விழா

## 19-08-94 வெள்ளி காலை 6 - 7-30 மணி

### இயல் - இசை - நாட்டிய நிகழ்ச்சி நிரல்

**17-08-94 புதன்**

*மாலை 5-00 மணி* — **பக்திச்சொற்பொழிவு**
தொல்காப்பியச் செல்வர்
முனைவர் கு. சுந்ரரமூர்த்தி அவர்கள்
"திருவாசகப் பேருரை"

*இரவு 7-00 மணி* — திருச்சி கலைக்காவிரி குழுவினர்
"சத்தியம் உரைக்கும் சலங்கைகள்" நாட்டிய நிகழ்ச்சி

**18-08-94 வியாழன்**

*காலை 10-00 மணி* — **பட்டி மன்றம்**
"நன்றியுணர்வில் விஞ்சி நிற்பது கர்ணனா? கும்பகர்ணனா?"

நடுவர் — பெரும்புலவர் பேராசிரியர்
பா. நமசிவாயம் அவர்கள்

| கர்ணனே: | குண்பகர்ணனே: |
|---|---|
| புலவர் மாமணி மா. முத்துராமன் | 'நாவுக்கரசி' இளம்பிறை ம்ணி மாறன் |
| முனைவர் இராம. சௌந்திரவல்லி | புலவர் சிவ. கைலாசநாதன் |
| கவி.தாராணி இராமனாதன் | நளினி சாரங்கன் |

**18-08-94 வியாழன்**

*மாலை 4-30 மணி* — **கவியரங்கம்**

**மங்கலப் பொருள்கள்**

தலைவர் : முனைவர் தமிழண்ணல் அவர்கள்

மஞ்சள் : பொற்கிழிக் கவிஞர் காசிஸ்ரீ
அரு. சோமசுந்தரம்

| | | |
|---|---|---|
| குங்குமம் | : | பாக்கினி மேலை பழநியப்பன் |
| சந்தனம் | : | முனைவர் சபா. அருணாசலம் |
| மலர் | : | பொற்கிழிக்கவிஞர் நா. மீனவன் |
| வெற்றிலை பாக்கு | : | கவிஞர் சேது. அருணாசலம் |
| தேங்காய் | : | கவிஞர் அழ. அண்ணாமலை |
| பழம் | : | பொற்கிழிக்கவிஞர் சொ.சொ.மீ. சுந்தரம் |

*மாலை 6-30 மணி* **திருக்குறள் அறிவாற்றல் அரங்கம்**

| | | |
|---|---|---|
| முன்னிலை | : | அ.சொ. அண்ணாமலை செட்டியார்<br>துணைத்தலைவர், திருப்பணிக்குழு |
| ஆசியுரை | : | குளித்தலை ஸ்ரீ சக்ர பீடாதிபதி<br>பகவான் சுரேஷ்வரர்<br>துறையூர் பூவை தயாபரன் அவர்களின் செல்வன்<br>6 வயது ஞானக் குழந்தை, இறையருட்செல்வன் |

## திருமூலநாதன்

(திருக்குறள் முழுதும் முன் பின்னாகவோ எண், முதல், ஈற்றடி கொடுத்தோ கேட்டால் குறள் கூறும் திறன்.

சைவத்திருமுறைகள், திருவருட்பா, புறநானூறு, கம்ப இராமாயணம், திருப்பாவை, நாலடியார். பாரதியார் பாடல்கள் பாடும் திறன்.)

| | | |
|---|---|---|
| நடுவர்கள் | : | புலவர் மு. சேதுராமன்<br>முனைவர் பழ. முத்தப்பன்<br>சுப. மு. ராம. முத்தப்பன் |

*இரவு 8-00 மணி*
*மதுரை 'அபிநயா' குழுவினரின் நடன நாட்டியக் கலைநிகழ்ச்சி*

*இரவு 10-30 மணி*
*மதுரை கலைமாமணி சுலோசனா - லெட்சுமி கரகாட்டம்*
*திரைப்படப்புகழ் தஞ்சை பானு - இராசரெத்தினம் கலைநிகழ்ச்சி*

**19-08-94 வெள்ளி**

*காலை 6 - 7-30 மணி* **திருக்குட நன்னீராட்டு**

கோவிலூர் ஆதினம் ஸ்ரீலஸ்ரீ காசி விசுவநாத ஞான தேசிக சுவாமிகள் பாதரக்குடி ஸ்ரீ ரவீந்தரர் என்ற காமாட்சி சுந்தர தேசிக சுவாமிகள் துலாவூர் ஸ்ரீ நிரம்ப அழகிய ஞானப்பிரகாச தேசிக சுவாமிகள் கலந்து கொள்கிறார்கள்.

குடமுழுக்கு விழா

நேர்முக வர்ணனை : புலவர் மா. முத்துராமன்
க. செயங்கொண்டான்
முனைவர் பழ. முத்தப்பன்

காலை 10-00 மணி **பாராட்டரங்கம் - கருத்தரங்கம்**

தலைமை : முத்தமிழ்க் காவலர்
டாக்டர் கி.ஆ.பெ. விசுவநாதம் அவர்கள்

வரவேற்புரை : மு.பழ.மு. பழனியப்ப செட்டியார் தலைவர்,
திருப்பணிக்குழு

அறிமுகவுரை : அ.சுப. அண்ணாமலை தலைவர், மலர்க்குழு

ஆசியுரை : தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள்

வாழ்த்துரை : மாண்புமிகு எஸ். ரகுபதி B.Sc., B.L., அவர்கள்
(தமிழக வீட்டுவசதித்துறை அமைச்சர்)

மாண்புமிகு ப. சிதம்பரம் M.A.B.L., M.P., அவர்கள்
திரு. தா. சந்திரசேகரன் அவர்கள் இ.ஆ.ப.
(புதுக்கோட்டை மாவட்ட ஆட்சித்தலைவர்)

மீனாட்சி திருமைந்தர்
திரு வ.நா. சிதம்பரம் அவர்கள்

கருத்துரை : முனைவர் தமிழண்ணல் அவர்கள்
(தலைவர், இந்தியப் பல்கலைக்கழக
தமிழாசிரியர் மன்றம்)

சமய வளர்ச்சியில் நகரத்தார்

முனைவர் அவ்வை நடராசன் அவர்கள்
(துணைவேந்தர், தஞ்சைத் தமிழ் பல்கலைக்கழகம்)

தமிழ் வளர்ச்சியில் நகரத்தார்

பதிப்புச் செம்மல் முனைவர்
ச. மெய்யப்பன் அவர்கள்

தொழில் வளர்ச்சியில் நகரத்தார்

நன்றியுரை : ப.சா. சிங்காரம்

19-08-94 வெள்ளி

மாலை 6-30 மணி இசைச் சொற்பொழிவு

முன்னிலை : பிரம்மஸ்ரீ சுவாமி சிவானந்தா அவர்கள்
முனைவர் திருமதி சுரசுவதி இராமனாதன்

தலைப்பு : "காவியத்தாயின் இளையமகன்"

| | |
|---|---|
| *இரவு 10-00 மணி* | *சென்னை மாநிலக் கல்லூரி மாணவர்கள் வழங்கும்* |
| | *லட்சுமண் - சுருதி - இசைநிகழ்ச்சி* |
| *இரவு 12-30 மணி* | *பஞ்சமூர்த்திகள் திருஉலாக்காட்சி* |

**மூனறு நாட்களிலும் தேவார திருமுறை இன்னிசை**

*திருமுறைக் கலாநிதி தருமபுரம் சுவாமிநாதன்*

*திருமுறைக் கலாநிதி சிதம்பரம் ஞானப்பிரகாசம்*

*திருமுறைக் கலாநிதி சீர்காழி திருஞானசம்பந்தம்*

*திருமுறைக் கலாநிதி நெய்வேலி இராமச்சந்திரன்*

**நாதசுர இன்னிசை**

| | |
|---|---|
| *தஞ்சாவூர் புதுச்சத்திரம்* | *பி.கே. முத்துவீருசாமி - நாதசுரம்* |
| | பி.கே.எம். பாலமுரளிகிருஷ்ணா - நாதசுரம் |
| | திருமானூர் டி.பி. இராசரெத்தினம் - தவில் |
| | திருச்சி திரு. சீனிவாசன் - தவில் |
| | ஆந்திரா வி. என். பாலச்சந்திரா - சிறப்புத்தவில் |

குறும்பலூர் சிவஞானம் - சிறுவாச்சி யூர் ஜீவானந்தம் - நாதசுரம்

எரகுடி ஆறுமுகம் - குறும்பலூர் நடராசன் - தவில்

**20-08-94 சனிக்கிழமை**

| | |
|---|---|
| *இரவு 7-00 மணி* | பாண்டிச்சேரி ராக சங்கமம் - ஆர்க்கெஸ்ட்ரா |
| *இரவு 10-00 மணி* | "வள்ளி திருமணம்" நாடகம் |

# BHARATHIDASAN UNIVERSITY

## TRICHY

## வாழ்த்துரை

தமிழ்மணம் கமழும் மேலைச்சிவபுரியிலுள்ள அருள்மிகு மீனாட்சி அம்மன் உடனாய சொக்கலிங்கப் பெருமாள் கோயில் திருக்குட மங்கல நன்னீராட்டுப் பெருவிழா 19-08-94 அன்று நிகழவிருப்பதை அறிந்து மணம் மகிழ்கிறேன். ஏறத்தாழ எழுபத்தைந்து ஆண்டு பழமையும் சிறப்பும் வாய்ந்த இத்திருக்கோயிலின் இந்நான்காவது குடமுழுக்குப் பெருவிழா மிகச் சிறப்பாக அமைந்து கலந்து கொள்ளும் மெய்யன்பர்கள் அனைவரும் நலன்கள் பல பெற்று வாழ்வில் சிறப்படைய எல்லாம்வல்ல இறைவனை வேண்டி வாழ்த்துகிறேன்.

டாக்டர் வீர. முத்துக்கருப்பன்
துணைவேந்தர்

---

## ஔவை நடராசன்

துணை வேந்தர்
தமிழ்ப்பல்கலைக் கழகம்
பல்கலை வளாகம், தஞ்சாவூர் - 613 005.

தண்ணார் தமிழ் வளர்க்கும் தனிப்பெரும் புகழ்பெற்ற மேலைச் சிவபுரியில் 75 ஆண்டுகளாக நின்று நிலவும் "அருள் மிகு மீனாட்சி சொக்கலிங்கப் பெருமான்" திருக்கோயிலை முற்றும் புதுவதாக மாற்றிக் கலைநலம் வாய்ந்த கற்சிற்பங்களால் திருப்பணியை வனப்புற நிறைவேற்றிக் குட்முழுக்கு நடத்தியது. நகரத்தார் பெருமக்களின் நல்லுணர்வைக் காட்டுவதாகும். நகரத்தார் பெருமக்கள் இல்லாத வட ஆற்க்காடு மாவட்டத்தில் கூட "கோயில் பழுது என்றால் கூப்பிடு செட்டியாரை" என்ற முதுமொழி வழங்குகிறது. கோயில் திருப்பணியைத் தங்கள் குலப்பணியாகக் கருதும் நகரத்தார் பெருமக்கள் தமிழ் தழீஇய மேலைச்சிவபுரியில் வாழும் உள்ளூர் பெருமக்களிட்த்திலிருந்தே நிதி திரட்டிப் பெரும் பொருட் செலவில் கண்களிக்கக் குடமுழுக்கை நிறைவேற்றியதன் நினைவாக "மலர்" வெளியிடுவது அறிந்து மகிழ்கிறேன். 'என்றும் புலராது, யாணர்நாட் செல்லுகினும் நின்றலர்ந்து தேன் பிலிற்றும் நீர்மையதாய் அறிவார்ந்த திருமலர் மலர்வதாக! என வாழ்த்தி மகிழ்கிறேன்.

# திருப்பணிக்குழு

அ.சொ. அண்ணாமலை செட்டியார் துணைத்தலைவர்

செ.ஆ.சொ. ராமலிங்கம் செட்டியார் பொருளாளர்

ஆ.பழ. ஆண்டியப்ப செட்டியார்

அ.சுப. அண்ணாமலை

கா.சா. சண்முகம் செட்டியார்

ஆறு. முருகப்ப செட்டியார்

வீர.பழ.இராம. பழநியப்ப செட்டியார்

மு. கனகசபை செட்டியார்

# திருப்பணிக்குழு



நா.பழ.அ. தியாகராசன் செட்டியார்



சி. சிவனடியான்



வ.சுப. திருப்பதி செட்டியார்



ப.சா. பழநியப்ப செட்டியார்



கும.பழ. சொ. சண்முகம் செட்டியார்



கரு. சேதுராமன் செட்டியார்



ஆ.நா. உமையாள் ஆச்சி



நா.பழ. ஆறுமுகம் செட்டியார்

## மலர்க்குழு



1. அ.சுப. அண்ணாமலை
மலர்க்குழு தலைவர்



2. டாக்டர். தமிழண்ணல்
கருத்துரைஞர்



3. மு. சேதுராமன் அமைப்பாளர்



4. மா. முத்துராமன் அமைப்பாளர்



5. சுப.மு.ராம. முத்தப்பன்
அமைப்பாளர்



6. வ.சுப.சொ. சொக்கலிங்கம்
அமைப்பாளர்

## மலர்க்குழு



7. ஆறு.சுப. ஆறுமுகம்
அமைப்பாளர்



8. அண.பழ. பழநியப்பன்
அமைப்பாளர்



9. சித. சுப்பிரமணியன்
அமைப்பாளர்



10. பழ. சிதம்பரம் அமைப்பாளர்



11. சுப. அருணாசலம் அமைப்பாளர்



12. மு.அ. ராமநாதன் அமைப்பாளர்

# நன்றிக்குரியவர்கள்



நா. நாகப்பசெட்டியார்



டாக்டர்
வ.சுப. மாணிக்கம்

கும. முத்து. ராம.
பழநியப்ப செட்டியார்



டாக்டர்
ஆ. பழ. முத்தப்பன்



மு.பழ. வள்ளியம்மை
(என்ற) அமிர்தம் ஆச்சி



கோபால் ஆசாரி -
மேலைச்சிவபுரி

S. சண்முக ஸ்தபதி -
காரைக்குடி

கருப்பையா செட்டியார்-
நாட்டரசன் கோட்டை

# மேலைச்சிவபுரி நகரத்தார் புள்ளிகள் விவரம்

| | | |
|---|---|---|
| பிள்ளையார்பட்டி கோவில் | - | 152 |
| இரணிக் கோவில் | - | 14 |
| நேமங் கோவில் | - | 127 |
| வயிரவன் கோவில் | - | 99 |
| இளையாத்தங்குடி கோவில் | - | 52 |
| | | 444 |



ப.சா. சிங்காரம் செட்டியார்
நடப்பு காரியக்காரர்



அண. பழநியப்ப செட்டியார்
நடப்பு உப-காரியக்காரர்

## திருப்பணிக்கு பெரும் நிதி

## வழங்கியவர்கள்



சுப.மு.ராம. முத்தப்பன்



ஆ.நா. உமையாள் ஆச்சி

உ

சிவமயம்

# திருப்பணி வரலாறு

மு.பழ.மு. பழனியப்ப செட்டியார்

தலைவர் - திருப்பணிக்குழு

சைவ சமய நெறியும், தமிழ்மொழி உணர்வும், தழைத்தோங்கும் மேலைச்சிவபுரியில் குடிகொண்டு அருள்பாலிக்கும் "திரு. மீனாட்சி சொக்கலிங்கப் பெருமான்" திருக்கோயில் திருக்குட மங்கல நன்னீராட்டுப் பெருவிழா 19-08-94 தேதி வெள்ளிக்கிழமை மிகச் சிறப்பாக நடைபெற்றது. சிவநெறிச் செல்வர்கள் வெள்ளமென திரண்டு வந்து மகிழ்ந்து திருவருள் பெற்றனர்.

1890ல் திரு மீனாட்சி சொக்கலிங்கப் பெருமாளுக்கு திருக்கோயில் பாலாயமாக அமைக்கப் பெற்றதாக செவி வழிச் செய்திகள் கூறுகின்றன. அதனால் இந்த வழியாகத் தொடங்கி ஒரு நூற்றாண்டுக்கு மேல் ஆகிறது என்பது புலனாகிறது. சைவ ஆகம முறைப்படி திருக்கோவில் கட்டப்பெற்று முதல் கும்பாபிஷேகம் 14-06-22 லும் இரண்டாம் கும்பாபிஷேகம் 27-01-47 லும் நகரத்தார்களால் சிறப்பாக நடத்தப் பெற்றுள்ளன. மூன்றாவது கும்பாபிஷேகத்தை (இந்தியா லெதர் கார்ப்பரேஷன்) திரு. ஆ. நாகப்ப செட்டியார் பொருள் உதவியோடு நகரத்தார்கள் 09-07-1962 ல் சிறப்பாக நடத்தினார்கள். திருக்கோவிலை புதிதாக அமைத்து இப்போது நடைபெற்றது நான்காவது கும்பாபிஷேகமாகும்.

1988-1989ல் காரியக்காரராக இருந்த திரு. பழ. குழந்தைவேலன், திருக்கோயிலை, புதிதாக அமைக்க வேண்டுமென்று குறிப்பிட்டு 16-04-89 ல் எழுதிய கடிதத்தின் அடிப்படையில், 24-04-89ல் ஆலயத்தில் நடைபெற்ற நகரக் கூட்டத்தில் அக்கருத்து ஏற்றுக் கொள்ளப் பெற்றது. திருப்பணி வேலைகளைக் கவனிப்பதற்காக என்னைத் தலைவராகக் கொண்ட மேலைச்சிவபுரி நகரத்தார் நற்பணி மன்றம் தோற்றுவிக்கப் பெற்றது. திரு. அ.சொ. அண்ணாமலை செட்டியார் உப தலைவராகவும் திரு. சொ. ராமலிங்கம் பொருளாளராகவும் மற்றும் பதினான்கு பேர் செயற்குழு உறுப்பினர்களாகவும் தேர்ந்தெடுக்கப் பெற்றனர்.

ஊர் சிறியது, புள்ளிகள் அளவாக உள்ளது, இதனால் பெரும் தொகை சேர்த்து அமைப்பாக கோயிலைக் கட்டி முடியுமா? என்று முதலில் மலைப்பாக இருந்தது. பெங்களூர் கெஞ்சனகெல்வி கைலாச ஆசிரமம் ஜெகத் குரு திருச்சி சுவாமிகள் ஆசியுடன், உபதலைவர் திரு. அ.சொ. அண்ணாமலை செட்டியார், பொருளாளர் திரு. சொ. இராமலிங்கம், செயற்குழு உறுப்பினர்கள், திரு. சி. சிவனடியான், திரு. அண. தியாகராஜன், மற்றும் திரு. சுப்பையா, திரு. ப.சா. சிங்காரம் செட்டியார் போன்ற நண்பர்களுடன் நம்மூர் நகரத்தார்கள் வாழும் ஊர்களுக்கு நிதி தேடிச் சென்றோம். பல நகரங்களிலும் சிற்றூர்களிலும் வாழும் மேலைச்சிவபுரி நகரத்தார்கள்

எங்களை அன்போடு வரவேற்று, விருந்தளித்து, உபசரித்து, நிதிமிகுந்தவர் பொற்குவை வழங்கினர். பலர் தம் வசதிக்கும் மீறித் திருப்பணிக்கு வாரி வழங்கினார்கள்.

01-02-1990 ல் நகரத்தார் குருபீடம், பாதரக்குடி. திரு. ரவீந்திரசுவாமிகள் ஆசியுடன் பாலாலயம் அமைக்கப் பெற்று பழைய கோவில் இருந்த இடத்தில் 07-05-1990 ல் அடிப்படை போட்டு புதிய ஆலயத் திருப்பணி தொடங்கியது.

பிரபலமான கணபதி ஸ்தபதியாரின் சீடரான காரைக்குடி S. சண்முக ஸ்தபதியின் மேற்பார்வையிலும், கண்காப்பிலும் திருக்கோவில் வளர்ந்தது. வேந்தன் படிக் கட்டிடக் கலைப் பொறியியலாளர் திரு. அ. நாகப்ப செட்டியார் தொண்டுள்ளத்துடன் அடிக்கடி வந்து பார்வையிட்டு ஆலோசனைகளை வழங்கி திருக்கோவில் உறுதியாக அமைய உதவினார்கள்.

கருவறை முகமண்டபம் ராஜகோபுரக் கற்களை பூலாங்குறிச்சி திரு. கருப்பையா வேண்டிய போதெல்லாம் நாங்கள் விரும்பிய வண்ணம் ஆர்டர்படி அனுப்பி வந்தார். நிலைகளுக்கும் படிகளுக்கும் உரிய கருங்கற்கள். திருச்சி மாவட்டம் பெரம்பலூரிலிருந்து வந்தன. அவைகள் காரைக்குடிக்கு அனுப்பப்பட்டு, அங்கு கற்கள் வடிவமைத்து 'கோரஸ் பிளான்' எண் வரிசைப்படி வந்து கற்றளி, கருவறைகளும் முகமண்டபமும் ராஜகோபுரப் பகுதியும் படிகளும் நிலைகளும் அமைக்கப் பெற்றது.

திருக்கோயில் முன் உள்ள ஊரணிப் படித்துறைகள் இரண்டு 1937ல் என் தகப்பனார் திரு. மு.பழ.மு. முத்தையா செட்டியார் அவர்களால் உபயமாக கட்டிக் கொடுக்கப்பட்டது. அதில் இருந்த ஒரே கல்லில் வடிவமைக்கப் பெற்ற தனித்தனி கல்யானைகள் நான்கையும் எடுத்து புதுப்பிக்கப் பெற்று ராஜகோபுர முன் வாயிலில் இரண்டு யானைகளும், திருக்கல்யாண மண்டப தென்புற வாயிலில் இரண்டு யானைகளுமாக வைக்கப்பட்டுள்ளன.

ஆலயத்தில் பெரும்பாலும் பழைய விக்கிரகங்களே பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது, பாலமுருகன், துர்க்கை, ராகு, சனீஸ்வரன், சமய குறவர் நால்வர், துவார பாலகர்கள். துவார சக்திகள் ஆகியவை புதிதாக மாமல்லபுரம் திரு. க. மாணிக்க ஆசாரி அழகுற வடிவமைத்துத் தந்து பிரதிஷ்டை செய்யப் பெற்றுள்ளது.

மாமல்லபுரம் திரு. எம்.பி.எஸ். முத்தழகு ஸ்தபதி கோபுரப் பொம்மைகளையும் திருமிகு மீனாட்சி அம்மன் திரு உருவத்தையும், கண்கவரும் விதத்தில் படைத்துள்ளார். திருக்கோயில் கதவுகளில் பதிக்கப்பட்டுள்ள தெய்வத் திருவுருவப் பொம்மைகளை மாமல்லபுரத்திலிருந்து செய்து வந்து பதிக்கப்பட்டுள்ளது கமலக்கட்டைகள் காரைக்குடியில் செய்யப்பெற்றது. மற்ற கதவு வேலைகள். கொடிமரம் முதலிய தச்சு வேலைகளை மேலைச்சிவபுரி திரு. மாணிக்க ஆசாரியும், அவர்மகன் திரு. பழனியப்ப ஆசாரியும் நயமுறச் செய்துள்ளனர். வர்ணம் பூசும் வேலைகளை சீர்காழி திரு. ஜி.கே. ரவி குழுவினர் கலையுணர்வுடன் நல்ல முறையில் செய்தார்கள்.

இப்படி பல கலைஞர்களின் ஒருமுகமான கூட்டு முயற்சியில் இந்த ஆலயம் சிறப்பாக உருவானது. இவர்களுடன் இந்த திருக்கோயில் நகரக் கோயில் போல பெருங்கோயிலாக மலர, பல அன்புள்ளங்கள் தொண்டு மனத்துடன் எனக்குத் துணை நின்று அரும் பணிகள் பல ஆற்றியுள்ளனர். அவர்களை எல்லாம் இந்த நேரத்தில் அன்புடனும் நன்றியுடனும் நினைவு கூர்ந்து பாராட்டுவது என் கடமையாகிறது.

மூன்றாவது கும்பாபிஷேகத்தை முன்னின்று நடத்திய 'பத்மஸ்ரீ' திரு. ஆ. நாகப்ப செட்டியார் அவர்களின் துணைவியார் திருமதி உமையாள் ஆச்சி இத்திருக்கோயில் முன் மண்டபத்திற்குரிய தொகை முழுவதையும் கொடுத்து உதவியுள்ளார்கள்.

கோவில் பணிகள் தொய்வு ஏற்பட்ட போதெல்லாம் உடனிருந்து ஓமங்கள் நடத்தி அருட்செல்வர்கள் பால் நல்லாசி பெற்று, தளர்ச்சி நீக்கி, மலர்ச்சி பெற உதவிய திரு. ரமா. ராமமுத்தப்பன் அவர்கள் கேட்காமலேயே திரும்பத் திரும்பப் பலமுறை பெரும் தொகை நிதி வழங்கியுள்ளார்கள்.

இங்கு கணிசமான நிதி அளித்ததோடு வெளிநாட்டில் உள்ள தம் மக்கள் மூலம் மறுபடியும் பெரும் நிதி அளித்த திரு. ஆ.மு.பழ.ஆ. பழனியப்ப செட்டியார் அவர்களின் நல்லுள்ளம் சிறப்பானது.

உள்ளூர் பணியில் விரைவாக வேலைகள் நடைபெற உதவியும் எந்த நேரத்திலும் தங்கு தடையின்றி வந்து பார்த்தும் உபதலைவர் திரு. அ. சொ. அண்ணாமலை செட்டியார் அவர்கள் பெரிதும் உதவினார்கள். நிதிவசூல், மலர் விளம்பர வசூலில் மிகுந்த அக்கறை செலுத்தி பல ஊர்களுக்கும் சென்று நிதி வசூலைத் தூண்டி ஊக்கம் அளித்து கும்பாபிஷேகப் பணிகளிலும் பொருளாதார நெருக்கடி நேரங்களிலும் உதவியாக இருந்த பொருளாளர் திரு. சொ. இராமலிங்கம் சேவை மிகப் பெரியது. நிதி வசூலுக்கு எங்கும் துணை வந்து பொருள் வேண்டிய நேரங்களிலும் உதவி செய்தும், திருக்கோயில் தொடர்பான வெளியீடு, எதுவானாலும் உடனுக்குடன் அச்சாக்கி தொண்டு மனத்துடன் குழு உறுப்பினர் 'அண்ணாமலை பிரிண்டர்ஸ்' திரு. அண. தியாகராஜன் செய்து தந்தார்கள்.

நிதி வசூலில் மிகுந்த அக்கறை காட்டி திருப்பணி வேலைகளுக்கும் பொருளாளர் திரு. சொ. ராமலிங்கம் பணிகளுக்கும் உடனிருந்து எந்த நேரத்திலும் எங்கும் செல்லத் தயாராக முன் வந்த உறுப்பினர் திரு. சி. சிவனடியான் தொண்டு சிறப்பானது.

குழு உறுப்பினர், சைலம் வாழ் வீர. பழ. ராம. பழனியப்பன் பல விதங்களில் ஆலோசனை கூறியும் மலர் விளம்பர வசூலில் மிகுந்த ஈடுபாட்டுடன் அக்கரை எடுத்தும் உடன் வந்தும் உதவினார்கள். கதவுகளுக்கு வேண்டிய இரும்பு அச்சுகள் தயாரிப்புக்கும், பணியிலும் வர்ணம் போன்ற ஆலயப் பணிகளுக்கும் திரு. சுப்பையா உதவினார்கள்.

மதுரையில் திருப்பணி சம்பந்தமான சாமான்கள் வாங்குவதற்கு எந்த நேரத்திலும் உறுதுணையாக இருந்து திரு. கா.சா.கா. சாமிநாதன் உதவினார்கள். ராம. முத்தப்பன் மகன் பொறியியலாளர் திரு. மு. ராமனாதன் மார்பிள் கல் பதிக்கும் வேலைகளையும்

வர்ண வேலைகளையும் கண்காணித்து வேண்டியவைகளை எடுத்துக் கூறி அவை சிறப்புற அமைய உதவினார்கள். கோவில் திருப்பணி வேலைகளுக்கு உதவியாக இருந்து வெளிநாடுகளில் உள்ளவர்களோடு கடிதத் தொடர்பு கொண்டு பெருநிதி வர பாடுபட்ட திரு. கதி. நடராஜன் செட்டியார் அவர்களின் நற்பணி போற்றத்தக்கது. திரு ஆ. ராம. சுப்பையா உள்ளூர் கும்பாபிஷேக புள்ளி வரி முதல் மற்ற வசூல் பணிகளை நிறைவாக சுறுசுறுப்பாக செய்து தந்தார்கள்.

வேந்தன்பட்டி. திரு. கும. முத்து ராம. பழனியப்ப செட்டியார் அவர்கள் ஸ்தபதிக்கு இணையாக ஆலோசனை கூறியும் கருங்கல் வேலைகள் செய்வோர்க்கு ஆலோசனை கூறி, கற்பணிகள் திருத்தமுற அமைவதற்கும் அரும்பணியாற்றினார்கள். பிள்ளையார்பட்டி திரு. பிச்சைக்குருக்கள் அவர்கள் யாகசாலைப் பொறுப்பேற்று தெய்வீக மணம் கமழ பாராட்டும் முறையில் நடத்தி தந்தார்கள்.

பல திருக்கோயில் கும்பாபிஷேகங்களை நடத்தி பெரிதும் அநுபவம் பெற்ற நாட்டரசன் கோட்டை திரு. உ. கருப்பையா செட்டியார் அவர்கள் உடன் இருந்து தேவைகளை முன்னதாகவே எடுத்துக் கூறி உதவியதுடன் அவசரப் பணிகள் பலவற்றை அவர்களே ஏற்பாடு செய்து பொறுப்பாக இருந்து நடத்தி தந்தார்கள்.

திரு. சிங்கப்பூர் மு.அ. ராமனாதன் கும்பாபிஷேக ஏற்பாடுகளிலும், யாகசாலை நிர்வாகத்திலும் அல்லும் பகலும் அயராது உழைத்து அரும்பணியாற்றினார்கள்.

திருக்கோயில் பணிகளில் திரு. மு. கனகசபை செட்டியார், திரு. நா.அ.சுப. அண்ணாமலை செட்டியார், திரு.பி.அ.ராம.அ. சுந்தரம் ஆகியோர் உழைப்பினால் ஆலயம் சிறப்புற அமையப் பணியாற்றினார்கள்.

ஆலயத்தின் கோபுரங்கள், கதவுகள், தனவரிசை மார்பிள் கற்கள், பரிவார தெய்வங்களின் உட்சுவற்றின் மார்பிள்கள், நால்வர், நடராஜர், பைரவர் கோயில் அமைப்புகள் கோயில்மணி, மின்விளக்குகள் போன்ற பலவற்றையும் நல்லுள்ளமும் ஆன்மீக உணர்வும் கொண்ட பல் பெரியவர்கள் தாமே பொறுப்பேற்று உபய திருப்பணியாகச் செய்து கொடுத்துள்ளார்கள்.

மேலைச்சிவபுரியிலுள்ள, பிள்ளையார்பட்டிக் கோவில். இரணிக்கோயில், நேமங்கோயில், வைரவன் கோவில். கிளையாற்றங்குடி கோவில், நகரத்தார்கள் கும்பாபிஷேகப் பணிகளில் பொறுப்பேற்று செவ்வனே நிறைவேற்றித் தந்தார்கள்.

திருக்கோயில் பேரளவில் வளர வளர முன் நிதி வழங்கிய பேருள்ளம் கொண்ட அன்பர்கள். மேலும் மேலும் நிதி வழங்கி கோயில் பணி தடையின்றி நிறைவு பெற உதவினார்கள் மேலும் மேலைச்சிவபுரி வாழ்நகரத்தார்கள் கும்பாபிஷேகத்தின் போது நான்கு நாட்களும் இயலிசை நாடக நடனங்களை ஏற்பாடு செய்து மக்களை மகிழ்வித்தார்கள்.

மலர்க்குழு தலைவராகப் பொறுப்பேற்ற திரு. அசுப. அண்ணாமலை செட்டியார் அவர்கள் அயராது உழைத்து அழகான மலரை வெளிக் கொணர்ந்திருக்கிறார்கள்.

மலருக்கு சென்னை வாழ் நகரத்தார்களில், ஏ. ஞானம், ந. சாமிநாதன், கரு. ராமனாதன், மா. தொல்காப்பியன், அ. சிதம்பரம், பழனியப்பா பெரிய கருப்பா முதலானோர்கள் அயராது உழைத்து, பெரும் பொருள் தந்து ராஜகோபுரம் கட்டும் பணிக்கு ஒரு நிலைக்கு பொருளுதவியும் செய்தார்கள். மேலும் மதுரையில் கரு. சேதுராமன், இராம ஆண்டியப்பன், மு.அ. ராமனாதன், சிவகாசி ஆவி. ஆண்டப்பன் பழனி சோம. சுப்பையா , தஞ்சாவூரில் நா. மெய்யப்பன், கடலூரில் தே. நாகப்பன், பாண்டிச்சேரியில் அண. நாகப்பன், அ.சொ.அ. சொக்கலிங்கம், கோயம்புத்தூரில் மு. கருப்பையா, சி. சாத்தப்பன், ராம. கதிரேசன், சேலத்தில் ராம. பழனியப்பன், சா. செந்தில்நாதன், பழ. லெட்சுமணன், ஆறு. சண்முகம், திருச்சிராப்பள்ளியில் சா. சிங்காரம், திரு. சுப்பையா, அண.மு. வள்ளியம்மை ஆச்சி, கரூரில் மேலை பழனியப்பன் ஆலங்குடியில் ராம.சுப. முத்துராமன், எர்ணாகுளத்தில் அ.சொ. சிவப்பிரகாசம் ஆகிய நம்மூர் அன்பர்கள் குடமுழுக்கு விழா சிறப்பாக நடைபெற மலர் விளம்பரங்களுக்கு பெரிதும் முயன்று நிதி சேகரித்துத் தந்தார்கள்.

எல்லாவற்றிற்கும் மேலாக சிறப்பான ஒன்றைக் குறிப்பிடுவதில் பெருமை கொள்கிறேன். மேலைச்சிவபுரியில் பிறந்த பெண் மக்கள் பிறந்த மண்ணைப் பெரிதாக நினைத்து திருப்பணிக்கு ஏராளமான நிதியை மனமுவந்து தாராளமாக வழங்கி திருக்கோயில் தலை நிமிர்ந்து ஓங்க உதவிய உளப்பாங்கு என்றும் நெஞ்சார நினைவு கூறத்தக்கது.

இன்னும் பல நல்லுள்ளங்கள் என் கண்களாகவும், கரங்களாகவும் சிந்தனைகளாகவும் இயங்கி இக்கோவில் இவ்வளவு சிறப்பாகவும் கம்பீரமாகவும் அமையப் பெரிதும் உதவினார்கள். அவர்களையெல்லாம் இந்தப் பொன்னான நேரத்தில் நெகிழ்வோடு நினைந்து அன்போடு நன்றி கூறுகின்றேன்.

24-04-1989ல் நடைபெற்ற திருப்பணிக் குழு அமைக்கப் பெற்ற கூட்டத்தில் யான் தலைமைப் பொறுப்பேற்கத் தயங்கிய போது என்றும் உறுதுணையாக இருந்து திருப்பணி நடைபெற உதவியாக இருப்பதாகக் கூறிய திரு. அ.சொ. அண்ணாமலை செட்டியார், திரு.சொ. ராமலிங்கம் திரு. அண. தியாகராஜன், திரு.சி. சிவனடியான், திரு. ராம. முத்தப்பன், முதலானவர்கள் கூறியபடியே செயலாற்றித் தந்ததற்கு என் நெஞ்சார்ந்த நன்றியையும் பாராட்டுக்களையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

தெய்வபக்தியும், வள்ளல் தன்மையும் ஒருங்கிணைந்த நன் மனம் கொண்ட மேலைச்சிவபுரி நகரத்தார் பெருமக்களுக்கும், உதவிக்கரம் நீட்டிய எல்லோருக்கும் மீனாட்சி சொக்கலிங்கப் பெருமான் திருவருள், என்றும் துணை நின்று, நல்லருள் புரிய வேண்டுமாய்ப் பிரார்த்திக்கிறேன்.

# விநாயகர்

ஆற்றங் கரையமர்ந்து அன்னைபோல் பெண்பார்த்து
வீற்ற பெருமான் விநாயகனே - ஏற்றமிகு
மேலைச் சிவபுரியார் மேன்மை யுடன் நாளும்
வாழக் கருணை வழங்கு.

தந்தையுடன் தாயைத் தனியாய் வலம் வந்து
சொந்தமெனக் கொண்டாய் சுவைக்கனியை - கந்தனுக்கு
மூத்த கணபதியே மூஷிக வாகனனே
காத்து அருள்வாய் கனிந்து.

அள்ளித் தருகின்ற ஆனை முகன்தன்னை
சொல்லித் தினமும் தொழுதக்கால் - வல்வினைகள்
நில்லாமல் ஓடும் நிருமலனின் கண்பார்வை
இல்லாமல் வேறொன் றிலை.

நெஞ்சினில் உன்நாமம் நித்தமும் வைத்திட்டால்
அஞ்சல் ஒருபோதும் வேண்டாவாம் வெஞ்சினமும்
ஓடி ஒளிந்து விடும் உள்ளம் களிகூறும்
பாடி உனைத் தொழுதக் கால்.

குன்றில் உருவாகிக் கொண்ட திருவீசர்
என்றும் கருணை புரிந்திடவே - நின்றதொரு
பிள்ளையார் பட்டிப் பெருமைமிகு கற்பகமே
எல்லையிலா இன்பம் அருள்.

*கவிஞர். கரு. இராமநாதன் B.Sc.,*
*மேலைச்சிவபுரி*



# மலர்க்குழு

**தலைவர் : அ.சுப. அண்ணாமலை**

மலர்க்குழுத் தலைவராக என்னை நியமித்து இவ்வரிய பொறுப்பினை தந்த மேலைச்சிவபுரி நகரத்தார்களுக்கு எனது நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

கோயில் திருப்பணிக்கு நமது ஊர் நகரத்தார்களும், நமது ஊர் பிறந்த பெண் மக்களும் தோன்றாத் துணையாய் உள்ள மீனாட்சியின் பால் பேரண்பு கொண்டு பெரும் பொருள் கொடுத்துவிய கொடையாளர்களுக்கு திருப்பணிக் குழு உறுப்பினர் என்ற முறையில் எனது நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

மலருக்கு கருத்துரைஞர் பொறுப்பேற்று எனக்கு அவ்வப் பொழு து நன்கு உதவிய உயர்திரு. டாக்டர். தமிழண்ணல் அவர்களுக்கும் எனது நன்றியினை தெரிவித்துக் கொள்கிறேன்.

இம்மலருக்கு பல கவிதைகளும், கட்டுரைகளும், செய்தி தொகுப்புகளும் கொடுத்துதவிய பெருமக்களுக்கு என் நன்றி உரித்தாகுக.

மலர்குழு அமைப்பாளர்கள் அந்த அந்த ஊர்களில் பெரும் அளவில் விளம்பரம் சேர்த்தமைக்கு எனது நெஞ்சம் நிறைந்த நன்றியை அவர்களுக்கு தெரிவித்துக் கொள்கிறேன்.

திருப்பணிக் குழுத் தலைவர், உயர்திரு. மு.பழ.மு. பழநியப்ப செட்டியார் அவர்கள் இம்மலரில் திருப்பணி வரலாறு பற்றி விரிவாக கூறியிருக்கிறபடியால் மேலும் விரிப்பது மிகை என கருதி திருப்பணிக் குழுவினர், மலர் குழுவினர், நகரத்தார்கள் ஒல்லும் வகையான் உதவி செய்த எல்லோருக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மலர் சிறப்பாக வெளிவர எனக்கு உதவிய அச்சக உரிமையாளர் பாபு ஜோல் அவர்களுக்கும் என் நன்றி.

விளம்பரங்கள் இல்லையென்றால் குடமுழுக்கு விழா சிறப்பு மலர் ஏது? மலருக்கு விளம்பரங்கள் கொடுத்துதவிய நல்ல உள்ளங்களுக்கும், மலர் மலரும் வரை பொறுமை காத்து உதவிய அன்பு உள்ளங்களுக்கும், என்றும் எனது நன்றி உரித்தாகுக.

# கணபதி

விக்கினங்கள் தீர்த்து வினைகளையே வேரறுத்து
எக்கணமும் நல்லருள் செய் எம் இறையை, - மக்கள்
சிறப்புயர்த்தி மேலைச் சிவபுரியை என்றும்
புரக்கும் கணபதியைப் போற்று.

# சொக்கலிங்க பெருமான்

மாப்பிள்ளைச் சொக்கர் மதுரை நகர் வீட்டு
பூப்போன்ற உள்ளத்தார் போற்றவே - காப்பாய்
மேலைச்சிவபுரியை மேவி அமர்ந்தனரே
காலைக் கதிராய்க் கவர்ந்து.

# மீனாட்சி

கோல விழியால், குறுநகையால் காக்கின்ற
மேலைச் சிவபுரியின் மீனாட்சி - காலடியில்
தஞ்சம் புகுவோம்! தலையாலே வந்திப்போம்.
நெஞ்சம் குடிகொள்வள் நேர்.

# முருகன்

புள்ளி மயிலமர்ந்து, வள்ளி தெய்வயானையுடன்
வள்ளல் முருகன் வரம் தரவே உள்ளூறும்
செந்தமிழ்க்காய் மேலைச்சிவபுரியைத் தான் விரும்பி
வந்தமர்ந்தான் சீரடியை வாழ்த்து!

**புலவர் மு. சேதுராமன்**
மேலைச்சிவபுரி

# மேலைச்சிவபுரியில் ஒரு தமிழ்க் கோயில்

**(சன்மார்க்க சபையும் – கணேசர் செந்தமிழ்க் கல்லூரியும்)**

**(ப.சா. சிங்காரம்)**

நாட்டுக்கோட்டை நகரத்தார் பெருமக்கள் பாடல் பெற்ற தலங்களை மாபெரும் கற்றிறாப் பணிகளாக அமைத்து உலகப் புகழ் பெற்றவர்கள் அவர்கள் ஆர்வம் கல்வித் துறையில் ஈடுபடுவதற்கு ஒரு திருப்புமுனையாக, தூண்டுகோலாக எழுந்ததே, மேலைச்சிவபுரி சன்மார்க்க சபை எனலாம்.

1901ல் பாண்டித்துரைத் தேவர் மதுரையில் தமிழ்ச் சங்கம் அமைத்தார். அதுபோல் செட்டிமார் நாட்டில் ஒரு சங்கம் அமைத்து முறையாக தமிழ் வளர்க்க வேண்டுமென திட்டமிட்டார் மகிபாலன்பட்டி மு. கதிரேசச் செட்டியார். அவர் தம் நல் எண்ணத்திற்கு மேலைச்சிவபுரி வாழ் வா.பழ.சா. பழனியப்ப செட்டியாரும் அவர் இளவல் அண்ணாமலை செட்டியாரும் உதவ முன் வந்தனர். இம் முப்பெரியார்களின் கூட்டுறவால் 1909 ல் சன்மார்க்க சபை தோன்றியது. சபையின் ஆண்டு நிறைவு விழாக்கள் பெரும் தமிழ் விழா போல கொண்டாடப் பெற்றது. அதில் தமிழகப் பெரும் புலவர்கள் அனைவரும் வந்து கலந்து சிறப்புச் செய்தனர். இதனால் செட்டி நாடு முழுதும் தமிழ் உணர்வு பெருக்கெடுத்தது. செட்டிநாட்டில் இன்று காணும் தமிழ் அறிவுப் பெருக்கத்துக்கு இச்சபையே விளைநிலம் எனலாம்.

சபையின் சிறப்பான அங்கம் கணேசர் செந்தமிழ்க் கல்லூரியாகும். இலக்கண இலக்கியப் பயிற்சியை நல்ல அடிப்படையில் போதித்து தமிழ் அறிஞர்களாக அவர்களை ஆக்கி நாடெங்கும் நல்ல தமிழ் பரப்ப வேண்டும் என்பதே அதன் முதன்மை நோக்கம் 1909ல் தொடங்கி இன்றளவும் அப்பணி பெருகி வளர்ந்து வருகிறது. முதலில் பண்டித வகுப்புக்களும் 1941 முதல் வித்வான் வகுப்புக்களும் நடைபெறுகின்றன. நாடெங்கும் இருந்து மாணவ, மாணவியர் நூற்றுக்கணக்கில் வந்து கல்வி பயில்கின்றனர்.

மாணவ மாணவியர்க்கு தனித்தனி நல்விடுதிகளும் சிறப்பான வகுப்பறைகளுமாக கல்லூரி திகழ்கிறது. இங்கு பயின்ற மாணவர்கள் நாடெங்கும் தமிழ்ப் பேராசிரியர்களாகத் திகழ்வதே இக்கல்லூரியன் தரத்தை எடுத்துக் காட்டுவதாக இருக்கிறது.

தமிழ்நாட்டின் தலைசிறந்த தமிழ்க் கல்லூரி இதுவே என நாடு போற்ற பீடு நடையுடன் பொலிகிறது. இங்கு B.Litt. M.A. M.Phil. வகுப்புகள் நடைபெறுகின்றன. மாலை நேரக் கல்லூரியாக B.A. B.Sc. வகுப்புகள் தொடங்கப் பெற்றுள்ளது.

இங்குள்ள 'தொல்காப்பியனார் நூல்நிலையம்' அரிய பல நூல்களைக் கொண்டது. தொல்காப்பியருக்கு நாட்டில் ஏற்பட்ட முதல் நினைவுச் சின்னம் இதுவே எனலாம்.

மு. கதிரேசனாருக்கு 1927ல் டாக்டர் உ.வே. சாமிநாதையா தலைமையில் 'பண்டிதமணி' என்ற பெரும் பட்டத்தை இச்சபை வழங்கிப் பெருமை பெற்றது.

பண்டிதமணியாரின் சுக்கிரநீதி. மண்ணியல் சிறு தேர். திருவாசக உரைகள் ஆகிய நூல்களை சபை வெளியீடு செய்து வருகிறது.

இந்திய நாட்டின் தலைசிறந்த தோல் வணிக மேதை பத்மஸ்ரீ. ஆ. நாகப்ப செட்டியார் பெரிய மாணவர் விடுதியையும் மகி பாலன்பட்டி சி. ராம ராமசாமி செட்டியார் மாணவியர் விடுதியையும் சபைத் தலைவர்களான. பழ. சாமிநாதன் செட்டியார் கல்லூரி வகுப்பறைகளையும் பழ. சிதம்பரம் செட்டியார் தொடக்கப்பள்ளி கட்டிடங்களையும் நன்கொடையாக கட்டிக் கொடுத்துள்ளனர்.

கோட்டையூர் பெருமகன் அ.க.அ.சித. அழ. சிதம்பரம் செட்டியார் அவர்கள் காலத்தால் செய்த பெருங்கொடை சிறப்பாக குறிப்பிடத்தக்கது. சிங்கப்பூர் மலேசியா வாழ் தமிழன்பர்கள் சபையின் வளர்ச்சிக்கு பெருந்தொகை வழங்கியுள்ளார்கள்.

சபை தோன்றிய நாள் முதல் 45 ஆண்டுகள் பண்டிதமணி அவர்கள் பேணிக்காத்து வந்தார்கள். அவர்களுக்கு பிறகு அவர் மாணாக்கர் மூதறிஞர் வ.சுப. மாணிக்கனார் 35 ஆண்டுகள் வழி நடத்தி சபைக்கும் கல்லூரி வளர்ச்சிக்கும் நல்ல அடிப்படைகளை அமைத்துள்ளார். இப்போது டாக்டர் தமிழண்ணல் அவர்கள் அப்பொறுப்புகளை நன்கு கவனித்து வருகிறார்கள்.

தோன்றிய நாள்த் தொட்டு இன்று வரை சபையையும் கல்லூரியையும் வ.பழ.சா. குடும்பத்தாரே பொறுப்புடன் கவனித்து வருவது சிறப்பாக குறிப்பிடத்தக்கதாகும்.

சபையின் தமிழ்த் தொண்டு விரிக்கின் பெருகும். அதன் வரலாறு தனி நூலாக எழுதப்படவேண்டியதொன்று. நகரத்தார் பெருமக்களின் தமிழ் உணர்வுக்கு மேலைச் சிவபுரி சன்மார்க்க சபையே தக்க நினைவுச் சின்னமாக திகழ்கிறது எனலாம்.

சபையின் தொண்டு வளர்க! வாழ்க

உ

சிவமயம்

**திருபணிக்கு நன்கொடை வழங்கிய மேலைச்சிவபுரி நகரத்தார்கள்**

1. மு.பழ.மு. பழனியப்ப செட்டியார்
2. சுப.மு.ராம. முத்தப்ப செட்டியார்
3. ஆ. நாகப்ப செட்டியார் மனைவி உமையாள் ஆச்சி
4. அ.சுப. அண்ணாமலை செட்டியார்
5. ஆ.மு.பழ.ஆ. பழனியப்ப செட்டியார்
6. ஆ.மு.பழ.ஆ.பழ. முத்தப்பன்
7. கா.சா. காளியப்ப செட்டியார்
8. வ.சுப. திருப்பதி செட்டியார்
9. வ.சுப. சொக்கலிங்கம் செட்டியார்
10. அண.மு. கனகசபை செட்டியார்
11. கதிர்நடராசன் செட்டியார்
12. அண.மு.கன. தண்ணீர் மலை
13. முத்து. மு. நாகப்ப செட்டியார்
14. தே.வி. தேனப்ப செட்டியார்
15. தே.வி. சாமிநாதன் செட்டியார்
16. அண.மு.மா. சேதுக்கரசி ஆச்சி
17. வ.பழ.சா. குடும்பத்தினர்
18. அ.சொ. குடும்பத்தினர்
19. சொ.க.மு.அண.அண. ருக்மணி ஆச்சி
20. செ.ஆ.சொ. இராமலிங்கம்
21. பழ.கரு. சுப்பிரமணியன் செட்டியார்
22. முரு.பழ. பழனியப்ப செட்டியார் (முருகுமணி)
23. அ.சொ. அண்ணாமலை செட்டியார்
24. வீர.பழ.ராம. பழனியப்ப செட்டியார்
25. முரு.ஆறு. குடும்பத்தினர்

26. அண. முத்துராமன் செட்டியார்

27. மு. ராம. முத்துக்கருப்பன் செட்டியார்

28. கும.பழ.சொ. சண்முகம் செட்டியார்

29. ராம.ஏ. ஞான பண்டிதன்

30. கும.பழ.சொ.ச. நாச்சியப்பன்

31. நா.பழ.அ. தியாகராசன் செட்டியார்

32. ஆ.பழ.சி. சிவனடியான்

33. சுப.மு.அ. சுப்பிரமணியன்

34. ஆ.பழ. சொக்கலிங்கம் செட்டியார்

35. பழ.நா. சுந்தரம்

36. கரு. கணபதி செட்டியார்

37. மு.நா.பழ. ஆறுமுகம் செட்டியார்

38. பி.அ.மு.சா. செந்தில்நாதன்

39. பி.அ.மு.சோம. சுப்பையா

40. மு.ஆ. ஏகப்ப செட்டியார்

41. ஆ.பழ.ராம. பழனியப்ப செட்டியார்

42. சி.ஆ.சி.தே. உமையாள் ஆச்சி

43. கரு.பழ. சண்முகம் செட்டியார்

44. ஆ.பழ.ராம. ஆண்டப்ப செட்டியார்

45. ராம.மு. சேதுராமன் செட்டியார்

46. கரு.தே. தேனப்ப செட்டியார்

47. பெரி. பழனியப்பா பெரிய கருப்பா

48. மு.சே. முத்துராமன்

49. மு.சே. சுப்பிரமணியன்

50. மு.சே. இராமனாதன்

51. ஆ. ஆவிச்சி செட்டியார்

52. அழ.சொ. பழனியப்ப செட்டியார்

53. ஆ. மங்களம் ஆச்சி

54. மு. ராம. முத்துராமன் செட்டியார்

55. கரு.பழ.ச. கதிரேசன்

56. ஆராம. சுப்பையா செட்டியார்

57. சுப.மு.அ. முத்துராமன்

58. சுப.முரு. ஆறுமுகம்

59. ர.கும. இராமநாதன்

60. சித.சா. தியாகராசன் செட்டியார்

61. ஆ.மு.ராம. முத்தப்ப செட்டியார்

62. வீர.பழ. சோமசுந்தரம் செட்டியார்

63. அண. பழனியப்ப செட்டியார்

64. க. ஜெயங்கொண்டான் செட்டியார்

65. கரு.தே.தே. நாகப்பன்

66. சு.நா. நாகப்ப செட்டியார்

67. மு.அ. இராமநாதன் செட்டியார்

68. வீர.பழ.ராம. ஆண்டியப்ப செட்டியார்

69. ஆராம. பழனியப்ப செட்டியார்

70. மு.கரு. சுப்பையா செட்டியார்

71. கரு.மு. சொக்கலிங்கம் செட்டியார்

72. கதி.மா. சுந்தரம் செட்டியார்

73. சோம. சுந்தரம் செட்டியார்

74. கரு. சிவலிங்கம் செட்டியார்

75. ராம.ஏ. ராமநாதன் செட்டியார்

76. பழ.ஆறு. பழனியப்பன்

77. ராம.ஏ. சந்திரசேகரன்

78. பழ.ஆறு. பெரியண்ணல்

79. ஆ.பழ.ராம. ஆண்டியப்ப செட்டியார்

80. கும.ஏ. குமரப்பன்

81. கரு. இராமநாதன்

82. கரு. வெற்றிச் செல்வன்

83. ஆ.பழ. ஆண்டியப்ப செட்டியார்

84. சொ.ப. சொக்கலிங்கம் செட்டியார்

85. அண.மு. நாகசுந்தரம்

86. மு. நாகப்பன்

87. அண.மு. முத்தையா செட்டியார்

88. மு.நா.பழ. ராமசாமி செட்டியார்

89. சா. அண்ணாமலை செட்டியார்

90. இராம. கதிரேசன் செட்டியார்

91. மு.கரு. முத்துராமன் செட்டியார்

92. மு.கரு. கதிரேசன் செட்டியார்

93. பழ.சுப. பழனியப்ப செட்டியார்

94. கும.பழ.சுப.பழ. சுப்பிரமணியன்

95. வ.சுப.மா. தொல்காப்பியன்

96. வ.சுப.மா. பூங்குன்றன்

97. நா.அ.சுப.அண. பழனியப்ப செட்டியார்

98. வ.அண.வ. தியாகராசன் செட்டியார்

99. ஆ.பழ.சொ. பஞ்சநதம்

100. வ.பழ.சா.பழ. சிதம்பரம் - கண்ணன்

101. ஆ.ராம.சுப. முத்துராமன்

102. ஆ.பழ. சுந்தரம் செட்டியார்

103. தே.ராம. முத்தையா செட்டியார்

104. தே.நா.க.மு. நாகப்ப செட்டியார்

105. சு.நா.சு.மு. மங்கை ஆச்சி

106. வ.ந.வ. நல்லப்பன்

107. மு.ம. அண்ணாமலை

108. அரு.சுப. இராமசாமி செட்டியார்

109. கரு. லெட்சுமணன்

110. மா. சுப்பிரமணியன்

111. சித.இராம. சொக்கலிங்கம்

112. ம. சுந்தரம்

113. மு.குமந. அழகப்பன்

114. கா.சா. சொக்கலிங்கம் செட்டியார்

115. ஆறு.சுப. ஆறுமுகம் செட்டியார்

116. முத்து.மு.நா. அண்ணாமலை செட்டியார்

117. அ.மு.பழ.மெ.மு. வள்ளியம்மை ஆச்சி

118. அண. சொக்கலிங்கம் செட்டியார்

119. கா.சா. கணேசன்

120. கரு. சேதுராமன் செட்டியார்

121. வெ.பழ.லெ. பழனியப்பன்

122. வ.அண.கா. சிங்காரம் செட்டியார்

123. வ.அண.சி. வள்ளியப்பன்

124. வ.அண.சி. சாத்தப்பன்

125. அரு.சுப. அருணாசலம் செட்டியார்

126. அ.சே. சேதுராமன் செட்டியார்

127. சுப.அரு. சுப்பையா

128. நா.பழ.அ.சி. அண்ணாமலை

129. நா.பழ.சி. பழனியப்பன்

130. கதி.ந. சாமிநாதன்

131. தே.ராம. முத்துராமன்

132. அ.ச.சி. கணேசன் & அண்ணாமலை

133. கரு. செல்வராமு

134. அ.விசு. பழனியப்பன்

135. அ.பழ. இராமநாதன்

136. லெ.லெ. குடும்பத்தினர்

137. வ.சுப.மா. பாரி

138. சுப.மு.ச. முத்தப்பன்

139. நா.மு.மா. இளங்கோவன்

140. அருகு.சொ. பழனியப்பன்

141. நா.அ.சுப.அ. நாகப்பன்

142. நா.அ. நாகப்பன்

143. மு.மா. செல்வமணி

144. சா. சிவராமன் செட்டியார்

145. மு.மா. பாண்டியன்

146. வ.அண.கா.கி. முத்தையா

147. ராம.சுப. வெள்ளையன் செட்டியார்

148. நா.அண.சுப. முத்துராமன்

149. அண. பெரிய முத்தையா செட்டியார்

150. ஆ. சிவராமன்

151. மா. முத்துராமன் செட்டியார்

152. தே. ராம. சிவகுமார்

153. முத்து.சுப.மு. வள்ளியம்மை ஆச்சி

154. நா.அ.சுப.அண. பழனியப்பன்

155. அண. பரமேசுவரி ஆச்சி

156. தேராம. ராசு ஆச்சி

157. அ.சே. அன்னபூரணி ஆச்சி

158. சி.குபழஅ. தியாகராசன் செட்டியார்

159. சொ.ப. சிவப்பிரகாசம்

160. பி.அ.மு.ராம. மகாலிங்கம் செட்டியார்

161. ஆ.பழ.ராம. மெய்யப்பன்

162. கருபழ.சுப. பழனியப்பன் - செந்தில்

163. கு.சொ.அரு. சொக்கலிங்கம் - லெட்சுமணன்

164. பழ.சி.சொ. அழகப்பன்

165. சி.ஆ. சேதுச் செட்டியார்

166. அ.விசு. முருகப்ப செட்டியார்

167. ஆ.மு.பழ.மெ. சிங்காரம் செட்டியார்

168. ராம.பொ. சண்முகம்

169. ஆ.கரு.ஆ. நாகப்பன்

170. மு.நா.பழ. அண்ணாமலை செட்டியார்

171. அண.மு. சண்முகம் செட்டியார்

172. ஆ.பழ. சொக்கலிங்கம் செட்டியார்

173. அண. சின்னமுத்தையா செட்டியார்

174. முத்து சு.மு. சுப்பையா

175. சுப. ராம. சுப்பையா

176. ரயில் முத்து சு. முத்துக்கருப்பன் செட்டியார்

**மேலைச்சிவபுரியில் பிறந்த பெண்மக்களின் நன்கொடை**

| | |
|---|---|
| மு.பழ.மு. அலமேலு மாணிக்கவாசகம் | வலையப்பட்டி |
| சொ.சுப. ராசாமணி ஆச்சி | புதுப்பட்டி |
| சிவ.ந. ஜானகி ஆச்சி | வலையப்பட்டி |
| ஜெ. நாகம்மை ஆச்சி | வலையப்பட்டி |
| ராம.ம. நாகம்மை ஆச்சி | வலையப்பட்டி |
| பழ. அழகம்மை | வேந்தன்பட்டி |
| பழ.அ. கல்யாணி | புதுப்பட்டி |
| வள்ளியம்மை நாச்சியப்பன் | கண்டவராயன் பட்டி |
| அலமேலு பழனியப்பன் | புதுப்பட்டி |
| Rm.S. கண்ணம்மை ஆச்சி | உலகம்பட்டி |
| பழ.நா. மங்கை ஆச்சி | வேந்தன்பட்டி |
| கும.மு.ராம. ராமாயி ஆச்சி | வேந்தன்பட்டி |
| கும.நா.மா. உண்ணாமலை | வலையபட்டி |
| முரு.மெ. இந்திரா என்ற ராமாயி ஆச்சி | வலையப்பட்டி |
| கும.மு. சொர்ணம் ஆச்சி | வேந்தன்பட்டி |
| மெ.ராம. அங்கம்மை ஆச்சி | வலையப்பட்டி |
| ஆறு.வீர.கா. ஞானாம்பாள் ஆச்சி | புதுப்பட்டி |
| சோம.பழ. ஆனந்தி ஆச்சி | வேந்தன்பட்டி |
| சரஸ்வதி நாச்சியப்பன் | வலையப்பட்டி |

| | |
|---|---|
| கண்ணம்மா திருப்பதி | கண்டவராயன்பட்டி |
| N. கருப்பையா பாப்பா | உலகம்பட்டி |
| P.R. சொக்கலிங்கம் நாச்சம்மை | நெற்குப்பை |
| டாக்டர் கும. கல்யாணி | புதுப்பட்டி |
| கும.முத்து.ராம.திரு. ராமாயி ஆச்சி | வேந்தன்பட்டி |
| சொ.லெ. வள்ளியம்மை ஆச்சி | நெற்குப்பை |
| சே.ராம. சித்ரா | உலகம்பட்டி |
| நா. அழகு மீனாள் | வலையபட்டி |
| தெ.மரு. வசந்தாள் ஆச்சி | நெற்குப்பை |
| ராம. வள்ளியப்பன் | கண்டவராயன்பட்டி |
| T.S. இராமாயி ஆச்சி | நெற்குப்பை |
| ராம.சே. உமையாள் ஆச்சி | உலகம்பட்டி |
| ப.கா.அ.பழ.சுப. இன்பவல்லி ஆச்சி | புதுப்பட்டி |
| து.சுப.மு. வள்ளியம்மை ஆச்சி | வலையபட்டி |
| கதி.லெ. கண்ணம்மை | பூலாங்குறிச்சி |
| சுப.தி.லெ. விசாலாட்சி | நெற்குப்பை |
| மு.நா.சே. வள்ளியம்மை ஆச்சி | வலையபட்டி |
| சி.கரு.ராம.சித. சேதுக்கரசி ஆச்சி | புதுப்பட்டி |
| அழகப்பா சேது ஆச்சி | வேந்தன்பட்டி |
| அரு.தி.தெய்வானை ஆச்சி | நெற்குப்பை |
| சி.ராம. உண்ணாமலை | உலகம்பட்டி |
| RM. அடைக்கப்பன் மீனாட்சி | புதுப்பட்டி |
| சி.பெரி.மு.சி. பாப்பாயி ஆச்சி | புதுப்பட்டி |
| சி.பெரி. விசாலாட்சி ஆச்சி | செவ்வூர் |
| மெ.மு.ச.சு. கமலம் ஆச்சி | புதுப்பட்டி |
| கு.மு.ராம.மு. நாமகிரி ஆச்சி | வலையபட்டி |
| S. சிவசுப்பிரமணியம் மரகதவல்லி | வலையபட்டி |
| PL.V. சொ. மீனாட்சி ஆச்சி | பூலாங்குறிச்சி |

| | |
|---|---|
| ராம.அ. மீனாட்சி ஆச்சி | வலையபட்டி |
| மா. கல்யாணி | கொப்பனாபட்டி |
| அழ.சு.முரு. தெய்வானை ஆச்சி | பூலாங்குறிச்சி |
| Rm.SP. சிவகாமி ஆச்சி | நெற்குப்பை |
| சுப.நேரு. தில்லை ஆச்சி | நெற்குப்பை |
| மெ. வள்ளியம்மை ஆச்சி | வலையபட்டி |
| ராம.மெ. மீனாட்சி ஆச்சி | வேகுப்பட்டி |
| பழ. முருகு பழனியப்பன் அலமேலு | வேந்தன்பட்டி |
| ஆ.பழ.ராம. மகள் ராமாயி | மேலைச்சிவபுரி |
| ராம. அழகு மீனாள் | வேந்தன்பட்டி |
| மா.தி. கல்யாணி | குழிபிறை |
| மு.ராம.அ.சி. நாகம்மை | வலையபட்டி |
| சே.அண. வள்ளிக்கண்ணு | நெற்குப்பை |
| சொ.கரு.சொ. மகள் கோதை ஆச்சி | வலையபட்டி |
| வடு.கும. தேன்மை ஆச்சி | வலையபட்டி |
| பழ.ராம. சிட்டாள் ஆச்சி | வலையபட்டி |
| அலமேலு PL.A. சிதம்பரம் | வலையபட்டி |
| AN.Rm.A. சாந்தி | வலையபட்டி |
| நா.கும.நல.சோம. நல்லம்மை ஆச்சி | வேந்தன்பட்டி |
| அரு.சுப.செ.தி. மீனாட்சி ஆச்சி | வேந்தன்பட்டி |
| மெ.மா.பழ. வாசுகி ஆச்சி | வேந்தன்பட்டி |
| பழ.சோம.பழ. தெய்வானை ஆச்சி | வேந்தன்பட்டி |
| வள.செ.கா.சொ. மீனாட்சி ஆச்சி | புதுப்பட்டி |
| கும.நா. சொர்ணம் ஆச்சி | புதுப்பட்டி |
| சே.ராம. ராமனாதன் | உலகம்பட்டி |
| ஏ.மு.ராம.அ. தேனம்மை ஆச்சி | வலையபட்டி |
| வெ.ராம.வெ. வள்ளியம்மை | வேந்தன்பட்டி |
| ஏ.ராம. அலமேலு | வலையபட்டி |
| பெரி.கன. சரசு ஆச்சி | நெற்குப்பை |

| | |
|---|---|
| நா.முரு. வள்ளியம்மை | குழிபிறை |
| ந.மோ. வள்ளியம்மை | வேந்தன்பட்டி |
| லெ.நா. முத்தாத்தாள் ஆச்சி | வேந்தன்பட்டி |
| மா. மீனாட்சி ஆச்சி | கொப்பனாபட்டி |
| சுப. தேனம்மை ஆச்சி | வலையபட்டி |
| குழ. சா. மீனாட்சி ஆச்சி | கொப்பனாபட்டி |
| அ.செ. சிட்டுக் கலாவதி | வலையபட்டி |
| பெரி.வெ.சிவ. சௌந்திரம் ஆச்சி | வேகுப்பட்டி |
| SP. L. தேனம்மை ஆச்சி | கொப்பனாபட்டி |
| L.S. ராமாயி ஆச்சி | பூலாங்குறிச்சி |
| ஆ.ராம.சுப. மணிமேகலை | வேகுப்பட்டி |
| மு.பழ. சின்னம்மாள் ஆச்சி | வேந்தன்பட்டி |
| ப.சா.சி. நாகம்மை ஆச்சி | மேலைச்சிவபுரி |
| PL.K. பழனியப்பன் சித்ரா | வலையபட்டி |
| பி. முருகன் அன்னபூரணி | வேந்தன்பட்டி |
| மெ.நா.மெ. ராமாயி ஆச்சி | வலையபட்டி |
| பி.நா.லெ. பாப்பாயி ஆச்சி | வேந்தன்பட்டி |
| நா. வள்ளியம்மை ஆச்சி | கல்லல் |
| சுப.சே. ருக்குமணி ஆச்சி | கொப்பனாபட்டி |
| சொ. வள்ளியம்மை | பனையபட்டி |
| ராம.சொ.மா. நாச்சம்மை | பள்ளத்தூர் |
| வ.அண.மு. மக்கள் அன்பழகு, சுசீலா, லலிதா, விஜயா, முத்து | வலையபட்டி |
| பெரி.ராம. அலமேலு ஆச்சி | வலையபட்டி |
| செ.அ.தி. மீனாட்சி ஆச்சி | வலையபட்டி |
| வ.சுப. தெய்வானை | உலகம்பட்டி |
| M.A. தனலட்சுமி | வேந்தன்பட்டி |
| M.S.V. புனிதா | புதுப்பட்டி |

| | |
|---|---|
| தெ.சு.சொ.சுப. அலமேலு ஆச்சி | நெற்குப்பை |
| VDK. முத்துச் செல்வி | வலையபட்டி |
| SP.Rm. ராஜாமணி ஆச்சி | உலகம்பட்டி |
| கு.அ.சொ.ராம. மீனாட்சி | வலையபட்டி |
| PR.S.PL. கலையரசி | நெற்குப்பை |
| D.M. விசாலாட்சி ஆச்சி | கொப்பனாபட்டி |
| சி.சுப. செந்தாமரை சுப்பையா | வலையபட்டி |
| சுப.ஆறு. தெய்வானை ஆச்சி | வேந்தன்பட்டி |
| அரு. மீனாட்சி ஆச்சி | வேந்தன்பட்டி |
| சே.லெ. கல்யாணி லெட்சுமணன் | வேகுப்பட்டி |
| குழ.ராம.மெ. வள்ளியம்மை | புதுப்பட்டி |
| நா.சுப. சிவ. கமலம் | உலகம்பட்டி |
| அ.ராமாயி ஆச்சி | செவ்வூர் |
| மெ.ராம. விஜயா | பூலாங்குறிச்சி |
| அரு.லெ.சே. சேது ஆச்சி | நெற்குப்பை |
| நா.சே. விசாலாட்சி ஆட்சி | வலையபட்டி |
| நா.சே.நா. கல்யாணி ஆச்சி | வலையபட்டி |
| மு. ராமசாமி கண்ணாத்தாள் | மேலைச்சிவபுரி |
| M. லதா முத்துக்கருப்பன் | வலையபட்டி |
| சி.ராம.சி.லெ. அங்கம்மை ஆச்சி | வேந்தன்பட்டி |
| சுப.சே.க. சரோஜா ஆச்சி | கண்டவராயன்பட்டி |
| வ.ராம.சி.மு. சுப்பு முத்து மீனாள் | குழிபிறை |
| கா.பழ.சே. மீனாட்சி ஆச்சி. | குழிபிறை |
| ராம.சோ. மீனாட்சி ஆச்சி | வேகுப்பட்டி |
| சொ. நாச்சம்மை ஆச்சி | நெற்குப்பை |
| சோம.ந. சிவகாமி ஆச்சி | வலையபட்டி |
| சுப.ராம. மணிமேகலை | வலையபட்டி |
| AN. SP. வெங்கடாசலம் ராமாயி | ஒ. சிறுவயல் |

| | |
|---|---|
| கண.ராம. ராமசாமி மீனாட்சி | வேந்தன்பட்டி |
| வெ. சாத்தப்பன் வள்ளியம்மை | வேந்தன்பட்டி |
| சுப.ஆறு. தெய்வானை ஆச்சி | வேந்தன்பட்டி |
| M. பிரேமா | வேகுப்பட்டி |
| சுப.அழ. உமையாள் ஆச்சி | கண்டவராயன்பட்டி |
| கதி. அண்ணாமலை தேனம்மை | பூலாங்குறிச்சி |
| கரு.பழ. நடராசன் சொர்ணம் | வலையபட்டி |
| N. சுந்தரராமன் வள்ளியம்மை | நச்சாந்துபட்டி |
| சு. செந்தில் நாதன் வள்ளிமயில் | ஆ.தெக்கூர் |
| ராம.சுப.மு.சுப. சுப்பிரமணியன் சிட்டாள் | வலையபட்டி |
| டாக்டர் மணிமேகலை | வலையபட்டி |
| MR. சிவகாமி ஆச்சி | வலையபட்டி |
| நா.சுப.சுப. ராமாயி | உலகம்பட்டி |
| ந. சோமசுந்தரம் அமுதா | உலகம்பட்டி |
| M. குமரப்பன் பாப்பாயி ஆச்சி | பூலாங்குறிச்சி |
| ராம.வ. ராமசாமி விசாலாட்சி | வலையபட்டி |
| சுப.சி.சுப. உமையாள் சுப்பிரமணியன் | புதுப்பட்டி |
| Rm.PL. பழனியப்பன் - மரகதம் | புதுப்பட்டி |
| மு.செ. வாசுகி செந்தில்நாதன் | வலையபட்டி |
| ராம.அரு. சரஸ்வதி ஆச்சி | நெற்குப்பை |
| சி.த. ஏகம்மை ஆச்சி | புதுப்பட்டி |
| SP. ராமனாதன் சிட்டுக்கலாவதி | புதுப்பட்டி |
| ப.அ. சரவணன் வள்ளிமயில் | வி. லட்சுமிபுரம் |
| சுப.அ. அண்ணாமலை அலர்மேலு | வலையபட்டி |
| பழ. லெட்சுமணன் செட்டியார் | வேந்தன்பட்டி |
| S. ருக்குமணி ஆச்சி | குழிபிறை |
| G. சரஸ்வதி ஆச்சி | நெற்குப்பை |
| மு.சொ. மகள் அழகம்மை ஆச்சி | வலையபட்டி |

| | |
|---|---|
| வயி. தெய்வானை | வலையபட்டி |
| தே.நா.நா. இலக்குமணன் செட்டியார் | உலகம்பட்டி |
| வீர.பழ.சுப. சிங்காரம் செட்டியார் | கண்டவராயன்பட்டி |
| அண. நாகப்பன் மீனாட்சி | வேந்தன்பட்டி |
| நா. ராமசாமி அழகு மீனாள் | வேந்தன்பட்டி |
| நா. திருச்செல்வம் கல்யாணி | குழிபிறை |
| முத்துப்பழனியப்பன் லதா | பனையப்பட்டி |
| அழ. சுப்பிரமணியன் தனலட்சுமி | ஆ. தெக்கூர் |
| வி. வயிரவன் மீனாட்சி | மிதிலைப்பட்டி |
| Rm. நாச்சியப்பன் விஜயலட்சுமி | குழிபிறை |

**தனி நன்கொடைகள்**

| | |
|---|---|
| அரு.மு.ராம. பெரிய கருப்பன் (தமிழண்ணல்) | நெற்குப்பை |
| Km. ஆறுமுகம் செட்டியார் | குழிபிறை |
| தி. சிதம்பரம் செட்டியார் | நெற்குப்பை |
| Rm, சுப்பையா செட்டியார் | வலையபட்டி |
| மெ.பழ. மரகதவல்லி ஆச்சி | வேந்தன்பட்டி |
| பழ.சே. சிவானந்தம் செட்டியார் | வேந்தன்பட்டி |
| Rm. முத்து பழனியப்பன் வள்ளியம்மை | வேந்தன்பட்டி |

# மலர்க்குழு

தலைவர் : அ. சுப. அண்ணாமலை

கருத்துரைஞர் : டாக்டர். தமிழண்ணல்

## மலர்க்குழு அமைப்பாளர்கள்

1. மு. சேதுராமன் செட்டியார்
2. புலவர். மா. முத்துராமன்
3. சுப.மு. ராம. முத்தப்பன்
4. வ.சுப. சொக்கலிங்கம் செட்டியார்
5. ஆறு. சுப. ஆறுமுகம்
6. அண. பழனியப்பன் (சுரூர்)
7. சித. சுப்பிரமணியன்
8. சித. சிதம்பரம்
9. சுப. அருணாசலம்
10. மு.அ. இராமனாதன்
13. மா. பாண்டியன்
14. ஆ.பழ. சுந்தரம்
15. மு. சுந்தரம்
16. சா.அழ. சாமிநாதன்
17. சே. சுப்பிரமணியன்

## மலர்க்குழு உறுப்பினர்கள்

### சென்னை

1. ராம. பழனியப்பன்
2. ஏ. ஞான பண்டிதன்
3. ந. சுவாமிநாதன்
4. க. ஜெயம் கொண்டான்
5. மா. தொல்காப்பியன்
6. சொ. பழனியப்பன்
7. அண. சிதம்பரம்
8. ந. அழகப்பன்
9. சு.நா. நாகப்பா
10. கரு. ராமனாதன்
11. சர். பழ. சாமினாதன்
12. மு. சுப்பிரமணியன்

### பழனி

1. சோம. சுப்பையா
2. ராம.மு.க. முத்துராமன்
3. ராம.மு.மு. ராமசாமி
4. அ.சொ. குமரப்பன் - கோவில்பட்டி

### பாண்டிச்சேரி

1. முரு.பழ. பழனியப்பன் (முருகமணி)
2. அண. பழனியப்பன்
3. அ.சொ.அண. சொக்கலிங்கம்

1. அ.சொ. நமச்சிவாயம் - ஹைதராபாத்
2. அ.சொ. சிவப்பிரகாசம் - எர்ணாகுளம்

### கோயம்புத்தூர்

1. சி. சாத்தப்பன்
2. சுப. பழனியப்பன்
3. கரு.சுப. குமார்
4. எம். கருப்பையா
5. எம். ராஜா
6. ராம. கதிரேசன்

### தஞ்சாவூர்

1. நா. முத்தையா
2. நா. மெய்யப்பன்
3. அ.சொ.தி. சொக்கலிங்கம்
4. நா. நாகராஜன்
5. சுப. கணேசன் - பேராயூரணி
6. முரு. ஆறுமுகம் - ஒரத்தநாடு
7. க. சாமினாதன் - கும்பகோணம்
8. நா. அண்ணாமலை
9. ஆ. செந்தில் - பேராவூரணி

### திருச்சி

1. திரு. சுப்பையா
2. டாக்டர். சொ. சேதுராமன்
3. மு. பழ. முத்தையா
4. எஸ்.எம். சுந்தரம்
5. அண. முத்துராமன் செட்டியார்
6. தி. முத்தக்கருப்பன்
7. சா. சிங்காரம்
8. ஆர்.எம். சேதுராமன்
9. கரு. சுப்பையா
10. ராம. சொக்கலிங்கம்
11. மேலை பழனியப்பன் - கரூர்
12. ச. கதிரேசன் - கரூர்

### புதுக்கோட்டை

1. ஆ. முத்துராமன்
2. ஆ. முருகப்பன்
3. சி.ஆ.தே. சின்னையா (தியாகராஜர்)
4. சுப. சேது (ராமசாமி)
5. மு. நாகப்பன்
6. சுப.அரு. சுப்பையா
7. மா. சொக்கலிங்கம்
8. சுப. முத்துராமன் - ஆலங்குடி

### ஈரோடு

1. எஸ். செந்தில்நாதன்
2. முரு. அண்ணாமலை
3. ஆறு. அண்ணாமலை
4. ஆ. நாகப்பன்
5. பழ. ராமசாமி
6. பழ. லெட்சுமணன்
7. கரு. செல்வ ராமு
8. தி. ராமனாதன்

### கடலூர் திருக்கோவிலூர்
### விழுப்புரம்

1. தே. நாகப்பன்
2. அண. பழனியப்பன்
3. மு.அண. சுப்பிரமணியன்
திருக்கோவிலூர்
4. மு.அண. முத்துராமன் -
திருக்கோவிலூர்
5. சொ. பஞ்சநாதன் - விழுப்புரம்
6. மா. சுந்தரம் - விழுப்புரம்
7. கரு. கணபதி - விழுப்புரம்
8. ஆறு.சுப. ஆறுமுகம் - விழுப்புரம்

### மதுரை, சிவகாசி

1. வீர.பழராம. ஆண்டியப்பன்
2. கா.சா.கா. சாமிநாதன்
3. பழ. ராமசாமி
4. லெ.லெ. ராமநாதன்
5. ஏ.கும. ராமநாதன்
6. ராம. முத்தப்பன்
7. கா. ஆண்டப்பன் - சிவகாசி
8. அ.சொ. தில்லைநாதன் - சிவகாசி
9. மு.அ. ஏகப்பன் - வத்தலகுண்டு
10. மு. நாகசுந்தரம்

# அன்னையே! அருள்வாயம்மா!

'பாக்கனி' மேலை பழனியப்பன்

*சைவமும் தமிழும் தம்மிரு கண்களாய்*
*வையம் போற்ற வளர்க்கும் சிவபுரியில்*
*அன்னை மீனாட்சி அருள்மிகு சொக்கேசர்*
*ஆலயத்தின் குடமுழுக்கு ஆவணி மூன்றின்று*
*நன்மார்க்க நெறியாம் சன்மார்க்க நெறியோடு*
*சபை நிறுவி தமிழ் வளர்த்து*
*அவை சிறக்கும் அறிஞர்களைத் தந்து*
*மூத்தமிழ் வளர்ப்பிலே முன்நிற்கும் சிவபுரி*
*வேலவன் முருகனின் சேவடி துதிக்கவே*
*காவடிகள் கூடிவர கால்நடையாய் பழநிக்கு*
*பக்தியுடன் செல்லுதலோ சிவபுரிக்குத் தனிச்சிறப்பு*
*மாமதுரைக்கு அடுத்த மாபெரும் புகழோடு*
*பிட்டுக்கு மண்சுமக்கும் பெரு விழாவும்*
*மட்டிலா சிறப்பொரு மற்ற பல விழாக்களும்*
*அன்னை ஆலயத்தில் அனுதினமும் நடந்திடுமே!*
*கண்ணான திருப்பணிக்கு கணக்கின்றி வழங்கியே*
*அன்னை அருள்பெறும் அத்தனை வள்ளல்களும்*
*எண்ணியது நிறைவேறி ஏற்றம் பெற்றிடவே*
*அமிழ்தினியே அம்மையே! அருள் மழை*
*பொழிவாயம்மா!*
*பெண்மக்கள் நன்கொடையும் பெருமனதாய் தந்தே*
*நல்மமனத்தார் குழுவினரின் நல்உழைப்பும் மிகுந்தே*
*கண்வியக்கும் கற்பணியாய் பளிங்கு திருப்பணியாய்*
*விண்ணெட்டும் கோபுரமும் வியத்தகு வேலைப்பாடும்*
*அற்புதமாய் அமைந்துள்ள ஆலய குடமுழுக்கில்*
*முன்நின்று உழைத்தவர்கள் முத்தாய்ப்பாய் நிதிதந்தோர்*
*தரணி புகழ் ராசராசன் தரணிக்குத் தந்தது போல*
*திருப்பணிக்கு உதவிட்டோர் திகழ்ந்திடுவோர்*
*பெருமையுடன்*
*இறைத்தொண்டை ஏற்றிடுவோர் மிகுந்திடுவோர்*
*சிறப்பினிலே*
*அருள்மிகுந்த அம்மையுமே அருள்வளமும் கூட்டிடுவாள்!*

# கோயிற்கலைகள்

**மூதறிஞர். செம்மல் டாக்டர் வ.சுப. மாணிக்கம்**

கலைகள் அறுபத்து நான்கு என்பது பொது வழக்கு. இந்த எண்ணிக்கையை ஒரு தொகையாகக் கொள்ள வேண்டும். இதன் வகையும் விரிவும் காலந்தோறும் பெருகிவரும். எண்ணிக்கைக் கணக்கைப் பெரிதுபடுத்த வேண்டியதில்லை. கலைகள் எப்படி உருவாகின்றன? மக்கட்குத் தரும் பயனென்ன? இவற்றை எங்ஙனம் காத்துப் போற்ற வேண்டும்? திருக்கோயில்கட்கும் கலைகட்கும் நெருங்கிய பிணைப்பு எத்தகையது? இவ்வகையில் கருத்துக்களை விளக்கிக் கொள்வது பெரும்பயனாகும்.

நம் மூதாதையர்களின் பெருமையையும், வழிவழித் தழைத்து வந்த தமிழ்க் கலைகளின் பண்பினையும், இக்கலைகளை இன்றும் உயிர்ப்பாகக் காத்து வரும் திருக்கோயில்களின் அமைப்பினையும் நாம் தெள்ளத் தெளிவதால், நம்மையறியாமலே நமக்குள் ஒரு புத்துணர்ச்சியும் பற்றுணர்ச்சியும் பாய்ந்தோடுமல்லவா? ஊனும் உடையும் மக்கட்கு உயிரல்ல; ஒழுக்கமும் உணர்ச்சியுமே மக்கட்கு உயிர்மெய். பழமையை அறிவது தற்பெருமைக்கன்று, மடிந்திருப்பதற்கும் அன்று. நம் முன்னோர்கள் ஓவியத்தில், காவியத்தில், இசையில் , கூத்தில், பரதத்தில், தாளத்தில், ஆடையில், அணிகலத்தில், உண்டியில், ஊர்தியில் , கல்லில், செம்பில், அம்மம்ம, எவ்வளவோ நுண்ணிய கலைத்திறன்களைப் படைத்தவர்கள் என்று அறியும்போது, அந்த வழியில் தோன்றியவர்கள் நாம் என்று உணரும்போது, அந்த உணர்வால் புதிய உரம் பெறுகின்றோம்; புத்தாக்கத்தில் ஈடுபடுகின்றோம்; மேலும் தமிழ் நாகரிகத்தை வளர்க்கின்றோம்.

**திருக்கோயில்**

தமிழ் நாகரிகக் கலையெல்லாம் தொக்கியிருக்கும் பொதுவிடம் திருக்கோயிலாகும். ஒரு சிற்றூர்க் கோயிலை நுழைந்து பார்த்தாற்கூட, உட்சுற்று புறச்சுற்று தலமரம் கொடிக்கம்பம் தூண்வடிவு புடைச்சிற்பம் சரவிளக்கு கற்படிமம் செப்புப்படிமம் கல்வெட்டு நாகசுரம் மேளதாளம் பூப்பலி பூசைமுறை மணியோசை தெய்வ ஊர்திகள் சிறு தேர்கள் பல்லக்குகள் எனப் பல கலை வடிவங்கள் நம் கண்முன் தோன்றுகின்றன. ஒரு சிறு கிராமத்துக்கு விழாக்காலங்களிற் சென்றால், கரக ஆட்டம், காவடியாட்டம், பொய்க்கால் குதிரையாட்டம், மயில்,குயிலாட்டம், உடுக்கடி, உறியடி, தெருக்கூத்து, தோற்கூத்து, பள்ளு குறத்தி குறவன் நடனம் எனப் பலவகைக் களிக்கலைகளைக் காண்கின்றோம். இக்கலைகள் சிறுவர், பெரியோர் பெண்கள் கிழவிகள் கற்றோர் கல்லார் எல்லார்க்கும் ஒத்த மகிழ்வைத் தருகின்றன. ஒருநாள் விழாவாக இருந்தாலும் ஊர்க்கோயில் ஆரவாரமான மகிழ்வைத் தருகின்றது. சிறு கிராம மக்கள் எங்கெங்கோ இருந்து கூட்டு வண்டி கட்டிக்கொண்டு பெண்டு பிள்ளைகளோடு வந்து விழாக்களைக் கண்டு குலவி தம்மை மறந்து ஈடுபடுவதைக் காணலாம். இக் கூட்டுறவால் சமுதாயப் பொதுமையும் மனிதவுறவும் பெருகுகின்றன.

தனியொருவன் அரண்மனை எவ்வளவு பெரியதாக இருந்தாலும், அவன் நீரல்படவும் நிறைபடவும் அங்கு வைத்திருக்கும் கலைச்செல்வங்கள் எத்துணை அருமைப்பாடு உடையனவாக இருந்தாலும், ஒரு பெருஞ்செல்வன் வீட்டில் சிறப்பு நிகழ்ச்சிகள் மிகப்பெரிய செலவில் கொண்டாடப் பெற்றாலும் அவை பொது மக்கட்குக் கோயில் விழாவும் கோயிற்கலைகளும் தரும் கட்டுப்பாடற்ற எழுச்சியையும் விழுப்பத்தையும் தருவதில்லை. ஊர்க்கோயில்களால் ஒன்று கூடிக் களித்தாடும் பெரும் பயன் இருப்பதால் தான், நம் முன்னோர்கள் ஊர்தோறும் கோவில் வேண்டுமென்ற சமுதாய நோக்கை வலியுறுத்தினர். கோயில் இல்லாத ஊர் மக்கள் குடியிருப்புக்கு ஆகாது என்பது அவர்தம் எச்சரிக்கை. திருக்கோயில் இல்லாத ஊரைத் திரு இல்லாத ஊர் எனவும், அவ்வூர் ஓர் ஊரா? விலங்குகள் உறையும் அடவி காடாம் எனவும் அப்பரடிகள் பழித்துப் பாடினர். அதனாலன்றோ தமிழ் மக்கள் நிலங்கடந்து திரைகடலோடி எந்நாட்டுக்குச் சென்றாலும் குடியிருக்குமிடத்து ஒரு கோயில் காண்பதை வழக்காகக் கொண்டிருக்கின்றனர். முன்பு கீழைநாடுகளில் பரவிய ஞான்றும் திருக்கோயில்கள் கட்டினர். இப்போது மேனாடுகள் சென்ற நிலையினும் கற்றளிகள் எடுக்கின்றனர். காரணம் என்ன? திருக்கோயில்களே தமிழ்க்கலைகளின் திருவிடங்கள். “நமது நாட்டுக்கோயில்கள் தத்துவங்களின் ஓவியங்கள்” என்று எடுத்துக்காட்டினார் தமிழ்த் தென்றல் திரு.வி.க. “மக்கள் துங்கம் உயர்ந்து வளர்கெனக் கோயில்கள் சூழ்ந்ததும் இந்நாடே” என நம் கோயில் வணக்கத்தைப் பாடினார் பாரதியார்.

**எது கலை?**

கோயிற்கலைகட்கும் புறக்கலைகட்கும் பொருளால் வடிவால் வேறுபாடு இல்லெனினும், மனவடிப்படையில் பார்வை நோக்கில் - பயன்கொள் முறையில் வேறுபாடு உண்டு. குழந்தைகட்கும் ஞானிகட்கும் உலகம் ஒரு கலைப் பொருள். “இவ்வானும் குவலயமும் எல்லோமும் காத்தும் படைத்தும் சுரந்தும் விளையாடி” என்ற திருவாசகக்கப்படி, இறைவனுக்கோ அண்டங்களெல்லாம் ஆடு கலைப் பொருள்கள்.

இயற்கை, செயற்கையெனக் கலை இருவகைப்படும். தாமே தோன்றுமவை இயற்கை எனவும் மனிதன் தோற்றுபவை செயற்கை எனவும் பெரும்பாலும் வகுத்துக் கொள்ளலாம். மரம் செடி கொடி விலங்கு போல மானிடமும் இயற்கைப் பொருளே, எனினும் பிற இயற்கைகட்கு இல்லாத ஒரு தனியாற்றல் மனிதவினத்துக்கு உண்டு. மனிதன் வேண்டிய வேண்டியாங்கு தொல்லூழிக்காலமாகச் செயற்கைப் பொருட்களை ஆக்கிக்கொண்டு வருகின்றான். இச்செயலாக்கத்தால் கலை வகைகள் உலகெங்கும் கோடி கோடியாகப் பெருகி வரக் காண்கின்றோம். இன்றைய அறிவியற் படைப்பெல்லாம் மனித அறிவு கண்ட கலைச்செல்வங்கள்.

இறைவன் படைத்த பொருளாயினும், மனிதன் ஆக்கிய பொருளாயினும் எதற்கும் ஒரு வடிவுண்டு. அதற்குத்தக ஓர் அழகுண்டு. கலையுணர்வும் அழகுணர்வும் எல்லார்க்கும் ஒன்றாக இருப்பதில்லை, இருக்க வேண்டும் என்பதில்லை. அதனாலன்றோ உடைகளும் உணவுகளும் நுகர்பொருள்களும் வடிவங்களும்

பலப்பலவாயின. ஒருவர்க்குப் பிடித்ததுதான் கலையென்றோ பிடியாதது கலையில்லை என்றோ கொள்ள முடியாது. காலங் கடக்கக் கடக்க, பழமை மெருகு ஏற ஏற, தொல்பொருளெல்லாம் விலைமதிக்க முடியாத, அருங்காட்சிக் கலைப்பொருளாய்ப் போற்றி உலகெங்கும் காக்கப்படுவதை நாம் அறிவோம். பதினாயிரம் ஆண்டுக்கு முற்பட்ட ஒரு வண்ண மட்பாண்டத்திற்கு, பயன்பட்ட அக்காலத்து இருந்த மதிப்பைவிட, இன்று கவின் மதிப்பும் காப்பும் பெரிதாகின்றது. ஆதலின் எதுவும் கலையேயாம், என்றும் கலையேயாம். எனினும் ஒன்று நினையின்; எல்லாம் கோயிற் கலையாகி விடா.

**எது கோயிற்கலை?**

உலகியற்கலை வேறு; கோயிற்கலை வேறு. ஒரு கல்லைச் சித்திரத்தூணாக, வடிவமைந்த படிக்கட்டாக, வனப்பான யானையாக. சந்தனக் கல்லாக வடிக்கின்றோம். ஒரு மரப் பகுதியை, இருக்கும் அழகிய நாற்காலியாக, அழகொழுக எழுதும் மேற்பலகையாக, திருவாழ் நிலையாக. ஓவியத் தடியாக உருக்கொடுக்கின்றோம். விலையழகும், கலையழகும் இவற்றில் உண்டு. பொலிவு மிக்கவனாக இருந்தாலும் இவற்றைக் கைகூப்பித் தொழுவோமா? பூப்பலி செய்து வணங்குவோமா? செய்யோம். ஏன்? இவை தெய்வவூட்டம் பெற்றவையல்ல. தெய்வவுணர்வைத் தருவனவல்ல. இவற்றை நாம் பார்க்கும்போதும் பயன்படுத்தும் போதும் புறக்கலையாகக் காண்கின்றோமேயன்றித் தெய்வக்கலையாக காண்பதில்லை. அதனால் நம் உள்ளம் தெய்வத் தன்மை பெறுவதில்லை.

பொருள் எதுவாயினும் ஆகுக, எப்பொருளில் தெய்வம் உண்டென நாம் நம்பிக்கை கொள்ளுகின்றோமோ, எப்பொருள் தெய்வ நம்பிக்கையை நமக்கு வளர்க்கின்றதோ, அது, அதுவே கோயிற்கலை அல்லது கடவுட்கலை எனத் தெளிவோமாக. எல்லாப் பொருளும் கோயிற்கலை ஆகலாம். எப்போது? அவை தெய்வத் தன்மையாக நம் உள்ளம் மதிக்கும்போது. தெய்வத்தன்மை என்பது என்ன? மனிதன் தன்னினும் ஓர் உயர்ந்த பொருளுண்டு என்று எண்ணும் போதும், இறை எனப்படும் அவ்வுயிர்ப் பொருள் தன்னை முழுதும் இயக்குகின்றது என்று உணரும்போதும், எப்பொருளும் அவன் வடிவு என்று தெளியும்போதும் தெய்வப்பண்பு பெறுகின்றான். எனவே கோயிற்கலை என்பது தெய்வக்கலை; தெய்வக்கலை என்பது உள்ளக்கலை. அதனாலன்றோ ‘உள்ளம் பெருங்கோயில்’ எனவும் ‘அகமலாற் கோயிலில்லை எனவும்’ தெய்வச் சான்றோர் தெளிவுறுத்தினர்.

**இசைக்கலை**

கோயிற்கலையின் உட்பண்பை அறிந்த நாம் அப்பண்பினை வளர்க்கும் கலைகளையும் அவற்றைப் பயன் கொள்ளும் நெறிகளையும் வழிவழி வந்த வழக்காறுகளையும் மேன்மேலும் நம் வாழ்வு தெய்வப் பொலிவு பெறும் எண்ணங்களையும் காண்போம். இலக்கியம், ஓவியம், சிற்பம், இசை, பறை, பரதம் , நடனம், நாடகம், ஆட்டம், ஒப்பனை, கட்டிடம், பூந்தோட்டம், படிமம், தேரியம் முதலான கலைகள் கோயில்களில் நிரம்ப இடம் பெற்றிருந்தாலும் இசைக் கலைக்குத்

தனி முதன்மை உண்டு. அலையும் மனிதனை இறைவன் திருவடிக்கண் இசைவிப்பது எதுவோ அது இசை எனப்படும். ஓசை ஒலியெல்லாம் ஆன முழு முதற் கடவுளை இசை வழி எளிதில் அடையலாம் என்பது தொல் தமிழர் கண்டமுறை. திராவிட நாகரிகம் எனக் கருதப்படும் சிந்துவெளியின் முத்திரைகளில் முழவும் யாழும் பொறிக்கப்பட்டுள. பழந்தமிழ் முதல் நூலான தொல்காப்பியத்தில் தேவபாணி என ஒரு கலிப்பா வகையுண்டு. பண்ணிசைக் கடவுட் பாடல்கள் சங்கப் பரிபாடலில் உள. சிவன் தன் நீலக் கழுத்தினை 'யாழ்கெழுமணி மிடறு' என்று பெருந்தேவனார் பாராட்டுகின்றார். இசை கூடும் வகையால் ஏழையடியவர்கள் யாது சொன்னாலும் ஈசன் மகிழ்வான் எனவும் சிவனே வீணை வாசித்து வழிகாட்டுகின்றான் எனவும் இறைவனே ஏழிசை வடிவாகவும் இசையின் பயனாகவும் இருக்கின்றான் எனவும் தேவாரப் பாசுரங்கள் தெளிவிக்கின்றன. "ஊழி முடிவில் எம் இறை நல் வீணை வாசிக்குமே" என்பர் நாவுக்கரசர்.

எவன் எதனை விரும்புகின்றானோ அவனை அதன் வழியாக அடைய வேண்டும் என்ற உலகியற் பொதுநெறி இறையியலுக்கும் ஒக்கும். இந்நெறி கடைப்பிடித்தே திருமுறைகள் எழுந்தன. தேவாரப் பெருமக்கள் தலந்தோறும் சென்று சென்று ஊர்ப்பாசுரங்கள் பாடி மக்களை ஈர்த்தனர். இசையியக்கம் சைவ இயக்கத்தை எங்கும் பரப்பிற்று. "தமிழோடு இசைபாடல் மறந்தறியேன்" என்று முழங்கினார் அப்பர் பெருமான்.

> தமிழின் நீர்மை பேசித் தாளம் வீணை பண்ணிநல்ல
> முழவ மொந்தை மல்கு பாடல் செய்கையிடம் ஓவார்

என்ற பாசுரத்தில் திருஞானசம்பந்தர் இறைவன் தமிழிசை விரும்பி என்பதனைச் சுட்டிப் பாடுவர். திருக்கோலக்காவில் இப்பிள்ளைப் பெருமானுக்கு இறைவன் பொற்றாளங்கள் வழங்கினான் என்ற அற்புத நிகழ்ச்சியால் கோயிற்கலையுள் இசைக்கலையின் மேன்மை பெறப்படும்.

உலகில் எத்துணையோ சமயங்கள் உள. அச்சமயங்களில் மிகப் பெரியவர்கள் தோன்றியுள்ளனர். எனினும் நம் சமயப் பெருமக்களிடம் சில தனியாற்றல்களைக் காண்கின்றோம். மொழி வன்மையோடு கவிபாடும் வன்மையும் அக்கவியை இசைப்பதிகமாகப் பாடும் வன்மையும் யாழ் முதலான இசைக்கருவிகளொடு இயைத்துப் பாடும் வன்மையும் பல நாயன்மார்களிடம் வளர்ந்திருப்பக் காண்கின்றோம். 'கைந்நிறைந்த ஒத்தறுத்துக் கலைப்பதிகம் பாடினார்' எனச் சேக்கிழார் இளைய சம்பந்தரின் கைத்தாள இசையைப் பாராட்டுவர். இசைப் பெருவளத்தால் நாயன்மார்கள் ஊர்தோறும் முழங்கிய தேவாரப்பாடல்கள் இன்று நமக்கு கிடைத்திருப்பவை 8250. தமிழில் தெய்வப் பாடல் என்றால் இசை கலந்த பாட்டு என்பது வெளிப்படை. அதனாலன்றோ பாசுரம் என்னும் பெயர் எழுந்தது. தேவாரவியல் என்ற பகுதியில் யாழ் நூலாசிரியர் விபுலானந்த அடிகள் இசைத் திறத்தைப் பலபடக் காட்டியுள்ளார்.

திருவாசகத்தில் இசைப்பெருமைக்கு எல்லையில்லை. எல்லா பருவத்தினரும் கோயில்களிற் பாடியாடும்படி நாட்டுப்புறப் பாடல் வடிவில் புதிய பாணிகளைப்

படைத்தளித்தார் மணிவாசகர். திருவெம்பாவை திருப்பொற் சுண்ணம் திருச்சாழல் திருப்பொன்னூஞ்சல் திருவம்மானை திருத்தெள்ளேணம் திருப்பள்ளியெழுச்சி திருவுந்தி முதலான பண் சுமந்த பாடல்கள் கோயிற்கலைகளாகி இன்று குடும்பந்தோறும் பாடுபொருளாயின.

இன்னிசை வீணையர் யாழினர் ஒருபால்
இருக்கொடு தோத்திரம் இயம்பினர் ஒருபால்
துன்னிய பிணைமலர்க் கையினர் ஒருபால்
தொழுகையர் அழுகையர் துவள்கையர் ஒருபால்

என்ற திருவாசகப்படி கோயில்களில் இசை முழக்கத்தைக் கேட்கின்றோம்.

சங்க காலத்து இசைச் செல்வத்தை மூவேந்தர்களும் குறுநில மன்னர்களும் வள்ளல்களும் காத்தனர். பாணர் பொருநர் கூத்தர் விறலியர் என்ற குலத்தார் இசை மரபினை நன்கு கற்று ஊர்தோறுஞ் சென்று பரப்பி வந்தனர். சிலப்பதிகாரம் என்னும் முத்தமிழ்க் காப்பியம் இசைக்கலைக்குப் புதிய இயக்கம் தந்தது. வேட்டுவவரி, ஆய்ச்சியர் குரவை, குன்றக்குரவை என்ற காதைகளால் இசைக்கலை கோயில்கலைகளாக வளர்ந்த மாற்றத்தைக் காண்கின்றோம். காளியும் மாயவனும் முருகனும் பாடு பொருளாக விளங்கினர். இடைக்காலத்துப் புறத்தாக்குதலால் சைவக் கோயில்களும் கோயிற்கலைகளும் பிற்பட்டன வெனினும் கி.பி. ஏழாம் நூற்றாண்டில் புயலெனப் பொருமி எழுந்த சைவப் புரட்சியாலும், நாயன்மார்களின் தலயாத்திரையாலும், பண்ணிசையாலும் கோயிற்கலைகள் பன்மடங்கு வீறிட்டெழுந்தன.

இப்புதிய கலைப்பெருக்கம் மீண்டும் நலிவுபடாமல் நெறியரண் செய்து காத்துக்கொடுத்தான் சோழப் பெருவேந்தன் முதலாம் இராசராசன் என்றும் நிலைத்திருக்கும் தஞ்சைப் பெருவுடையார் கோயிலைக் கட்டிய இப்பெருமன்னன் கோயில்கலைகளைக் காப்பதற்குத் தக்க நடவடிக்கையை மேற்கொண்டான். திருப்பதிகம் பாடுவதற்கு ஏராளமான கந்தருவர்களையும் கந்தருவிகளையும் ஆடவும் பாடவும் 400 தனிச்சேரிப் பெண்டிர்களையும் நியமித்தான். இவர்கட்கெல்லாம் முட்டுப்பாடின்றி நிலபுலங்களும் குடியிருப்பு மனைகளும் வழங்கினான். அரசனைப் பின்பற்றி அதிகாரிகளும் ஊர்ப் பெருமக்களும் கோயிலில் பல்வகைக் கலைகளைக் காக்கத் தானங்கள் செய்தனர், அன்று செம்மையாகத் தொடங்கிய திருப்பணிகள் வழிவழி புரக்கப்பட்டு இன்று நமக்குக் கிடைத்திருக்கின்றன.

காலத்தில் புதிய மாற்றங்கள் எவ்வளவு வேகமாக மாறிச் சென்றாலும் நம் முன்னோரின் கோயிற் கலைக் களஞ்சியங்களைக் குடும்பப் பற்றுப் போல் காப்பது நம் பிறவிக் கடமை. கோயில்தோறும் ஓதுவார்களை நியமித்துத் திருமுறைகளை இசையோடு கேட்கலாம்; நம் குடும்பத்து நிகழும் சிறப்பு நாட்களில் ஓதுவார்களை அழைத்துத் தெய்வப் பாசுரங்களைப் பாடச் செய்யலாம்; இக்காலத்து உலகெங்கும் எளிதிற் பரவி வரும் பதிவுச் சுருள் மூலம் நம் இசைப் பாமாலைகளைப் பதிவித்து வாங்கிக் காலையும் மாலையும் கேட்கலாம்; நாம் கேட்பதோடு நம் தமிழ்க் குழந்தைகளையும் கேட்குமாறு பயிற்றலாம். அறிவியற் காலம் எல்லாவற்றையும்

நமக்கு எளிமைப்படுத்தித் தருகின்றது. எளிமையை வேறு வகைக்கெல்லாம் நாம் பயன்படுத்திக் கொள்வது போலத் தமிழுரிமைக்கும் பயன்படுத்திக் கொள்ள வேண்டாமா?

**ஓவியக்கலை**

தொல் பழந்தமிழ்க் கலைகளுள் ஓவியமும் ஒன்று. எழுதுதல் என்ற சொல்லிற்கு ஓவியந் தீட்டுதல் என்பதுவே முதற் பொருள்; 'யாழும் எழுதி எழில் முத்தெழுதி' என்று திருக்கோவையும், 'ஓவியம் நான்முகன் எழுத ஒண்ணாமை' என்று பெரிய புராணமும், கயலெழுதி வில்லெழுதிக் காரெழுதி' என்று சிலப்பதிகாரமும், 'கண்ணும் எழுதேம்' என்று திருக்குறளும், 'எழுத்துடை நடுகல்' என்று சங்க இலக்கியமும் ஓவியப்படுத்தல் என்ற கருத்தில் ஆளுதலை அறிக. ஓவியச் செந்நூல் என்ற கலை நூல் இருந்ததாக மணிமேகலைக் காப்பியம் அறிவிக்கின்றது. சிந்துவெளி நாகரிகத்தின் முத்திரைகளிலும் மட்பாண்டங்களிலும் தெய்வக் குறிப்புடைய ஓவிய வடிவுகள் உள.

பயன்படும் சிறு பொருளைக் கூடச் சித்திரப்படுத்துதல் தமிழர் வாழ்வியல், கைப்பிடிகளில் எவ்வளவு சித்திரங்கள், சிறுவாள்களில் எவ்வளவு சித்திரங்கள், திருநிலைகளில், தூண்களில், குடங்களில், கலயங்களில் எவ்வளவு பதுமைகள், பொம்மைகள், பழம் பொருள்கள் இன்று வெளிநாட்டில் விலை போகும் ஏற்றத்தைக் கொண்டே இவற்றின் ஓவியச் சிறப்பை எடை போடலாம். கைவண்ணம் இல்லாத கலையில்லை.

> சுடுமண் ஓங்கிய நெடுநிலை மனைதொறும்
> மையறு படிவத்து வானவர் முதலா
> எவ்வகை உயிர்களும் உவமம் காட்டி
> வெண்சுதை விளக்கத்து வித்தகர் இயற்றிய
> கண்கவர் ஓவியம்

என்ற மணிமேகலையடிகளால் பண்டு வீட்டுச் சுவர்தோறும் ஓவியம் விளங்கி ஒளிர்ந்ததை அறிகின்றோம். யாழுக்கு மூடிய உறையைச் 'சித்திரப் படாம்' என்பர் இளங்கோ அடிகள்.

ஓவியம் எல்லாம் கலையாயினும், எல்லா ஓவியங்களும் கோவிற்கலைகள் ஆகிவிடா. தெய்வச் சாயலும் தெய்வ மதிப்பும் பெறும் போதுதான் அவை கோயிலோவியம் என்ற தகுதியைப் பெறும். இத்தகைய சித்திரங்களைக் கொண்ட எழுத்து நிலை மண்டபம் ஒன்று முருகன் உறையும் திருப்பரங்குன்றத்தில் இருந்தது எனப் பரிபாடல் பாடுகின்றது. கல்லிலும் செம்பிலும் வடிக்கப்படும் கலைகள் காலங்கடந்து நிலைப்பது போல, சுதையிலும் வண்ணத்திலும் வடிவு பெறும் உருவங்கள் நிலைப்பதில்லை; ஆதலின் பண்டைய ஓவியக் குறிப்புக்களை இலக்கியங்களிற் கற்று மகிழ்வதன்றி இன்று அவற்றைக் கண்டு மகிழ்வதற்கில்லை. ஓவியச் சிதைவுக்கும் அழிவுக்கும் ஒரு பெருங்காரணம் அவற்றைப் பார்க்கும் மக்கள் எட்டி நின்று பாராது தொட்டுத் தொட்டுப் பார்ப்பதுதான். நற்காலமாக பல்லவர் பாண்டியர் சோழர் நாயக்கர் ஆட்சியில் எழுந்த ஓவிய வனப்புக்களில் சில சிதைந்த

நிலையிலேனும் இன்றும் நம் பார்வைக்குக் கிடைக்கின்றன. இவற்றைக் கண்டுபிடித்து வெளிப்படுத்திய பெருமைகள் துப்புரெலுக்கும் கோபிநாதராவுக்கும் கோவிந்தசாமி பிள்ளைக்கும் உரியவை. புதிய ஆய்வுகளால் பழைய ஓவியங்கள் நாளும் நாளும் புலனாகின்றன.

காஞ்சியில் இராச சிம்ம பல்லவன் கட்டிய கைலாசநாதர் கோயில் ஓவியக்கலைக்கும் சிற்பக்கலைக்கும் உறுவிடமாம். திருச்சுற்றில் உள்ள எல்லா அறைகளிலும் ஓவியக் காட்சிகள் இருந்தன என்பதனை அழிந்த வண்ணத்தாலும் எஞ்சிய கோடுகளாலும் உணரலாம். சோமாக்கந்தர் என்ற ஓவியம் பேரெழில் வாய்ந்தது. சிவன் உமை இவர் தம் நடுவே இருக்கும் முருகன் தெய்வக் குடும்பக்காட்சியும், சிறுமுடி அணிந்த குழந்தை முருகன் பார்வதித் தாயின் மடிமேலிருந்து தந்தை சிவனை சிறக்கணித்துப் பார்க்கும் கண்ணழகும், சுற்றியுள்ள பூதகணங்களின் பொலிவும் பதக்கம் கைவளை ஒட்டியாணம் முதலியற்றின் நேர்த்தியும், அமைதியான முகத்தோற்றமும் அவரவர்க்கேற்ற உடற்கட்டும் நம்மை மலைக்கச் செய்கின்றன. ஆரஞ்சு சிவப்பு வண்ணத்தை இன்றும் காணலாம்.

புதுக்கோட்டை சார்ந்த சித்தன்னவாசலில் கண்டாரை ஈர்க்கும் தாமரைக்குள ஓவியமும் நடனமங்கை ஓவியமும் ஆயிரம் ஆண்டுகட்கு மேலாகியும் மக்கள் கண்தீட்டும் கைதீட்டும் பட்டும், நாம் செய்தவத்தால் இன்றும் முழுவுருக் குலையாமல் வாழ்கின்றன. இவை தீட்டிய இடம் குடைவரை யாதலாலும் ஆள் வழக்கற்ற குன்றாதலாலும் பேரளவு தப்பிப் பிழைத்தன. இவ்வோவியக் குளத்தில் பல்வேறு நீர்ப்பூக்கள் உள. தாமரைப் பூக்கள் சிறியவும் பெரியவுமாக, சிறக்கணிப்பும் ஒருக்கணிப்புமாக, விரிவும் முகிழ்வும் முகையாகப் பல்வேறு நிலைகளில் தீட்டப்பட்டுள்ளன. மீன்களும் பறவைகளும் எருமைகளும் யானைகளும் இக்குளத்தில் பங்கு பெறுகின்றன. போர்வை போர்த்தாற்போலச் சிறிய அகன்ற தாமரையிலைகள் குளத்தைப் பசேலென மறைத்துக் கிடக்கின்றன. துறவிகள் எனத்தக்க மூவர் முழங்காலளவு நீரில் இறங்கி நின்று பூசைக்குப் பூக்களைப் பறித்துப் பறித்துத் தோளில் தொங்கும் பூக்குடலையை நிரப்புகின்றனர். இக்கவின் ஓவியம் முன்மண்டபத்தின் மேற்கட்டியிலிருப்பதால், தலை தூக்கிப் பார்த்தாலல்லது தெரியாது, ஆதலின் காலமும் மக்களின் கைக் குறும்பும் கடந்து காட்சியளிக்கின்றது.

இதே குடைவரையில் இரு தூண்களில் நடன மங்கையர் இருவர் ஓவியம் உண்டு. நடனமகள் அந்நாள் எவ்வளவு அணிகலன்கள் அணிந்திருந்தாள் என்பதனை இவை வெளிப்படையாகக் காட்டும். இவ்வண்ண ஓவியத்தையும் மாதவி பூட்டிய நகைகளை வரிசைபடக் கூறும் சிலப்பதிகாரக் காவியத்தையும் ஒப்பிட்டுப் பார்த்தால், தமிழ்க்கலைகளின் ஒருமைப்பாங்கு உறுதிப்படும். இவ்வோவிய நங்கைகள் மேற்பாதி யுருவங்கள்: கொண்டைக் கூட்டும் புருவம் முகம் இமைக்கோடுகளும் உருண்டை முகமும் கழுத்துச் சாய்வும் ஒரு கை மடக்கும் மறுகை நீட்சியும் விரல்களின் வளைவும் செவ்வனே தீட்டப்பட்டுள. இருவர்க்கும் மூக்கணியில்லை என்பது குறிப்பிடத்தகும். இருவர் நடனமும் வெவ்வேறு பாணியுடையன.காற்பகுதிகள் தீட்டப்படா விட்டாலும் கைவைப்பு அசைவுகளிலிருந்தும், முகப்பாட்டிலிருந்தும் நடன

மாட்சிகளை உணரலாம். இன்று அழியாமல் எஞ்சி நிற்கும் தமிழ் நாட்டு ஓவியங்களுள் சித்தன்ன வாசல் ஓவியங்களே காலத்தால் முந்தியவை என்று கணக்கிடுவர் கலை வரலாற்றுப் பேராசிரியர் மயிலை சீனி, வேங்கடசாமி. எங்குவாழ் தமிழர்களும் இவற்றை நேரிற் கண்டு மகிழ்வது பிறவிப் பேறாகும். எதிர்காலமும் காணுமாறு இவற்றைக் காப்பாற்றுவது நம் பிறவிக் கடமை.

தஞ்சைப் பெருவுடையார் கோயில், கோயிற்கலையனைத்தும் குடிகொண்ட கலைக்கடலாகும். அங்கு ஓவிய வரைவு இல்லாமல் இருக்குமா? கருவறையின் உட்சுவர்களில் ஓவியங்கள் உண்மை 1930இல் கண்டு பிடிக்கப்பட்டது. சுந்தரரின் வாழ்க்கையெல்லாம் படிப்படியாக ஓவியமாயின. திருமணமேடைக்கு வந்து சிவபெருமான் சுந்தரரைத் தடுத்தாட் கொள்ளல், சிவன்கையில் தாழங்குடையும் பனையோலையும் இருத்தல், அங்கு உள்ளாரின் வியப்பு, சுந்தரர் கிழவேதியரை வியப்போடு பார்த்தல் முதலான நிகழ்வுகளும் சுந்தரர் வெள்ளையானை மீது ஏறிப் பறக்கும் கயிலைக் காட்சியும் சேரமான் பெருமாளும் புரவியேறி உடன் செல்லும் காட்சியும் உமையொருபாகன் காட்சியும் விண்ணக மகளிரின் தோற்றமும் இன்னும் சிவனது பல அற்புதச் செயல்களும் அடுக்கடுக்காக, சுவரெங்கணும் வண்ணமாயின. சேக்கிழார் பெரிய புராணக் காப்பியம் பாடுதற்கு இவ்வோவியங்கள் பாட நூலாக இலங்கின என்றால், வேறு பெருமை வேண்டுமோ? சோழப் பெருவேந்தன் இராசராசன் ஓவியவளத்தைப் பெருக்குவதற்கென்றே தனி ஓவியக் களரி வைத்திருந்தான் என அறிகின்றோம். இப்புதிய கண்டுபிடிப்பிலிருந்து நாம் உணர்வதென்ன? புதையுண்ட தமிழ்க் கலைச் செல்வங்கள் எதிர்கால ஆய்வால் எவ்வளவோ வெளிப்படும் என்று நம்பலாமல்லவா?

**சிற்பக்கலை**

கோயிற்கலைகளுள் நிலையானதும் விரிவானதும் சிற்பக்கலையாகும். கல்லாலும் செம்பாலும் பிற உலோகங்களாலும் செய்யப்படுதலின் நிலைபேறு உண்டு. நிலைபேறு காரணமாக விரிவுக்கும் இடமாயிற்று. சிந்துவெளிக் காலத்துச் சுடுமண்ணாற் செய்யப்பட்ட படிம முறைகள் பின்னர்க் கல்லிலும் பிறவற்றிலும் ஏறின. மொகஞ்சோதாராவில் ஒரு நாட்டிய மங்கையின் வெண்கலப் படிமம் காணப்படுவது நம் பரத நாட்டியத்தை நினைவூட்டுகின்றது.

வீரர்க்கு எடுக்கும் நடுகல் என்பது பீடும் பெருமையும் பெயரும் எழுதிய சிற்பமாகும். தொல்காப்பிய காலத்துக்கு முன்பே இத்தகு வீரச்சிலைகள் உருவாகியதை அறியலாம். பின்னர் வீரக் கற்பினளாகிய கண்ணகிக்கும் செங்குட்டுவன் இமயக்கல் எடுத்தான் என்பதனைச் சிலப்பதிகாரம் புகழ்படப் பாடுகின்றது.

> தணியாக் காதல் தாய்கண் ணகியையும்
> கொடைகெழு தாதை கோவலன் தன்னையும்
> கடவுள் எழுதிய படிமம் காணிய
> வேட்கை துரப்பக் கோட்டம் புகுந்து
> வணங்கி நின்று குணம்பல ஏத்தி

என்று வரும் மணிமேகலைக் காப்பியத்தால் நங்கை மணிமேகலை வஞ்சிமாநகரில் கோவலன் கண்ணகி இருவர் தம் ஒன்றிய தெய்வவுருத்தை வணங்கினாள் எனக் காண்கின்றோம்.

அமரா தருக்கோட்டம் வெள்யானைக் கோட்டம்
புகர்வெள்ளை நாகர்தங் கோட்டம் பகல்வாயில்
உச்சிக் கிழான்கோட்டம் ஊர்க்கோட்டம் வேற்கோட்டம்
வச்சிரக் கோட்டம் புறம்பணியான் வாழ்கோட்டம்
நிக்கந்தக் கோட்டம் நிலாக்கோட்டம்
நுதல்விழி நாட்டத்து இறையோன் கோயிலும்
உவணச் சேவல் உயர்ந்தோன் நியமமும்
மேழி வலனுயர்த்த வெள்ளை நகரமும்
கோழிச் சேவற் கொடியோன் கோட்டமும்

என்ற சிலப்பதிகாரப் பகுதிகள் பண்டைக்காலத்து, கோட்டம் பலவும் கோயில் பலவும் இருந்த பெருக்கத்தைத் தெளிவாக்குகின்றன. இதனாற் படிம வளத்தையும் தெளியலாம்.

இவ்வாறு வழிவழி வந்த சிற்பக்கலை பல்லவர் கால முதலாகப் பல்கிப் பெருகிக் கிளை பலவாகி இலக்கியக் காப்பியம் போலக் கற்காப்பியமாக வளர்ந்து விட்டது. மாமல்லபுரத்தில், போர்ச் சினமே உருவெடுத்த சிங்கக் கொற்றவையின் சிற்பமும் எல்லாவுயிர்களும் தவஞ் செய்யும் பேரமைதிச் சிற்பமும் கன்றுக்கு விட்டுக் கறவைப்பால் கறக்கும் ஆயர் சிற்பமும், பஞ்சபாண்டவர் தேர்களும் திருச்சிராப்பள்ளியில், அடங்காக் கங்கையாற்றைத் தன் ஒரு மயிரிழையில் அடக்கியொடுக்கிய சிவபிரானின் வன்மைச் சிற்பப் படைப்பும் காஞ்சிக் கைலாய நாதர் கோயில் முழுதும் காணப்படும் பல்வகை நடனச் சிற்பங்கங்களும், வைகுந்தப் பெருமாள் கோயிலில் உள்ள உலகத் தோற்ற வரலாற்றுச் சுவர்ச் சிற்பங்களும், தஞ்சைப் பெருவுடையார் கோயில் ஒற்றைக்கல் நந்தியும், கங்கை கொண்ட சோழபுரத்தில் முப்பதடி உயர்ந்த இலிங்கமும், விசய மன்னர் காலத்து எழுந்த இராயர் கோபுரங்களும், மதுரை ஊர்த்துவ தாண்டவ நடனச் சிலையும், பல்வேறு கடவுள் உருவங்களும் அரசர் அரசியர் தோற்றங்களும் பல்கலைக் கூடங்களை நினைவூட்டுகின்றன. புராணக் கதைகளேயன்றி வரலாற்று நிகழ்ச்சிகளும் சிற்பமாயின என்ற முற்போக்கினைக் காஞ்சி வைகுந்தப் பெருமாள் கோயில் சுவர் வரிசைகள் புலப்படுத்துகின்றன.

**நாயன்மார் சிற்பமும் வணக்கமும்.**

சிற்பக்கலையின் உயர் படைப்புக்கு ஓர் எடுத்துக்காட்டு வேண்டுமென்றால் சோழ நாட்டுத் தாராசுரத்தைப் பாருங்கள். கி.பி. 12 ஆம் நூற்றாண்டில் ஆட்சி புரிந்த இரண்டாம் இராசராசசோழன் தன் பெயரால் எடுத்த சிவன் கோயிலில் 63 நாயன்மார்களின் வாழ்க்கைத் திருத் தொண்டினை விளக்கும் 72 சிற்ப வரிசைகளைக் காணலாம். சுந்தரர் பாடிய திருத்தொண்டத் தொகையின் செய்யுள் இலக்கியத்திற்குச் சிற்ப இலக்கியம் செய்த புதுமையையும் தனிச் சிற்பம் செய்வதோடு நில்லாது தொடர் சிற்பம் தொடுக்கும் வளர்ச்சியையும் இது காட்டுகின்றது.

நாம் இங்கே ஒரு சைவச் சிந்தனையை அழுத்தமாக நினைத்துக் கொள்ள வேண்டும்.

மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரனெனத் தொழுமே

என்று ஆணைபட மொழிந்தார் மெய்யறிவிற் சிறந்த மெய் கண்ட தேவர். சிவனைப் போலவே சிவனடியார்களைப் போற்றி மதித்துப் பாட வேண்டும் என்ற எழுச்சி திருஞான சம்பந்தர் காலமுதல் வீறிட்டெழுந்தது. இறைவனைப் பொருளாகக் கொண்ட திருப்பதிகங்களில் நாயன்மார் பெயர்களையும் வைத்துப் பாடி வழி காட்டினார் திருஞான பெருமான். பின் வந்த சுந்தரமூர்த்திகள் திருத்தொண்டத் தொகையென ஒரு மூலவிலக்கியமே பாடி, நம்பியாண்டார் நம்பிக்கும் சேக்கிழாருக்கும் பாடு பொருள் வழங்கினார். சேக்கிழார்

அளவி லாத பெருமைய ராகிய
அளவி லாஅடி யார்புகழ் கூறுகேன்
கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார்
ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்குவார்
கூடும் அன்பினிற் கும்பிடலே யன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்

என்று பெரியபுராணமாம் திருத்தொண்டர் புராணத்தை 4300 பாடலளவில் பாடித் தொண்டர் தம் பெருமையியக்கத்தைப் பரப்பினார். இப்போது சைவப் பெருங்கோயில் பலவற்றிலும் நாயன்மார்களின் கற்சிலைகளோ செப்புச் சிலைகளோ வரிசையாக வைக்கப்பட்டிருப்பதைப் பார்க்கின்றோம். கோயில் செல்வார் இவற்றை வேண்டா வரிசை போல ஒரு கடைக் கண்ணால் பார்த்துக் கழிவது இரங்கற்குரியது. இத்தொண்டர்கட்குரிய வழிபாடுகள் அறங்காவலர்களாலும் புறக்கணிக்கப் படுகின்றன. மொழிக் குறிப்பும் பலவிடங்களில் பிழையாகும். சமய நெறியும் சைவ இயக்கமும் தழைக்க வேண்டுமேல் நாயன்மார்கள் சிவனே போல் ஒப்பப் போற்றப்பட வேண்டும்.

பெருமையால் தம்மை ஒப்பார்
பேணலால் எம்மைப் பெற்றார்

என்பது இறைவன் வாக்கு. சைவ இலக்கியங்களும் சைவ மறைகளும் இவ்வுண்மையைக் காலந்தோறும் நினைவூட்டி வருகின்றன.

தூரத்தே திருக்கூட்டம் பலமுறையால் தொழுதன்பு
சேரத்தாழ்ந் தெழுந்தருகு சென்றெய்தி நின்றழியா
வீரத்தார் எல்லார்க்கும் தனித்தனிவே றடியேனென்று
ஆர்வத்தால் திருத்தொண்டத் தொகைப்பதிகம்
அருள்செய்தார்

என்றபடி வன்தொண்டராம் சுந்தரர் இன்தொண்டர்களைத் தனித்தனியே போற்றிய வணக்கத்தை உள்ளுவோமாக. கோயிலுக்குச் சென்றவுடன் பூசுநீறுபோல் உள்ளும் புனிதர்களாக நாயன்மார்கட்கு நாமும் முதல் வணக்கம் செய்து நம் குழந்தைகளையும்

வணங்கச் செய்வோமாக. எல்லாக் கோயிற்கலைகளின் மெய்ப்பொருள் யாது? சிவனையும் அடியார்களையும் வணங்குதலே. அடியார் வணக்கமே அன்புச்சிவ வணக்கம்.

கோயிலுக்கு, இலக்கியம் ஓவியம் சிற்பம் இசை கூத்து நாடகம் நடனம் திருமேனிகள் கோபுரங்கள் என்றின்ன கலைத்திறன்கள் பலப்பல இருந்தாலும், கலைக்குட்கலையான, உயிருக்குள் உயிரான, இயக்கத்திற்குள் இயக்கமான தனக்குவமையில்லா ஒரு தனிக்கலையுண்டு. அது தான் தில்லைக்கூத்தன் திருவுருவம்; உலகமெல்லாம் இயக்கும் உள்ளுருவம். கூத்தில்லாத விழா இன்மை போலக் கூத்தன் இல்லாத கோயில் இல்லை. சிந்துவெளி ஆரப்பாவிற்கூட சுண்ணாம்புக்கல்லில் ஆடவல்லான் உருவம் காணப்படுகின்றது.

இலங்கைப் பெரியார் ஆனந்த குமாரசாமி உலகிற்கு அறிமுகஞ் செய்த தமிழ்க்கலை திருவாலங்காட்டு நடராச சிலையாகும். இச்செப்புத் திருமேனியின் ஒவ்வோர் உறுப்பும் கற்பனையன்று நடைமுறையுண்மை எனவும், இன்று எவ்வளவு பெரிய கலைஞனும் எல்லா நடப்பையும் இயக்குவிக்கும் ஆற்றல் சான்ற ஒரு வடிவை இதுபோல் அமைக்க இயலாது எனவும், தீச்சுடர் முழு அழிவைக் காட்டவில்லை மாற்றத்தைக் காட்டுவது எனவும் இக்கலைப் பெரியார் மேனாடுகளில் தில்லைக்கூடத்தை விளக்கினார்.

கூத்தப்பெருமானின் ஆனந்த தாண்டவம் படைத்தல் முதலான அனைத்தையும் ஆட்டுவிப்பது. இவ்வுருவத்தில் உள்ள ஒவ்வொரு பொருட்கும் ஆழ்ந்த மெய்ம்மையுண்டு. தூக்கிய திருவடியும், அந்த அடியை வணங்குக என்று வழிகாட்டும் கைமடக்கும், ஞானவிரிவான சடைப்பரப்பும், தீய அழிவுக்கும் நல்லாக்கத்திற்கும் ஆற்றல் தரும் தீச்சுடரும், இவ்வட்ட எல்லையுள் எல்லாம் அடங்கும் என அறுதிகாட்டும் திருவாசிகையும் சொல்லுந்தரமோ?

ஒன்றி யிருந்து நினைமின்கள் உந்தமக்கு ஊனமில்லை
கன்றிய காலனைக் காலாற் கடிந்தான் அடியவற்கா
சென்று தொழுமின்கள் தில்லையுட் சிற்றம் பலத்துநட்டம்
என்றுவந் தாய்என்னும் எம்பெரு மான்தன் திருக்குறிப்பே

என்ற அப்பர் தேவாரம், கலையரிய தில்லைக்கூத்தன் நாம் வணங்குவதற்கு நனி எளியவன் எனவும், அருகே சென்றால் உறவினர் கேட்பது போல 'என்று வந்தாய்' என இனிய குறிப்பால் கேட்பான் எனவும், வாழ்வில் உங்கட்கு எக்குறைவும் வாராது எனவும் நமக்குப் பாடஞ் சொல்கின்றது. தெய்வக் கலையாயினும் அது மனிதப் பண்பாடு உடையது; மெல்ல மெல்ல மனித வாழ்வில் தெய்வீகத்தை வளர்ப்பது; ஆணவத்தைக் குறைத்து அன்பையும் அருளையும் ஊட்டுவது. கோயிற்கலைகள் இம்மை வாழ்வுக்குப் புறமல்ல; ஏற்றமும் ஊற்றமும் தருபவை. கூத்தனது கூத்து வறட்டுக் கூத்தன்று; வாழ்க்கைக் கூத்தாகும். திருவாசகத்தின்படி ஆனந்த வெள்ளத்து அழுத்துவிக்கும் திருவடியாகும்.

கோயில் என்பது எல்லாத்தரத்தினர்க்கும் உரிய பொதுவிடம். இங்கு தெய்வத்தன்மை ஊட்டும் முறையில் பல கலைகள் காக்கவும் வளர்க்கவும் படுகின்றன.

அயல் நாட்டில் உள்ள சைவக் கோயில்களில் தமிழ்நாட்டில் உள்ளதுபோல் பல கலைகளும் மிக்க அளவில் இடம்பெறும் வாய்ப்பில்லை. அங்கு வாழும் தமிழ்மக்களின் சமுதாயச் சூழ்நிலை பரவலானது, பிணைப்பானது; என்றாலும் திட்டமிட்டால் நல்ல சில கலைகளைக் கோயில்களிற் போற்றிப் பயன்பெறலாம். குழந்தைகளையும் பெண்களையும் ஈர்க்கு முறையிலும் கோயிற்கலைகள் பரப்பப்பட வேண்டும். அப்போதுதான் குடும்பங்களில் சைவமணங் கமழும், சைவப்பயிர் தழைக்கும்.

கலைகளுள் எளியது இலக்கியக்கலை. தேவார திருவாசகத் திருமுறைகளிற் சில பதிகங்களையேனும் பண்ணோடு ஓதவும் கேட்கவும் வழி செய்யலாம். வாரந்தோறும் வாய்ப்பான ஒருநாளில் பலருங் கூடித் திருமுறைகளைப் பண்ணோடு இசைக்கலாம். சில பதிகங்களை நாடாப் பதிவு செய்து பரப்பலாம். திருமுறைகள் திருப்புகழ்களிலிருந்து 50 பாடல்களைத் தொகுத்துச் சிறு நூலாக வழங்கலாம். இவற்றால் கோயிலுள்ளும் குடும்பங்களிலும் சமய இலக்கியக்கலை வளரும். கடவுளர் உருவங்களையும் கோபுரங்களையும் சிறு வண்ணப்படமாக்கிச் சிற்றேடாகப் பரப்புவது எழுச்சி தரும்.

கவர்ச்சிக் கலைகளுள் ஒன்று நாடகம். பெரிய புராணத்தில் வரும் அடியார்களின் வரலாறுகளை ஒருறுப்பு நாடகமாக்கிக் குழந்தைகளை நாடக மாந்தர்கள் ஆக்கித் திங்கள்தோறும் கோயில்களில் நாட்டிய நாடகங்கள் நடத்த வேண்டும். நாயன்மார் வாழ்க்கைகளைச் சித்திரமும் ஓவியமும் தீட்டுமாறு ஓவியப்போட்டிகள் வைத்துப் பரிசுகள் வழங்க வேண்டும். ஓதுவார்கள் கோயில்தோறும் இருந்தால் தெய்வக்கலைகள் உரப்பயிர் போலச் செவ்வனே வளரும். மேலும் இத்தகைய நிகழ்ச்சிகளைத் தலைநகரில் மாத்திரம் நடத்திக் கொள்ளாமல் தமிழ்மக்கள் வதியும் சிறுநகர்களிலும் முறையாகப் பரப்ப வேண்டும். அப்போதுதான் ஒத்தவுணர்வு எங்கும் காணப்படும்.

மீனாட்சி

# அருள்மிகு மீனாட்சி அன்னையைத் தேடுகின்றேன்!

டாக்டர் தமிழண்ணல்

**தேடுதல்**

*கங்குலில் பகலில் நல்ல ககனத்தில் பாரில் எல்லாம்*
*அங்கயற் கண்ணி உன்னை அலமந்து தேடுகின்றேன்*
*பொங்கர் சூழ் மதிமுகத்தாய்! புகழுறும் வடிவே நீ தான்*
*எங்குளாய் எனவு ரைத்தால் இனைந்தேங்கி அழுவேனோநான்?*
*க்டலினுள் தவற விட்ட முத்தெனத் தேடுகின்றேன்*
*விடருறு மலையி னூடோ? வெளியிலாக் காட்டி னூடோ?*
*இடருறு குடிசைக் குள்ளோ? எங்கே நீ இருக்கின்றாயோ?*
*இடமதை உணர்த்து வாயேல் இருந்தேங்கி அழுவேனோநான்?*

**நாடுதல்**

*கல்லுடைத்துச் சாலைகளில் கண்ணீர் மழைபொழிந்தே*
*அல்லலுழ பார்நடுவே அழகி இருப்பாளோ?*
*அல்லலுறும் என்செல்வ அழகி நினைவதனால்*
*தொல்லையுறு சாதிஎனத் தூற்றிப் பழியே னால்!*
*பேருந்து நிலையத்தில் பிச்சைஎடுப்பவர் பால்*
*சீருந்தும் என்செல்வச் சிறுமி இருப்பாளோ?*
*சீருந்தும் என்செல்வச் சிறுமி நினைவதனால்*
*ஏருந்தும் ஏழைகளை எள்ளி நகையேனால்*
*பிச்சைஎடுத் தலைகின்ற பிஞ்சுக் குழந்தைகள் பால்*
*எச்சில் இலை தேடி என்றன் இளையள் அலைவாளோ?*
*எச்சில்அமு தூறும் இளையள் நினைவதனால்*
*பிச்சைஎடுத் தலைபவர்பால் பேதம் நினையேனால்!*

**நினைதல்**

*கண்ணுள் கரிய மணியாகிக்*
*கருத்துள் உண்மை வடிவாகி*
*எண்ணுள் இருந்தாய்; எனைப்பிரிந்தே*
*எங்கே சென்றாய் மீனாட்சி?*
*எண்ணுள் இருந்தும் எனைப்பிரிந்தே*

ஏங்கச் செய்தல் கயற்கண்ணாய்!
உண்மை அன்பின் திறங்காணும்
உளமோ சொல்லாய் மீனாட்சி!
காடும் மலையும் சுற்றிடவும்
ககன வெளியைப் பற்றிடவும்
தேடும் படிக்குப் பிரிந்தெந்தத்
திசைக்குச் சென்றாய் மீனாட்சி?
தேடும் படிக்கே எனைப்பிரிந்து
சேறல் காணின் கயற்கண்ணாய்
வாடும் நிலைதந் தெனையறியும்
வழக்கோ சொல்லாய் மீனாட்சி!

**கரைதல்**

பூவின் பொலிவில் சிரிப்பாகிப்
பொன்னின் வடிவில் ஒளியாகிக்
காவின் பரப்பில் நிறமாகிக்
கலந்தாய் வாழி மீனாட்சி!
நாவில் நின்றே நடமாடி
நல்கும் மகளே! என்னுடைய
ஆவி நிலைக்க வேண்டுமெனில்
அன்னாய் ஓடி வாராயோ?
நல்லாய் என்றன் உயிராகி
நாடிட என்னைப் பிரிந்தேகி
எல்லா உயிரும் ஒன்றென்னும்
எண்ணம் தந்தாய் மீனாட்சி!
பொல்லாச் செல்வச் செருக்காலும்
பொய்ம்மைத் திமிரின் பெருக்காலும்
கல்லாய் இருந்தேன் கனிந்துவிட்டேன்
கயற்கண் தாயே வாராயோ!

**காணுதல்**

கன்னிரண்டும் மழைபொழியக் கசிந்துருகி நினைவொழியப்
பெண்ணணங்கு காட்சிதரும் பெருமையினைப் பாடுவமே!
மனமிருக்கும் இருளகல மமதைதரும் மலம் அகல
நனவிருக்கும் உமையவளின் நலம்புனைந்து பாடுவமே!

**மீனாட்சி திருமணத் திருக்கோலம்**

*புகழ்மணக்கும் தமிழ்மகளைப் பொதிசுமந்த மணவாளன்*
*நகமணக்கும் தகையவளை நங்கையினைப் பாடுவமே!*
*சிலைவடிவை வென்றவளைச் சிவன் மணக்க நின்றவளைக்*
*கலைவடிவு கொண்டவளைக் கன்னியினைப் பாடுவமே!*
*தமையனவன் நீர்வார்க்கத் தலைமகன் தன் கைப்பிடிக்க*
*அமைவுறுமென் நகைகாட்டும் அணங்கவளைப் பாடுவமே!*
*அழகர்மலைத் தமையனையும் அழகுமலைத் தலைவனையும்*
*பழகுகலை வல்லியையும் பைந்தமிழ் பாடுவமே!*
*கன்றுபிரி காராவாய்க் கதறுபவர் கண்ணெதிரில்*
*நின்றருளும் மீனாட்சி நிழலிலிருந்து பாடுவமே!*
*ஆலவாய் அண்ணலுடன் அமர்ந்திருந்து வையமிதைச்*
*சாலவே பேணுகின்ற தமிழ்மகளைப் பாடுவமே!*
*(தமிழக அரசின் பொற்கிழிப் பரிசுபெற்ற பாடலிலிருந்து சில பகுதிகள் இவை)*

# திருப்பணி துவங்கி நிறைவு பெற்ற ஆண்டுக் காலங்களில்

**சிவன் கோயில் காரியக்காரர்கள் – உப காரியக்காரர்கள்**

| ஆண்டு | காரியக்காரர் | உப காரியக்காரர் |
|---|---|---|
| விப | பழ. குழந்தைவேலன் செட்டியார் | தெ.நா. நாகப்ப செட்டியார். |
| சுக்ல | சுப. முரு. ஆறுமுகம் செட்டியார் | கரு. பழ. சண்முகம் செட்டியார் |
| பிரமோதூத | வ.ந.வ. நல்லப்ப செட்டியார் | கரு. ராம. சொக்கலிங்கம் செட்டியார் |
| பிரோஜோபர்த்தி | அ. சொ. அண்ணாமலை செட்டியார் | |
| ஆங்கிரஸ | ஆ. ராம. சுப்பையா செட்டியார் | கும. பழ. சொ. சண்முகம் செட்டியார் |
| ஸ்ரீ முக | பி.அ. ராம. மகாலிங்கம் செட்டியார் | செ. ஆ. சொ. இராமலிங்கம் செட்டியார் |
| பவ. | ப.சா. சிங்காரம் செட்டியார் | ஆ. அண. பழனியப்ப செட்டியார் |

உ

சிவமயம்

# தைப்பிங் ஸ்ரீ தெண்டாயுதபாணி சுவாமி குறித்து கவியரசு கண்ணதாசன் அவர்கள் பாடியது

உண்டாயின் உண்டென்றும் இல்லாயின் இல்லென்றும்
உடனுடன் காட்டி விடுவான்
ஊர்காவல் நாமென்று கூர்வேலைக் கைக்கொண்டு
உயிர்காக்க ஓடி வருவான்
வண்டாடும் மைக்கூந்தல் வள்ளிதெய் வானையரை
மறந்தவன் ஈண்டு வந்தான்
வளமான தமிழோடு தமிழ்ச்சாதி வாழ்நாளை
வளமாக்கக் கோவில் கொண்டான்
தெண்டாயு தபாணித் தெய்வமே தைப்பிங்கின்
தெளிந்தநீ ரோடை யருகே
திருநாட்கள் பலகண்டு வருநாட்கள் தமிழர்க்குத்
திருவாக வாழ்த்தி யருள்வான்.

கொண்டாளை உற்றாரை குலத்தோரை ஊர்வைத்து
கொண்டுவிற் பார்கள் மனதை
குன்றாக்கி நின்றாடி குறையாத பொருள்தந்து
குடிகாக்க வேண்டு மெனவே
பண்டார வடிவாகிப் பாய்க்கப்பல் தனிலேறி
பழநியைப் பிரிந்து வந்தான்
பலகால மானாலும் அடையாளம் மாறாமல்
பனிமுகம் காட்டி நின்றான்
தெண்டாயு தபாணி தென்னாட்ட வர்பாணி
தேர்கின்ற தைப்பிங் நகரில்
திருவோடு கொண்டாலும் அருளோடு பொருளோடு
திருவோடு வாழ விடுவான்.

– தகவல் ராம. முத்தப்பன்

# நகரத்தார் மாண்பு

**முனைவர்: ஔவை நடராசன்,**

**துணைவேந்தர், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.**

நாட்டின் நாகரிக வளர்ச்சிக்கு அளவுகோலாய் அமைவது செல்வச் செழிப்பாகும். செல்வச் செழிப்புக்குத் துணை புரிவது வணிகம். எனவே, செழுங்குடி வணிகரே ஒரு நாட்டின் நயத்தக்க நாகரிகத்தை ஓம்பும் உரவோராகின்றனர். வணிக வளர்ச்சியால் வடமலையில் பிறந்த பொன்னும், தென் மலையில் பிறந்த சந்தனமும், குடகடற்பவளமும் ஒருங்கிணைகின்றன. தமக்குரிய நூல்களை ஓதுதல், தமக்குரிய அறக் கடனாற்றல், தாம் பெற்ற பொருளை நல்வழியில் ஈதல், உழவு செய்வித்தல், ஆநிரை காத்தல் என்றும் ஐந்தும் வணிகருக்கு உரிய தொழில் என்று தொல்காப்பியம் கூறும். அரசரும், வணிகரும் கலந்து பழகினார்கள். அதனால் வணிகர் இளங்கோக்கள் எனப்பட்டனர். காவிரிப்பூம்பட்டினத்துச்சாலையில் அரச குமாரரும், வணிக குமாரரும் குதிரைகளின் மீதும், களிற்றின் மீதும் ஏறி ஒருங்கே சென்றனர் எனச் சிலம்பு குறிப்பதால் அரசர் வணிகர் நட்பை அறியலாம்.

தொழிலால் வணிகர்; தோயும் துறையால் தமிழர்; வாழும் நாட்டால் இந்தியர்; பரந்த நோக்கால் உலகர் என்பது செட்டி நாட்டவர்க்கே பொருந்தும். அப்பன், ஆச்சி, ஆத்தாள், ஐந்தொகை, ஊருணி போன்ற அரிய தமிழ்ச் சொற்கள் வழங்கும் செட்டிநாடு பண்டைத் தமிழரின் பண்பாட்டெச்சங்களைக் காத்து வரும் தொல்குடியாகும். நகரத்தார் திருமண நெறியில் மணமிடுதல், காப்புக் கட்டுதல், குடியழைத்தல், திருப்பூட்டுதல், மறுவீடு போதல், வேறு வைத்தல், பேறு கேட்டல் முதலிய தீவிய நலங்கனிந்த தனித் தமிழ்ச் சொற்கள் நடமாடுவதைக் காணலாம். நாகரிகத்தின் கான்முளை இவர் தாம் என்பது நகரத்தார் எனும் சொல் இவர்க்கே உரிமையாய் அமைந்த நிலையால் அறியலாம். 'வினையே ஆடவர்க்குயிரே' என்பதற்கு நகரத்தார் பெருமக்களே இலக்கியம். நகரத்தார் வாழ்வியல் கண்டே "திரை கடலோடியும் திரவியம் தேடு" என மற்றைக் குடிகளுக்கு ஓதினர் போலும்! இப்பர், கவிப்பர், பெருங்குடி, வாணிகர் என்று வாணிகம் செய்வோர் புகழ்ப் பெயர் சூட்டப் பெற்றனர். 'பெருங்குடி வாணிகன் பெருமட மகளே' என்பது சிலப்பதிகாரம். கடல் வணிகம் புரிந்தவர் நாய்கர் என்றும், நில வணிகம் புரிந்தவர் சாத்தர் என்றும் பண்டைத் தமிழில் வழங்கப் பெற்றனர். வாணிகம் பொருட்டு வணிகர்கள் கூட்டம் கூட்டமாகச் சென்றனர். அக்குழுவினருக்குச் சாத்து என்பது பெயர். இன்றும் சாத்தன், சாத்தப்பன் என வழங்கும் பெயர்கள் பழைய சாத்துக்குத் தலைவராகிய மரபைக் காட்டும் பெயர்களாக நகரத்தாரிடையே திகழ்கின்றன.

செங்கற்பட்டுக்கு அருகில் உள்ள திருக்கச்சூர் என்னும் தலத்தில் சாத்தனார் மரபினர் ஒருவரைப் பற்றிய சாசனம் உள்ளது. அவருக்குப் 'பெருநம்பி' என்ற பெரு மதிப்புடைய பட்டப்பேறு வாய்த்தது. இவ்வாறு அரசருக்கு அமைச்சராக மிளிரும் பெரு நம்பியராகவும், மூர்த்தி நாயனாரைக் கருதியவிடத்து அரசுரிமைப் பேறும் வணிகர்க்கிருந்தது என அறியலாம்.

பெருந்துறவினராகிய பட்டினத்தாரும் வணிகர் தாமே!

மாநாய்கன், மாசாத்துவான் எனச் சிலப்பதிகாரத் தலை மக்களின் பெற்றோர் குறிக்கப் பெறுகின்றனர். கோவலன் வணிக குமரன் என்பதும், 'குலந்தருவான் பொருட்குன்றம்' உடையவன் என்பதும் அக் குன்றம் தொலைய நேர்ந்த இலம் பாட்டிற்கு அவன் நாணினான் என்பதும் நோக்க, அவன் நகரத்தார் குடித் தலை மகன் எனத் துணியலாம். நல்லுரையாலும், அறச் செயலாலும் மேம்பட்டிருந்த நகரத்தார் சிறப்பை ஒரு பழைய செய்யுள் பாராட்டுகிறது.

"ஈட்டிய தெல்லாம் இதன் பொருட் டென்பதே
காட்டிய கைவண்மை காட்டினார் - வேட்டொறும்
காமருதார்ச் சென்னி கடற்சூழ் புகார்வணிகர்
தாமரையும் சங்கும் போல் தந்து"

சோழ அரசனுக்குரிய காவிரிப்பூம்பட்டினத்து வணிகர், பதும நிதியையும். சங்க நிதியையும் போலப் பொருள்களை வழங்கத்தாம் ஈட்டிய செல்வமெல்லாம் அறம் புரிதற்கேயாம் என்பதை விளக்கும் கொடைத் திறத்தைக் காட்டினார் என்பது இதன் கருத்து. அருங்கல்விப் பெரும்பணியும் ஆலயத் திருப்பணியும் ஆற்றுவதில் ஒப்பற்று விளங்கும் நகரத்தார் கைவண்மையைக் குறித்ததாகவே இச்செய்யுள் பொருத்தமாக அமைகிறது.

'கோயிலொடு குடி நிறீஇ' என்ற சங்க இலக்கியத் தொடர் நகரத்தார் வாழ்க்கை நலங்கண்டு எழுந்ததாகும். சிவநெறியும், தவநெறியும் வாழ்க்கை நெறிகளாகக் கொண்ட நகரத்தார் காசியிலிருந்து தென்குமரி வரையில் திருக்கோயில்களைச் செப்பம் செய்து குடமுழுக்காட்டித் திருப்பணி பல புரிந்து அறக்கொடை நல்கினர். திருமடங்களும், அறச்சாலைகளும் பற்பல நிறுவி வயிற்றுப் பசி துடைத்து வள்ளன்மை புரிந்தனர். கோயில்களொடு தம் குல முறையைப் பிணித்துக் கொண்ட பண்பாட்டு நெறி இன்றுகாறும் அவர்களை விட்டகலவில்லை. மேலைச்சிவபுரி சன்மார்க்க சபையும், அதன் அங்கமான கணேசர் செந்தமிழ்க் கல்லூரியும் கடந்த எண்பத்தி ஐந்து ஆண்டுகளாக நிலையான தமிழ்த் தொண்டாற்றும் நிறுவனங்களாகும். சன்மார்க்க சபையில் சான்றோர் பெருமக்கள் தம்முட் கூடியிருந்து தமிழாய்வு செய்த திறத்தைக் கண்டும் கேட்டும் நகரத்தார் பெருமக்கள் பெருமிதம் எய்தினர். தமிழ்க் கடல் இராய. சொக்கலிங்கனார், சீர்திருத்தச் செம்மல் சொ. முருகப்பா, கம்பர் அடிப்பொடி சா.கணேசானாரும் தமிழ்ச் சங்க நிகழ்ச்சிகளால் தாம் இன்புற்றதையும், எழுச்சி கொண்டதையும் கூறியுள்ளனர். மேலைச் சிவபுரியில் தான் தமிழ்ப் பயிர் செழித்து வளர்கிறது எனப் புலவர் பெருமக்கள் பாராட்டி மகிழ்வர்.

மேலைச்சிவபுரியில் பண்டிதமணியாரைக் கண்டு மகிழவும், கேட்டின்புறவும் தமிழ்ப் பெரும் புலவர்கள் திருத்தலச் செலவு போல மேலைச்சிவபுரிக்கு வருவதை வழக்கமாகக் கொண்டிருந்தனர்.

தன வணிகராகிய நகரத்தார் மனப்பாங்கில் விரிந்து பரந்த பெருந்தகவினர். கோடிப் பேர்க்குக் கல்விக் கண் திறந்த அண்ணாமலை அரசரும், அழகப்ப வள்ளலும்,

கலைத் தந்தை கருமுத்து தியாகராசரும், நகரத்தார் மரபுக்கு அணி செய்யும் நன்மணிகள்.

*"வீடு தோறும் கலையின் விளக்கம்:*
*வீதிதோறும் இரண்டொரு பள்ளிகள்"*

என்பதற்கிணங்கக் கலைநெறி பண்பினராக நகரத்தார் துலங்கினர். மூதறிஞர் செம்மல் வ.சுப. மாணிக்கனார் அண்ணாமலை அரசரின் அரும்பணியைக் குறிக்குங்கால்.

*"நண்ணார் காணவும், நாடு கேட்கவும்*
*பண்ணார் தமிழைப் படுகுழியெழுப்பியோன்*
*அண்ணாமலை"*

எனத் தமிழிசை மன்றம் நிறுவி, தமிழ்க் காப்புணர்வோடு செயற்பட்ட அரச வள்ளலின் அருஞ்செயலைப் போற்றினார்.

அழகப்ப வள்ளலைக் குறிக்குங்கால்,

*"கோடி கொடுத்த கொடைஞன்,*
*குடியிருந்த வீடுங்கொடுத்த விழுத்தெய்வம் தேடியும்*
*அள்ளிக் கொடுத்த அழகன்,*
*அறிவூட்டும் வெள்ளி விளக்கே விளக்கு" என்றும் கூறுவர்.*

இக் கலைக் கோயில்கள் பல்கலைக் கழகங்களாகத் திகழ்கின்றன.

மேலைச்சிவபுரியில் நிலவும் செந்தமிழ்க் கல்லூரி நகரத்தார் வளர்த்து மகிழும் தமிழ்ச் சங்கமாகும். ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாகக் கம்பர் கழகத்தைத் தொடங்கி இலக்கிய விழாக்களுக்கு எடுத்துக்காட்டாய், இளைஞரும், மகளிருமாக ஈண்டியிருந்து பட்டிமண்டபம், வழக்காடு மன்றம், கவியரங்கம், சிந்தனை அரங்கம் என்ற பல்வேறு நிலைகளில் காவியப் பாங்கினை நுகர்வதற்குக் கம்பர் அடிப்பொடி சா. கணேசர் வழிகாட்டிய நெறியில் நாடு எல்லாம் இலக்கிய அரங்குகள் விரிந்து பரந்து வளர்ந்துள்ளன.

ஆலை அரசர்களாக; அருந்தொழிற் செல்வர்களாக, விளங்கும் நகரத்தார் அரனடி மறவாது தொழுது போற்றும் சீலத்தாராவர். அண்ணாமலை, சோமசுந்தரம், சொக்கலிங்கம், காசி விசுவநாதன், பெரிய கருப்பன், பழநியப்பன், குமரப்பன், முத்தப்பன் என்ற பெயர்கள் செட்டி நாட்டில் மிகுதியாக விளங்கும் செந்தமிழ்ப் பெயர்களாகும். வாழும் இல்லத்தை நகர் என்று செப்பும் பண்டைய வழக்கம் நகரத்தார் வள மனைகளைக் கண்டே தோன்றியது எனலாம்.

*"காடுவெட்டிப் போட்டுக் கடிய நிலந்திருத்தி,*
*வீடு கட்டிக் கொண்டிருக்கும் வேள் வணிகர் - வீடுகட்கு*
*அன்றைக்குவந்த அம்மா இலக்குமியே,*
*என்றைக்கும் நீங்காதிரு"*

என்று "பாடுவார் முத்தப்பச் செட்டியார்" குறித்தது போலச் செல்வப் பெருக்கத்தோடும், செழுங்கிளை தாங்கும் உருக்கத்தோடும், வருவிருந்து

பார்த்துண்ணும் வழக்கத்தோடும், வண்மைக் குடிகளாக இன்றும் நகரத்தார் வாழ்கின்றனர்.

இறையன்பு, மொழிப்பற்று, ஆள்வினை ஆகியவற்றோடு நாட்டன்புமிக்க நல்லோராகவும் நகரத்தார் விளங்கினர், பாரதியாருக்கும், கவிமணிக்கும் நாமக்கல்லாருக்கும், பாரதிதாசனாருக்கும் வரவேற்பளித்தும், பாராட்டு நல்கியும், நாட்டன்பு புலப்பட நகரத்தார் விளங்கினர். காந்திய இயக்கத்துக்குச் சார்பாகக் கதர் ஆடையை விரும்பி மிகப்பெரிய அளவுக்கு விலை கொடுத்து வாங்கிய பெருமை காரைக்குடியையே சாரும்.

செட்டிநாட்டு நகரத்தார் செந்தமிழ்ப் புலமை வீறுமிக்கவர். "இம்மென்றால் இருநூறும் அம்மென்றால் ஆயிரமும்" பாடும் அடங்கா ஆற்றலர். கடல் மடை திறந்தது போலப் பாடும் ஆற்றல் மிக்க தமிழ்க் கடல் இராய. சொக்கலிங்கனார் உரையும் பாட்டும் நினைக்கத்தக்கன.

கரைகாணாக் கடலெனத் திகழ்ந்த பண்டிதமணி அவர்கள் மரபு சார்ந்த பெரும் புலமைக்கு மாமலையாகத் திகழ்ந்தவர். திருவ ாசகப் பேருரை வரைந்து, இருமொழிப் பெரும் புலவர் திலகமாய், நாடெங்கும் தமிழ்ச் சொல்மாரி பெய்த நற்றிருவினராய்த் திகழ்ந்து சன்மார்க்க சபையை நிறுவி நிலையான தமிழ்த் தொண்டுக்கு வகை செய்த பெருமை மகிபாலன்பட்டி பண்டிதமணி அவர்களையே சாரும்.

வானமாரியாய்ப் பொழிந்து, வையத்தார் இதழ் எல்லாம் வழக்கறாமல் நிற்கும் வீரப் பாடல்களை அள்ளித் தந்த கவியரசர் கண்ணதாசன் நகரத்தார் குலத் தோன்றலாவார்.

கண்ணதாசனார் வாழ்ந்தால் தமிழ் வாழும் என்றார் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன்.

மரபு வாய்ந்த புலமைத் தேர்க்கு அச்சாணி எனத் திகழும் நுண்மாண் நுழைபுலப் பண்மாண் மிக்க டாக்டர் வ.சுப. மாணிக்கனார் மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தின் தனிப்பெரும் துணை வேந்தராக அமர்ந்து அருங் கல்வித் தொண்டாற்றிய பெருமகனார் ஆவர். மாணிக்கனார் மரபு எனச் சுட்டுமாறு தமிழ் மாணவ மரபு நாடெங்கிலும் பீடுற விளங்குகின்றது. பழஞ் சொல்லாட்சி, புதுச் சொல்லாக்கம், உரை காணுந்திறம், ஆராய்ச்சி வன்மை, படைப்பிலக்கியப் பாங்கு, நாடகப் புனைவு, புதியன காணல் எனத் துறைதோறும், துறைதோறும் இறவாப் புது நூல்களை இயற்றிய பெருமை அண்ணல் வ.சுப. மாணிக்கனாருக்கே அமைந்தது.

பழைய நெறியோடு புதிய தமிழ்த் துறைகளிலும் தொண்டாற்றும் மாண்பு நகரத்தார்க்கு உரியதாகும். குமுதம் அண்ணாமலையாரும் கற்கண்டு தமிழ்வாணரும், பிள்ளைத் தமிழ் பாடிய அழ. வள்ளியப்பா அவர்களும் கால் நூற்றாண்டுக்கு மேலாக இதழியற் பணியாற்றி ஈடற்ற புகழ் படைத்தனர். இப்பெருமக்களின் பிறங்கடைகள் அவர் தம் தொண்டைத் தொடர்ந்து ஆற்றுவது இறும்பூது பயக்கின்றது. புரட்சிக் கவிஞர் பாரதிதாசனார் நூல்களை வனப்புற அச்சிட்ட பெருமை நகரைத்தாரையே

சாரும். இன்றும் நல்ல நூல்களை மதிப்புறப் பதிப்பித்து உலகமெங்கும் அறிவருவி பாயச் செய்யும் பணியை மேற்கொண்டு வரும் பாரி செல்லப்பனார், வானதி திருநாவுக்கரசு, மணிவாசகர் மெய்யப்பனார், பாரதி சிதம்பரனார், ஐந்திணை குழ. கதிரேசனார் ஆகியோர் அரும்பணி புரிந்தனர்.

உலகம் சுற்றும் தமிழராக வாழ்ந்த பெருமை திரு. ஏ.கே. செட்டியாரையும், திரு. சோமெலெ அவர்களையுமே சாரும். 'குமரி மலர்' இலக்கியப் புதையலாகவும், திரு. சோமெலெவின் எழுத்துக்கள் கருத்துக் களஞ்சியமாகவும் திகழ்ந்ததை நாடறியும். மதுரை காமராசர் பல்கலைக் கழகத் தமிழ்த் துறை பேராசிரியராகத் திகழ்ந்த முனைவர் தமிழண்ணலின் அளக்கலாகாப் பெருமையைத் தமிழுலகம் நன்றியோடு போற்றுகிறது.

கல்லார்க்கும் களிப்பருளும் வண்ணம் கல்வி மாண்பைக் காட்சிப்படுத்தும் திரைப்படங்களை வழங்கிய பெருமை நகரத்தார்க்கு என்றும் உண்டு. அண்ணல் ஏ.வி. மெய்யப்பர், ஏ.எல். சீனிவாசன், வலம்புரி சோமநாதன் போன்றோரும் இயக்குநர் செம்மல் எஸ்.பி. முத்துராமன், இராம. நாராயணன், பழ. கருப்பையா ஆகியோரும் வினைத்திறமிக்கவர்கள்

ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகத் தலைமுறைக்குத் தலைமுறை அறிவாற்றலும், வினையாண்மையும், சான்றாண்மையும், ஈகை, ஒப்புரவு முதலிய அருங்குணங்களும் தம் வரவாகக் கொண்ட குடியாக நகரத்தார் நற்குடி விளங்குகின்றது. விரிப்பிற் பெருகும் என்ற நிலையிலும், சுருக்கமாய்த் தொகுத்த வகையிலும், பல்வேறு துறைகளில் பார்முழுதும் புகழொடு மிளிர்ந்து ஒளிரும் மேதகவுடைய நல்லார் பலர் பெயரைக் குறியாது இக்கட்டுரை அமைகிறது.

பண்டுதொட்டுப் பழம்புகழையும், புதுப்பெருமையையும் சீரோடு வளர்த்து வரும் செந்தமிழ்க் குடியினராகிய நகரத்தார் புகழ் நாளும் நினைக்கத்தக்கதாகும்.

# சிவபிரான் கருணையும் சீவர்கள் கடமையும்

பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார்

மறை ஆகமங்களாலும், அவற்றின் முடிவு நூல்களாலும் பொதுவாகவும், சிறப்பாகவும் விளக்கப்பட்ட பதிப்பொருள் சிவபிரானே. வேத நெறி ஒழுகும் சமயத்தார் இதனைக் 'கடவுள்' என்றழைப்பர். கடவுள் என்னும் சொற்குப் பொருள் 'கடத்தல்' ஆதலின், இறைவனைக் 'கடந்தவன்' என்பர். சுட்டி அறியப்படும் காரிய உருவப் பிரபஞ்சத்தையும், அதனால் தத்துவதாத்துவீகங்களையும் கடந்தவர் என்ப.

முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்து நின்று, தன் பேராற்றலால் ஒவ்வோர் அதிகாரங்களைப் பற்றி நிற்கும் பிறதெய்வங்களை இயக்கும் பரம்பொருள் சிவபிரான் ஒருவரே. பிரபஞ்ச நிகழ்ச்சியின் நிமித்தம் ஒவ்வொரு தேவர்களையும் அதிட்டித்து நின்று படைப்பு முதலான அருள் தொழில்களைப் புரிபவர் அவரே. "சிவன் என்னும் நாமம் தனக்கே உடைய செம்மேனி எம்மான்" எனத் தமிழ்மறை கூறும் சிவபெருமானே முழுமுதற் பொருளாகும்.

**கருணையின் இலக்கணம்**

கருணை, தயை, இரக்கம், அருள் என்பன ஒரு பொருட்சொற்கள், தொடர்பு இல்லாதார் மாட்டும் ஏற்படும் மனநெகிழ்ச்சியே அருள் எனப்படும். பரமபதியாகிய சிவபெருமானுக்குரிய குணங்கள் எட்டனுள், பேரருள் உடைமை என்ற கருணைக்குணம் மிகவும் சிறப்பானது.

'அருள் என்னும் அன்பீன் குழவி' என்று வள்ளுவர் குறிப்பிடும் கருணையின் வடிவாகிய சிவபிரான் ஒருவரே, எல்லா உலகத்துமுள்ள எல்லா உயிர்களிடத்தும் ஒருங்கே கருணை காட்ட வல்லவர். பாற்கடற்கண் எழுந்த நஞ்சை உண்டு, யாவர்க்கும் தாம் தலைவர் என்பதையும், யாவரிடத்தும் கருணை செய்யத் தக்கவர் என்பதையும் உணர்த்தினார்.

**கருணைச் சிறப்பு**

சித்தொரு சத்தாய் நிற்கும் சிவபிரான் சச்சிதாநந்தப்பிழம்பாவர். பாசப் பிணைப்புடைய ஆன்மாக்கள் இந்நிலையை உணர்வது அரிது ஆதலின், ஆன்மாக்களின் பொருட்டு, கருணை காட்டி, அருவம், உருவம், அருவுருவம் என்று மூவகைத் திருமேனி உடையவராய் வெளிப்பட்டருளுவார். இது 'தடத்த நிலை' எனப்படும். "செப்பிய மூன்றும் நம்தம் கருமேனி கழிக்கவந்த கருணையின் வடிவுதானே" என்று கூறுவது போல இறைவனின் கருணை வடிவே, அவரது இடப்பாகம் பிரியாது உடன் உறைந்து விளங்கும் உமாதேவியாகிய சிவசக்தியாகும். "அருளது சக்தியாகும் அரன் தனக்கு" என்றுரைப்பர்.

நாம் நம் வினைப் பயனால் இப்பேரருட் பெருங்கருணையினால் பெறவேண்டிய பயனைப் பெறாது மாழ்குகின்றோம். இக்குற்றம் நம்மதேயன்றி, அக்கருணாநிதியின்

பாலதன்று. மேகம், வேறுபாடு கருதாது நிரந்தரமாக மழை பெய்தும், அந்நீரை மேட்டு நிலம் ஏற்காது ஒதுக்க, தாழ்வுநிலை ஏற்குமாப்போல, சிவபிரான் பரங்கருணைத் தடங்கடலாக இருந்தும், நம் தீய வினையாகிய அணை குறுக்கிட்டுக் கிடத்தலால், அக்கருணை வெள்ளம் நம்பாற் செல்லாது, உண்மை அன்பர் கூட்டமாகிய நற்றடத்தில் சென்று நிறைகின்றது.

**கருணை வகை**

சிவபிரானின் கருணைத் திறம் இருவகைப்படும். அவை, அறக்கருணை, மறக்கருணை என்பனவாம். தந்தை, செவ்விய நன்னெறிக்கண் ஒழுகுகின்ற ஒரு மகனை வேண்டுவன தந்து இன்புறுத்துகின்றான். தந்தை உரை கடந்து தீ நெறிக்கண் செல்லும் மற்றொரு மகனை அடித்துத் துன்புறுத்தி நன்னெறிக்கட் செலுத்துகின்றான். இவ்விருசெயலும் அன்பு பற்றியனவேயாம். இங்ஙனமே நம் பரமபதியின் செயலுமாம். தம்மிடத்து அன்பு பூண்டொழுகும் அடியார்களை, அவர் உவப்பன செய்து இன்புறுத்துவார். அன்பின்றி இருப்போரை ஒறுத்து, நன்னெறிக்கட் செல்லுமாறு அருள் பாலிப்பார்.

இவ்விரு செயல்களுக்கும் அவ்வான்மாக்களிடத்துச் சிவபிரான் வைத்த கருணையே காரணமாகும். இவற்றுள் முன்னையது அறக்கருணை. பின்னையது மறக்கருணை. இவ்வுலக பரிபாலனம் செய்யும் அரசியலை நோக்கினும் இவ்வுண்மை மிக எளிதில் விளங்கும்.

**கருணைப் பயன்**

இனி, அப்பெருமான் கருணையால் உண்டாம் பயனைச் சிறிது கூறுவல். ஆன்மாக்கள் அநாதி கேவலத்தில், ஆணவ மலத்தால் பிணிப்புண்டு, இருட்டறையில் கிடக்கின்ற கண்ணிலாக் குழவி போல, நினைவு செயல் அற்றுக் கிடக்குங்கால், ஆற்றல் பலவுடைய அவ்வாணவ மலத்தைக் கழுவுதற் பொருட்டுக் கன்மமல, மாயா மலங்களை அவ்வற்றிற்கேற்பப் பயனுறச் செய்து, சிறிது அறிவெழக் கண்டு, படைத்தல் முதலிய ஐந்தொழில்களையும் புரிந்து, இறுதியில் தம் திருவடி இன்பத்தை ஈதற்குக் காரணம், அவர்தம் அளவிலாப் பெருங்கருணையேயாகும்.

அப்பெருமானைக் காண்டற்கும் அவன் சுருசேர கண்ணாதல் வேண்டும். இயக்க வடிவுடன் வந்த பரம்பொருளாம் சிவபிரானை, அருட்சக்தியாகிய உமாதேவி காட்டக் கண்டு தெளிந்தான், இந்திரன் என்று கேதோபநிடதம் கூறுகிறது. "அவன் அருளாலே அவன் தாள் வணங்கி" என்றும், "அவன் அருளே கண்ணாகக் காணின் அல்லால்" என்றும், "ஆங்கவன் அருளால் பக்தி நன்குண்டாம்" என்றும் தமிழ் மறை பேசும்.

இறைவனை அடைவதற்கும் அவன்பால் பக்தி செலுத்துவதற்கும் அவன் அருள் வேண்டும் பக்தியால் பெறும் பெரும் பயன் சிவபிரானே.

**சீவகர்கள் தன்மை**

ஆன்மா எப்பொருளைச் சார்ந்து நிற்கிறதோ அப்பொருளின் வண்ணமாம் தன்மை உடையது என்பது வேதாகம சித்தாந்தத் தெளிவு. ஒரு பளிங்கு, செந்நிறத்தைச்

சார்ந்துழிச் செம்மையாகவும், கருநிறத்தைச் சார்ந்துழிக் கருமையாகவும் தோன்றுதல் போல-ஆன்மாவும் மல இருளில் கலந்துழி அதன் மயமாகவும், சிவ விளக்கத்தில் பொருந்துழிச் சிவமயமாகவும் விளங்கும். இதனை "ஆணவத்தோ(டு) அத்துவிதம் ஆனபடி மெய்ஞ்ஞானத் தாணுவினோ(டு) அத்துவிதம் சாருநாள் எந்நாளோ? என்பர் தாயுமானார்.

ஆகவே, தனக்கென ஒரு சுதந்திரமும் இன்றி, சார்ச்சிப் பொருள்களின் தன்மையை தன் தன்மையாகக் கோடல் ஆன்ம இலக்கணம். இன்னும் இச்சீவன் சகச மலமாகிய ஆணவத்தால் பிணிப்புண்டு, அதன் நீக்கத்தின் பொருட்டு. இறைவனால் தரப்பட்ட மாயா மல கன்ம மலங்களின் காரியங்களாகிய தனு, கரண, புவன, போகங்களைப் பெற்று, மாறி மாறிப் பிறக்கும் இயல்புடையதாம்.

மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் அந்தக் கரணங்களாகிய கருவிகளால், ஐம்பொறிகளின் வாயிலாகப் புலன்களை நுகர்ந்து, அதனால் மீண்டும் மீண்டும் வந்தேறுகின்ற கன்மங்களை உடைத்தாம். இன்பம் தருவனவற்றில் விருப்பும் துன்பம் தருவனவற்றில் வெறுப்பும் உடையதாகும். இது ஆன்ம இலக்கணம்.

**சீவர்கள் கடமை**

நமக்கு இரு கடமைகள் உண்டு. அவை உலகியற் கடமை, சமயக் கடமை என்பனவாம். அவற்றுள் சிவபிரானிடம் நாம் செலுத்த வேண்டிய சமயக் கடமையைக் காண்போம். சைவர்களாகிய நாம், நம் சமயக் கடவுளாகிய சிவபிரானை உண்மை அன்போடு வழிபட வேண்டும். இதர தெய்வங்களைப் பழித்தல் கூடாது. ஒரு பெண், தன் உயிர்க் கணவனைச் சிறப்பாகப் போற்றி, ஏனைச் சகோதரர் முதலியோரை இகழாது, பொது வகையால் உபசரித்தல் போல, நாமும் நம் சமயத் தெய்வத்தைச் சிறப்பு வகையால் போற்றி வணங்குதலோடு, மற்றையத் தெய்வங்களையும் இகழாது, அவரவர்க்கேற்றவாறு போற்றுதல் கடனாம்.

**தீக்கை**

சைவர்களாகிய நாம் நம் இறைவனை முறைப்படி வழிபடுவதற்கு இன்றியமையாது மேற்கொள்ளத்தக்கது தீக்கையாகும். தீக்கை இல்வழி திருவைந்தெழுத்துப் பெருமறை முதலியவற்றைச் செபித்தற்குக் கூடாமையானும் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நால்வகை நெறியொழுக்கம் பெறப்படாமையானும், அஃது இன்றியமையாததாகும். தீக்கையாவது, ஆன்மாக்களி டத்துள்ள சிவசக்தியை, வெளிப்படவொட்டாது தடையாக மறைத்து நிற்கும் மலசக்தியைக் கெடுத்து சிவத்துவத்தைக் கொடுப்பதாகிய சிவசக்திக் கிரியையாகும். மேலும் தீக்கையாலே வீடு முதலிய எல்லா நலன்களும் சித்திக்கும்.

இத்தீக்கை பலதிறப்படும். சமய தீக்கை பெற்று இறைவனது உருவத் திருமேனியைப் புறத்தொழில் மாத்திரையான் வழிபடுதலாகிய சரியையும், விசேட தீக்கை பெற்று, அருவுருவத் திருமேனியைப் புறத்தொழில், அகத்தொழில் இரண்டாலும் வழிபடுதலாகிய கிரியையும், அருவத் திருமேனியை நோக்கி

அகத்தொழில் மாத்திரையான் வழிபடுதலாகிய யோகமும், நிர்வாண தீக்கை பெற்று இம்மூன்றனையும் கடந்த உண்மை அறிவு இன்படி வடிவமாகிய இறைவனது சொரூபத்தை வழிபடுதலாகிய ஞான நிலையும் ஆகிய இந்நால்வகை நெறிகளுள், தம் தகுதிக்கேற்ப இயன்றது ஒன்றை அனுட்டித்து வருதல், ஒவ்வோர் ஆன்மாக்களுக்கும் உரிய கடமையாகும். அறநூல்களுள் கூறப்பட்ட அருள், கொல்லாமை, புலால் உண்ணாமை, கள் காமநீத்தல் முதலிய உயர்ந்த ஒழுக்கங்களெல்லாம் சைவ நெறிக் கண் அடங்கும்.

**இன்றியமையாக் கடமை**

நம் சமயக் கடவுளை சிவலிங்காதி திருமேனிகளிடத்தும், சிவனடியாரிடத்தும் இருப்பதாகக் கண்டு, விசேட அன்பைச் செய்மின்கள்; ஆலய வழிபாட்டையும் விக்கிரக ஆராதனத்தையும் இயன்றவரை இடைவிடாது செய்யுங்கள்; சமய நூல்களையும், கருவி நூல்களையும் நடுநிலையுடன் கற்று ஆராய்மின்கள்.

இறைவனை நோக்க, ஆன்மா ஒருவித சுதந்திரமும் இன்றிப் பரதந்திரம் உடையது ஆதலின், ஆணவ மலத்தால் பிணிப்புண்டு கிடக்கும் பெத்த காலத்தும், தனு கரணங்களைப் பெற்றுச் சிறிது அறிவு - விளக்கம் உற்று உபாசனாதிகளைச் செய்யும் மத்திய காலத்தும், மலசக்தி அறவே ஒழியப் பெற்றுச் சிவத்துவம் எய்திப் பேரின்பம் நுகரும் முத்திக் காலத்தும் தன்பால் இடைவிடாது அமைந்து கிடக்கும் அடிமைத் தன்மையை ஆன்மா கைவிடலாகாது.

“யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடையான், யாவர்க்கும் கீழாம் அடியேனை” என்றார் மணிவாசகப் பெருமான். நம் சமயக் கொள்கைகளில் முக்கியமானது இதுவேயாம். “தாழ்வெனும் தன்மையோடு சைவமாம் சமயம் சாகும் ஊழ்பெறல் அரிது” என்று சிவகரன சித்தியார், ஆணவமற்ற தாழ்மை நிலையை வலியுறுத்துகிறது. தாச மார்க்கம், சற்புத்திர மார்க்கம், சக மார்க்கம், சன் மார்க்கம் என்ற நான்கு நெறிகளில், தாசமார்க்கம் முதன்மையானது. வீட்டு நிலையிலும் ஆன்மா அடிமையாகவேயுள்ளது.

**அடிமை நெறிப்பயன்**

தாச நெறி முதலிய மூன்று நெறிகளிலும் ஒழுகுவோர், வீட்டின்பத்தில் விழுப்புற்று மேன்மேற் செல்வர். நான்காவதாகிய சன்மார்க்கத்து ஒழுகுவோர், அவ்விருபபடும் இன்றி தம் கடன் இது என உணர்ந்து, சிறிதும் முனைப்பின்றி அடங்கி நின்றால், சிவபிரானும் தன் கடனாகிய பேரின்பளித்தலை விரைந்து செய்வார்.

எல்லாம் அவன் செயலே அன்றித் தன் செயலன்று என்று உணர்ந்து அருள்வழி நிற்பின், அதனால் செய்யப்படும் கன்மங்கள் அதனைச் சாரா. நான் செய்கின்றேன் என்று கருதும் போது ஆன்மாவைக் கன்மம் தாக்கும் வீட்டு நிலையில், யான் எனது என்னும் இருவகைப் பற்றும் இன்றி, எல்லாம் அவன் செயல் என்று உணர்ந்து, அருள்வழி நிற்றலால் அக்காலத்துச் செய்யப்படும் கன்மங்கள அவ்வான்மாவைத்

தாக்கா. பிராரத்த வினையை அனுபவித்தே தீர்க்க வேண்டும் எனினும், அஃது உடல் ஊழாய்க் கழியுமின்றி, உயிர்க்கு இன்ப துன்பங்களைச் செய்யாது.

எனவே, திருத்தொண்டை இயன்ற வரை செய்தலே சீவர்களின் முக்கிய கடமை என்று உணர்ந்து, எம்பெருமானிடத்து எஞ்ஞான்றும் அன்புப் பணிபூண்டு ஒழுகுமின்கள்; பயன் செய்வது அவர் கடமை என்பதை உறுதியாக நம்புமின்கள்; சிவபிரானாகிய பரம பிதாவினது பேரானந்தப் பெருஞ்செல்வத்தைப் பெறுவதற்குரிய மக்கள் நாமே என்றுணர்ந்து பெற்று இன்புறுங்கள்!

திருநாவுக்கரசு சுவாமிக்ள் தேவாரத்தில் "தன் கடன் அடியேனையும் தாங்குதல் என் கடன் பணி செய்து கிடப்பதே" என்று கூறியுள்ளார். இந்த இரண்டு அடிகளில் முதல் அடி சிவபிரான் பெருங்கருணையையும், இரண்டாம் அடி சீவர்களின் கடமையையும் புலப்படுத்துகின்றன.

சைவ சமயமும், சிவ தருமமும், தமிழ் மொழியும் நீடு வாழ்க!

## GITANJALI

### L X X X III

*Mother, I shall weave a chain of pearls for theny neck with my tears of sorrow.*

*The stars have wrought their anklets of light to deck they feet but mine will have of upon they breast.*

*Wealth and fame come from thee and it is for thee to give or to with hold them. But this my sorrow is absolutely mine our and when I bring it to hee as my offering them rewardest me with they grace.*

RABINDRANATH TAGORE.

# கற்போம் தமிழைக் கற்பிப்போம்

முனைவர் தமிழண்ணல்

நம் இல்லந்தோறும் இம் முழுக்க வாசகத்தை அச்சியற்றித் தெரியுமிடத்தில் பொருத்தி வைக்க வேண்டும். இச் சொற்கள் இனி நம் உள்ளத்தில் எதிரொலித்தவாறு இருக்க வேண்டும்.

முகவரி இல்லாத மனிதன் போக்கிடமற்றவன். அவனைச் சார்பற்றவன் – 'அனாதை' என்பார்கள். 'நீ யார்' என்றுதான் புதிய ஒருவரை யாரும் கண்டதும் வினவுவர். 'நான் இன்னார்' என்று நம் பெயரையும் முகவரியையும் ஏன் சொல்கிறோம்? நம்மை அவை அடையாளம் காட்டுகின்றன. இன்னும் சொன்னால், நன்கு உலகறிந்த ஒருவர் பெயரைக் குறிப்பிட்டு, 'நான் அவருக்கு உறவினன்' என்று சுட்டிச் சொல்கிறோம். இன்னார் என்ற அடையாளத்தை இழந்துவிடுவது நம்மை நாம் இழந்துவிடுவதாகும்.

தமிழர்கள் தங்கள் அடையாளத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக இழந்து வருகின்றனர். இதனால் அவர்களுக்கும் நன்மையில்லை; உலகினுக்கும் பயனில்லை.

தமிழனின் மொழி, இலக்கியம், பண்பாடு, நாகரிகம் யாவும் மிகத் தொன்மையானவை; மிகச் சிறந்தவை. இத்தகைய இன அடையாளத்தை இழப்பது, பேரிழப்பாகும்.

தமிழனை அவனுடைய உடையால் இனங்காணலாம். அவனுடைய பேச்சுடை, பழக்கவழக்கம், உணவுமுறை, இயல்புகள் அவனை எளிதில் இனங்காட்டிவிடும். எல்லாவற்றுக்கும் மேலாக, அவனை இனங்காட்டுவது அவனுடைய மொழிதான். முற்கூறிய இலக்கியம், பண்பாடு, நாகரிகம் எல்லாம் அவனுடைய மொழியில்தான் பேணிக் காக்கப்பட்டுள்ளன. அவற்றினுடைய தொடர்ச்சியும் மொழியால்தான் இன்றுவரை உயிர்ப்புடன் உள்ளன. எனவே தமிழ்மொழியைக் கற்பதே, அவன் தன்னை உள்ளும் புறமும் இன அடையாளம் காட்டிக் கொள்ள வலிமையுள்ள வழியாகும்.

**'தமிழன் தமிழனாக வாழத் தமிழ்க் கல்வி பெறவேண்டும்'**

இந்த அடிப்படையை ஒவ்வொரு தமிழனும் உணரவேண்டும். தமிழகத்தில் புற்றீசல்போல் பல்கிவிட்ட ஆங்கிலவழி மெட்ரிகுலேசன் பள்ளிகளால் இம் முழக்கம் தமிழகத்திலேதான் மிகவும் தேவைப்படுகிறது. மற்ற நாடுகளிலெல்லாம் தமிழ் படிப்பதால் பொருள் வருவாய், பதவி வாய்ப்பு இல்லையென்பதால் தமிழர்களே தமிழைப் படிக்காமல் புறக்கணிக்கும் நிலையும் உளது.

இச்சூழலில்தான் **'உலகத் தமிழ்க் கல்வி மையமும்'**, அதன் வழி 'தமிழ் கற்றல்' இதழும் தோன்றியுள்ளன. இவற்றின் வழி இவ்வடிப்படைப் பணி பற்றி ஒரு விழிப்புணர்வை ஏற்படுத்தவேண்டும். பற்பல நாடு, இடச் சூழலுக்கேற்ப வழிகாட்டித் துணை நின்று உதவுவதும் ஆக்கவழிச் செயற்பாடுகட்குத் தோற்றுவாய் செய்வதும் தமிழ்வளர்ச்சிக்கு உறுதுணையாக இருக்குமென நம்புகிறோம்.

செயலில் இறங்கியுள்ள எங்களுக்கு வரவேற்பும் ஒத்துழைப்பும் கிடைக்குமென்ற உறுதியுள்ளது. சிங்கப்பூர்த் தமிழாசிரியர் சங்கம், ஓர் உலகத் தமிழாசிரியர் மாநாட்டை, அரசிடம்

பணஉதவி எதையும் எதிர்பாராது, தனது காலில் நின்று நடத்தியுள்ளது. இவ்விதழ் பற்றிய முயற்சியும் அம் மாநாட்டிற் கருக்கொண்டதேயாகும். எனவே இம் மையமும் இதழும் அதே நெறியில், 'தமிழர்களால் தமிழர்களுக்கு நடத்தப்படும் தமிழ்ப்பணியாக' நடத்தப்பெறும். எனவே இதில் நாமே நமக்கு உதவி செய்து கொள்ள வேண்டும்.

இதுவரை எத்தனை உலக தமிழ் மாநாடுகள் நடத்தியுள்ளோம்? நம் தலைவர்கள் எத்தனை அறிவிப்புக்கள் செய்து, எத்தனை தடவை மக்கள் கையொலி பெற்று மகிழ்ந்திருக்கிறார்கள்? எத்தனை தீர்மானங்கள் நிறைவேற்றி இன்பம் அடைந்துள்ளோம்? அவற்றுள் ஒன்றாவது நடைமுறைக்கு வந்ததா? இவ்வாறு எண்ணிப் பார்த்தால் தமிழன் வெட்கத்தால் தலைகுனிய நேரும்.

மற்ற மொழியினர் இவ்வாறு முழக்கமிட்டு, ஆரவாரம் செய்யாமலே அடிப்படைப் பணிகளை மேற்கொண்டு நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாகத் தத்தம் மொழிகளை வளர்த்து வருவதையும் கண்ணால் பார்க்கிறோம்.

இவற்றைக் கண்டு தமிழன்னை மனம் வெதும்பி நிற்கிறாள். ஒருவருக்குப் பல நன்மைகளைச் செய்வதாகச் சொல்லிச் சொல்லி ஏமாற்றினால், அவருக்குச் சினம் பொங்கி எழாதா? தமிழர்களாகிய நாம் இதுவரை செய்த குற்றங் குறைகளால்தான், தமிழினம் இன்று பல்வேறு நாடுகளிலும் புறக்கணிக்கப்பட்டு அல்லலுறுகிறது.

தமிழன்னையை உண்மையாகப் போற்றி, வழிபட்டுப் பணிசெய்யும் நாளே நாம் உய்தியடையும் நாளாகும். இந்நிலையில், நாம் செய்ய இருக்கும் அடிப்படைப் பணிகளை எண்ணிப் பார்த்து, ஒரு திட்டம் வகுத்துக் கொண்டு, செயலில் இறங்குவோம். முடிந்தவரை, உதவியும் ஒத்துழைப்பும் கிடைப்பதற்கேற்ப நடப்போம்! நம் உள்ளுணர்வெல்லாம் செயல், செயல், செயல் என்றே அமையட்டும்.

தியாகத்தால்-தன்னைத் தானே கரைத்துக் கொள்ளும் சந்தனமாக நாம் மாறுவோம்! நமது பெயர், புகழ், சிறப்பைவிட நமது மொழி இன நாகரிகத்தின் சிறப்பே முதன்மையானது என மனத்திலிருத்துவோம்!

**தமிழொளி இயக்கம்**

எல்லோர்க்கும் எழுதப் படிக்கக் கற்றுத்தரும் 'அறிவொளி இயக்கம்' இன்று தமிழகத்தில் நன்கு செயல்படுகிறது. நாம் உலகளாவிய நிலையில், தமிழர் அனைவருக்கும் நூற்றுக்கு நூறு விழுக்காடு தமிழ் அடிப்படைக் கல்விதர அதாவது தமிழில் பேச எழுதக் கற்றுத்தர அனைத்து முயற்சியும் எடுப்போம். இத் 'தமிழ் ஒளி இயக்கம்' வெற்றிபெற, வெற்றிபெற நாடுநாடாக-நாட்டின்கண் பகுதி பகுதியாக - பகுதியின்கண் ஊர் ஊராக - ஊரின்கண் வீடுவீடாக வெற்றிவிழா எடுப்போம்!

**தமிழன்னை வழிபாடு**

காரைக்குடியில் கம்பன் மணிமண்டபத்தில் தமிழ்த்தாய்க்குக் கோயில் எழுப்பப்பட்டுள்ளது. அதனைப் பின்பற்றி உலகெங்கும் தமிழன்னை திருக்கோயில்கள் தோற்றுவிக்கப்பட வேண்டும். சிறு அளவில், மண்டபங்களில் வைத்து வழிபடலாம். சாதிமத வேறுபாடின்றி வழிபாடு செய்ய வேண்டும்.

தமிழ்த் தாய்க்கு மலர் வழிபாடு, திருவிளக்கு வழிபாடு, பள்ளி எழுச்சி, பாவை நோன்பு, பத்துநாள் திருவிழா என்று இவ்வாறு திட்டமிட்டு, மகளிரும் இளையரும் தொழிலாளரும் அலுவலரும் கூலியாளும் ஏழை எளியரும் கலந்து கொள்ளும் வழிபாடுகளை நாம் உலகெங்கும் உடனே தொடங்க வேண்டும். அவற்றிற்கான 108 போற்றிகள், பாவை, பள்ளியெழுச்சிப் பாடல்கள், தொகுக்கப்பட வேண்டும்; புதியனவாகப் படைக்கப்பட வேண்டும். தமிழ், தமிழிலக்கியம், பண்பாட்டின் பெருமைகளை ஒவ்வொரு கடைசித் தமிழனும் உணரச் செய்ய இதைத் தவிர வேறு வழி இல்லை.

**பள்ளிக் கல்வி மேம்பாடு**

மழலையர் பள்ளி முதல் மேனிலைப் பள்ளிவரை தமிழ்க் கல்வியை மேம்படுத்த, எத்தனையெத்தனை நெறிமுறையுண்டோ அத்தனையும் கண்டு கொள்ளப்பட வேண்டும்; அவை நிரலே கடைப்பிடிக்கப்பட வேண்டும். இதுவே நம் தலைமையான மொழிப் பணியாகும். வகுப்புநிலைகட்கேற்ப வெவ்வேறு பாடமேம்பாடு பற்றிய கருத்துரைகள், மாணவர் கையகராதி முதலிய துணை நூல்கள், பயிற்று கருவிகள் பற்றி ஆராய்ந்து உருவாக்குதல் எனும் துறைகளை நோக்கிச் செயற்பட வேண்டும். ஆசிரியர்கட்கு என வழிகாட்டி நூல்கள், தமிழ்மொழி இலக்கியம் பண்பாடு பற்றிய சிறுசிறு கையேடுகள் போல்வன உருவாக்கி உலகமெங்கும் பரப்பப்பட வேண்டும்.

**தமிழ்க் கல்வி வளர்ச்சி ஆய்வுகள்**

மொழியியல், மரபிலக்கணம், இலக்கியம் போல்வனவற்றின் மூலமாகத் தமிழ் மொழியையும் இலக்கியத்தையும் பண்பாட்டையும் கற்பிக்கும் நெறிமுறைகளை ஆராயவேண்டும். இம் முயற்சிகள் பயன்பாட்டு ஆய்வுகளாக மலர வேண்டும்.

அமெரிக்க நாட்டு ஒப்பியலறிஞர் ரெனே வெல்லக்கு உணர்ந்து அனுபவிக்க வேண்டிய இலக்கியத்தை, அறிவியல்வழி ஆராயலாமா என்ற கேள்வியை எழுப்பிக் கொண்டு இரண்டும் முரண்பட்டவை அல்ல, ஒன்றற்கொன்று துணைநிற்கக் கூடியவை என மிக விரிவாக விளக்கியுள்ளார். அவரது 'இலக்கியக் கொள்கை' நூலின் முதல் கட்டுரை இதை அலசி ஆராய்கிறது.

மொழியை அறிவியல்வழி அணுகுவது பாராட்டுகுரியது. அதே சமயம் மொழியானது உணர்வோடும் வாழ்வோடும் உறவுடையது என்பதையும் நாம் உணரவேண்டும்.

முற்குறிப்பிட்டது போலத் தமிழன்னை வழிபாடு, தமிழ் ஒளி இயக்கங்கள் மூலமாகத்தான் தமிழகம் முதற்கொண்டு உலகமெங்கும் ஒவ்வொரு தமிழனையும் தமிழுணர்வுடையவனாக ஆக்கவியலும். தமிழைப் பரப்பவும் நிலைபெறுத்தவும் இவை உதவும். மறுபுறம் அறிவியல் வழி ஆய்வுகளால் நாம் புதிய நெறிமுறைகளைக் கண்டு, அவற்றைப் பயன்படுத்தி, தமிழ் மொழிக் கல்வியை மேம்படச் செய்யவேண்டும்.

இங்ஙனம் உணர்வையும் அறிவையும் ஒருங்கிணைத்து, உலகமெங்கும் தமிழ் தழைக்கச் செய்வோம்! பேச்சைக் குறைத்துச் செயலை மிகுவிப்போம்! ஆரவாரத்தைத் தவிர்த்து அடக்கமாகப் பணிசெய்வோம்! சொல்லியும் செய்யார் கயவரே' என்ற பழியை அகற்றிச் 'சொல்லாமலே செய்வர் பெரியர்' என்ற பண்பை வளர்ப்போம். 'இயன்றவரை தமிழுக்காக வாழ்வோம்' என்பதே, இப்போது நாம் தொடங்கும் 'தவம்' ஆகும்.

# சைவம் வளர்க்கும் நகரத்தார்

பேராசிரியர், க. வெள்ளை வாரணனார்

தமிழ் வேந்தர்களும், வள்ளல்களும் இன்றி தமிழகம் அல்லல் உழந்த அடிமைக் காலத்தில், தமிழ் மொழிக்கும் தமிழக சமய வளர்ச்சிக்கும் ஆக்கமாகும் பணிகளை அயர்வின்றிச் செய்த பெருமை, புகழ் வணிகப் பெருமக்களாகிய நாட்டுக்கோட்டை நகரத்திற்குரிய தனிச் சிறப்பாகும். வணிகத் துறையில் பொருளை ஈட்டுதல், காத்தல், நல்லறங்களுக்குச் செலவிட்டு மகிழ்தல் ஆகிய குறிக்கோளுடன் வாழ்ந்தவர் வணிகப் பெருமக்களாவார்.

கடல் கடந்து ஈழை நாடுகளுக்குச் சென்று வணிகம் புரிந்து பாண்டி நாட்டிலே வந்து தங்கிய நகரத்தாராகிய செந்தமிழ் வணிகப் பெருமக்கள் 'தாழ்விலாச் செல்வர்' என்னும் திருக்குறளுக்கு இலக்கியமாக திகழ்ந்து நம் நாடு வளம் பெறச் செய்த அறப்பணிகள் பலவாகும்.

தமிழகத்தில் வேந்தர்களால் கட்டப்பெற்ற திருக்கோயில்கள் பல சென்ற பத்தொன்பதாம் நூற்றாண்டில் பழுது பார்ப்பாரின்ச் சிதைவுற்று அழிதல் கண்டு, அச்சிதைவு நீக்கி அவற்றைக் கருங்கல் தகளிகள் ஆக்கி குடமுழுக்கு விழா நிகழ்த்தி, நாள் வழிபாட்டிற்கும் திருவிழாவுக்கும் வேண்டுவன நல்கியும், பசுமடம் அமைத்தும் வேத பாட சாலைகள். சத்திரம் முதலியன அமைத்தும் தெய்வத் தமிழ் வாழ தேவார பாடசாலைகள் நிறுவியும், உயர்நிலைப்பள்ளி, கல்லூரி, பல்கலைக்கழகம், என கல்வி நிலையங்கள் பல அமைத்தும் நாட்டு மக்கள் அனைவருக்கும் நலந்தரும் வகையில் நகரத்தார் செய்த திருப்பணிகள். தமிழ் மக்களால் நன்றியுடன் போற்றத்தக்கனவாகும்.

சென்ற நூற்றாண்டில் தமிழகத்தில் சிதைவுற்றிருந்த திருக்கோயில்களைப் பல நூறாயிரம் பொருள் செலவு செய்து நகரத்தார் ஆகிய வணிகப் பெருமக்கள் திருப்பணி செய்திலராயின் தமிழகத்தின் திருக்கோயில்கள் பல இன்று நாம் காணும் தோற்றப் பொலிவுடன் நிலைபெற்றிருத்தல் இயலாது.

சைவப் பெருமக்களால் கோயில் எனப் போற்றப் பெறும் தில்லைச் சிற்றம்பலமாகிய சிதம்பரம், மதுரை திருஆலவாய் திருவானைக்கா, திருவண்ணாமலை, திருக்காளத்தி, திருப்பாதிரிப்புலியூர், திருவிடை மருதூர் முதலிய பெருந்திருக்கோயில்கள் பல நகரத்தார்களால் புதுப்பொலிவு பெற்றுத் திகழ்தலை யாவரும் நன்குணர்வர். இவ்வாறு பழைய திருக்கோயில்களைச் சிதைவுற்று அழியாது, பெரும் பொருள் செலவிட்டு பழுது பார்த்தும் பழந்தமிழர் கட்டிடக் கலையினையும், சமய ஒழுக்கத்தையும் போற்றிப் பாதுகாத்த செந்தமிழ் வணிகராகிய நகரத்தார் மரபுக்கு தமிழகம் என்றும் நன்றிக் கடப்பாடுடையதாகும்.

# சிவபணி

புலவர் மு. சேதுராமன்

*10-09-73 அன்று மலேசியா - கோலாலம்பூர் ஸ்ரீ மஹா மாரியம்மன் தேவஸ்தான திருக்குட நன்னீராட்டு விழாவை முன்னிட்டு வெளியிட்ட சிறப்பு மலரில் வந்த கட்டுரை.*

*கட்டுரை ஆசிரியர்: புலவர் மு. சேதுராமன், தலைமை நிர்வாகி, தமிழ் நேசன் நாளிதழில் பணியாற்றினார்கள். இப்பொழுது ஓய்வு பெற்று ஊரில் - சென்னையில் இருக்கிறார்கள்.*

நீராரும் கடலுடுத்த இந்நிலவுலகத்தைச் சேரும் சீராரும் பெருமைகள் ஏராளம் முப்பெருங் கடவுளருள் படைத்தற் கடவுள் பிரமனும், காத்தற் கடவுள் திருமாலுங்கூட மண்ணுலகின் மகத்துவம் பற்றிப் பேசுவதாக மணிவாசகப் பெருமான் கூறுகிறார். "புவனியில் போய்ப் பிறவாமையில் நாள் நாம் போக்குகின்றோம் அவமே; இந்தப் பூமி சிவனுய்யக் கொள்கின்றது" என்ற சொற்கள் பூவுலகில் சிவனருள் பொங்கி ஓடுகிறது என்பதைப் புலப்படுத்துகின்றன.

"வானிடத்தவரும் மண்மேல் வந்து அரன்தனை அர்ச்சிப்பார்; ஊனெடுத்துழலும் ஊர் ஒன்றையும் உணரார் அன்றோ? என்று சிவஞான சித்தியார், மண்ணுலகில் சிவனருள் விரிந்து கிடப்பதைக் காட்டுகிறது. அரனுக்கு உகப்பான இடம்-அருள்பெற எளிதான இடம் என்று வானவரும் இறங்கிவந்து மண் மேல் வாழ ஆசைப்படும் போது, ஊன் சுமந்து உழலும் ஊமையராகிய மனிதர், இந்தப் பெருநிலத்தின் பெருமையினை அருமையினை அறியாமல் வாணாளை வீணாளாய்க் கழிப்பது பற்றியும் கவலை தெரிவிக்கிறது சித்தியார்.

மாண்பு நிறைந்த இந்த மண்ணுலகில், எண்ணற்ற மாந்தர்கள் பிறந்தார்கள் - வாழ்ந்தார்கள் - இறந்தார்கள் - பிறப்பின் எண்ணிக்கையைக் கூட்டி, இறப்பின் தொகையையும் அதிகரித்துக் காட்டினார்கள். அவர்களுள், விரல் விட்டு எண்ணக்கூடிய ஒரு சிலர்தாம் "மனிதர்" என்ற அடையாளத்தைப் பதிப்பித்தார்கள் - தாம் மறைந்தாலும் தம் பெயர் மறையாதிருக்குமாறு நிலை நிறுத்தி விட்டுச் சென்றார்கள். அவர்களைத்தான் நாம் "புகழுடம்பு எய்தினார்கள்" என்று சொல்கிறோம். அவர்கள் "மாண்டார்கள்" என்று சொன்னாலும், "மாட்சிமைப் பட்டார்கள்" என்பதுதான் பொருள்.

எஞ்சியோர் தொகை எண்ணில் அடங்காது. ஆனால் அவர்கள் யார் என்ற அடையாளமே தெரியவில்லை. ஏனென்றால், அவர்கள் உண்டு சுகித்து உறங்கி மறைந்தவர்கள், கடலுள் துளியாகக் கலந்து கரைந்தவர்கள், பிறர்க்குப் பயன்பட்டு வாழாதவர்கள்; தம் பெயர் நிறுவ எதுவும் ஆற்றாதவர்கள்.

பிறந்தவர் யாவரும் இறப்பது உறுதி. ஆனால் அரிய - பெரிய - இனிய மனிதப் பிறவியை எய்தியவன், விலங்கினின்றும் தமக்குரிய சிறப்பறிவால் விலகி நின்று, அறிவுடையவன் என்பதற்கேற்ப வாழ்ந்து காட்ட வேண்டும். "மனிதன் ஏன்

பிறந்தான்?; பிறவிப் பயன் என்ன?" என்றெல்லாம் வினாக்கள் எழத்தானே செய்யும்? ஒரு சிலர் அறுசுவைக்கு மேலாக ஆக்கிப் படைத்து, ஆறு வேளைக்கு மேல் உண்பதைப் பார்த்தால். உண்ணத்தான் மனிதன் பிறந்தானோ என்று தோன்றும். விதம் விதமாகக் கண்ணைக் கவரும் எண்ணற்ற வண்ணங்களில் ஒரு சிலர் அணி, மணி, பணி, ஆடைகளை வேலைக்கொன்றாக அணிந்து கொள்வதைப் பார்த்தால், மனிதன் அணியப் பிறந்தவனோ என்று தோன்றும். மனத்தை மயக்கும் இன்பங்கள் எத்தனை வகை உண்டோ, அத்தனை வகைகளையும் ஒரு சிலர் அனுபவிக்கத் துடிப்பதைப் பார்க்கும்போது, அனுபவிக்கத்தான் அவன் பிறந்தானோ என்று தோன்றும். நெடுந்துயில் கொண்ட கும்பகர்ணனைப் போல், ஒரு சிலர் நிலை கண்டால், அவர்கள் உறங்கப் பிறந்தார்களோ என்று தோன்றும். இவைகளெல்லாம் மனிதன் வாழ இன்றியமையாத் தேவைகள் என்றாலும், இவைகளில் அளவு வேண்டும் என்று நமக்குத் தோன்றும்.

இவ்வாறு வாழ்க்கை நமக்குப் பலவாறாகத் தோன்றுவது போலத் திருவள்ளுவருக்கு ஒன்று தோன்றியது. "தோன்றில் புகழொடு தோன்றுக" என்பதுதான் அது. ஒருவன் பிறந்தால், புகழ்பெறக் கூடியவனாகப் பிறக்க வேண்டும்; பிடு பெற முடியாவிடில் பிறவாதிருக்க வேண்டும் என்பது அவர் கருத்து. புகழ் வேண்டும் என்று சொன்ன அவர் அதுபெறும் வழியையும் காட்டுகிறார். "ஈதல், இசைபட வாழ்தல் அதுவல்ல(து) ஊதியம் இல்லை உயிர்க்கு" என்று அறுதியிட்டு உறுதியாகக் கூறுகிறார்.

பொருளுடையான் பொருளையும், அறிவுடையான் அறிவையும், வலியுடையான் உடல் உழைப்பையும், வாக்குத் திறனுடையான் வாய்ச் சொல்லையும் இவ்வாறு நம்மிடம் எது இருக்கிறதோ அதை, அப்பொருள் இல்லாதவருக்கு வழங்க வேண்டும். அதன் மூலம் புகழ்படைத்து வாழவேண்டும். இதுதான் உயிர் அடையக் கூடிய பயனாகும்; பிறர்க்கு உபகாரியாக வாழ்வதே பிறவிப் பயன் என்பது வள்ளுவர் கருத்து. நீதி நூற்கருத்து இவ்வாறிருக்க, "மனிதன் ஏன் பிறந்தான்?" என்ற வினாவுக்குச் சைவ சமயம் என்ன பதில் கூறுகிறது என்பதைக் காண்போம்.

"தலையில் நிலவணிந்த சங்கரனின் அடியார் திருக்கூட்டமாகிய சங்கமங்களுக்கு அமுது செய்வித்து, அவர்கள் சிவப்பணியைத் தடையின்றித் தொடர உதவுவதும், கண்ணுதலானுக்கு எண்ணரும் விழாக்கள் ஏற்படுத்தி, உண்ணெகிழும் அவரது திருப்பொலிவினைக் கண்ணினால் கண்டு மகிழ்வதுமே, மண்ணில் பிறந்தார் பெறும் பெரும் பயன்" என்று சைவ சமயாச்சாரியார் நால்வருள் ஒருவராகிய திருஞான சம்பந்தப் பெருமான் திருவாய் மலர்ந்தருளியுள்ளார். இவைகளை உறுதியாகக் காட்டி, "இவைகள் உண்மையானால் உயிருடன் எழுக" என்று கூறிப் பூங்கோதையை எழுப்புவதன் மூலம், இந்த அறச் செயல்களின் உண்மையைப் புலப்படுத்துகிறார் அவர்.

மனிதன் உய்யச் சிவபணி செய்ய வேண்டும் என்பதை வேறொரு கோணத்தில் நின்று காட்டுகிறார், மற்றொரு சமய குரவராகிய அப்பர் சுவாமிகள். மனிதராய்ப் பிறந்தவர்கள். நாதனின் திருப்பெயர் இணைந்த "நமசிவாய" என்னும் ஐந்தெழுத்து

மந்திரத்தை நாத்தழும்பெற ஓதவேண்டும்; செக்கர் வண்ணரான சிவபிரானின் திறத்தை - திருப்புகழைத் திக்கெட்டும் எட்டுமாறு பேசவேண்டும்; திருக்கோவில் வலம் வந்து சேவித்து நிற்க வேண்டும். வண்ண மலர் பறித்து வழிபட்டுப் பின் உண்ணவேண்டும்; பவப்பிணி அகலத்தவப்பயனாய திருவெண்ணீறணிய வேண்டும். இந்தத் தெய்வத் திருப்பணிகளை எக்காலமும் இடையீடின்றிச் செய்பவர்களே மனிதர்கள். மற்றையோர், உருவத்தால் மனிதரைப் போலவே காணப்பட்டாலும்கூட, அவர்களை “மனிதர்” என்று மதித்தற்குரிய செயல்களைச் செய்தாரில்லை. அருள்பெறாத அவர்கள் நிலை, பிறர் கண்டு இரங்கத்தக்கது. பெருநோய்கள் உடலைப் பெரிதும் வருத்துமாறு, பிறந்து, பிறந்து வினைப் பயனை அனுபவித்துப் பின் இறப்பதற்காகவே பிறந்தவர்கள் அவர்கள். பிறவிப் பயன் உணராப் பிறவிகளாகிய அவர்களைப்போல் அல்லாமல், எடுத்த பிறவி கடைத்தேறுமாறு, ஆண்டவன் அளித்த ஐம்பொறிகளாலும் அவனுக்கே தொண்டு செய்து, நன்றிக் கடனைச் செலுத்தி உய்ய வேண்டும் என்பது அப்பர் சுவாமிகள் கருத்தாகும்.

நிலைத்ததொரு பெருநிலையை அடைய வேண்டுமானால், என்றும் பேரின்ப நிலையில் நிலைத்திருக்க வேண்டுமானால், அகக் கரணங்களாலும் புறக்கரணங்களாலும் அவனுக்குத் தொண்டு செய்து, உய்ய வேண்டும் என்பது அப்பரது அருள்வாக்கு. சிவபிரானின் திருக்கோவில் தினமும் புக்கு, பொழுது புலருமுன் பெருக்கி, மெழுகி, பூமாலைகளைப் புனைந்து அணிவித்து, அலங்கரித்து, பாக்கள் பல பாடி, கும்பிட்டுக் கூத்தாடி, “ஆதியே போற்றி, சங்கரா போற்றி! ஆருரா போற்றி!” என்று அலறி உருகி நிற்க வேண்டும் என்று நமக்குச் “சரியை நெறி”யைக் காட்டுகிறார் அவர். உணர்த்திய வழியில் உள்ளம் இணைந்து, உலகுபுகழ் உத்தமனுக்கு உழவாரத் தொண்டு செய்து வாழ்ந்து காட்டிய மெய்யடியார் அவர். ஆண்டவனின் திருமுன் அடிமையாக நின்று, அரனுக்குத் திருத்தொண்டு செய்து, அவனிடம் அன்பு காட்டி நெக்கு நெக்குருகினால், அவன் அவசியம் வசப்படுவான் என்பது அப்பர் காட்டிய “தாச நெறி” ஆண்டவனை ஆண்டானாகக் கருதி, நாம் அடிமையாக நின்று, பணிசெய்து பணியும் அந்தத் “தாசநெறி“ நமக்கு மிகமிக ஏற்புடையதாகும்.

இறைவனிடம் நாம் செலுத்தும் அன்பைப் “பக்தி” என்று அழைக்கிறோம். அன்பு என்பது நமக்குத் தொடர்புடையாரிடம் காட்டும் மனநெகிழ்ச்சி ஆகும். அந்த அன்பே மனைவியிடம் காதலாகிறது மகனிடம் பாசமாகிறது - தோழனிடம் நட்பாகிறது ஏழையிடம் இரக்கமாகிறது பிற உயிர்களிடம் பரிவு ஆகிறது.

இந்த அன்பு வகைகளில், குடும்பத்தாரிடம் காட்டும் அன்பு, உடம்பால் உள்ள தொடர்பு காரணமாக ஏற்படுவது. உடம்பு அழிந்தால் இதுவும் அழிந்துவிடும். ஆகவே, இது நிலைத்த துணையன்று. தன்பால் தனக்குள்ள அன்பு மற்றொரு வகையாகும். தன் உடலைப் பேணாதவர் யார்? தன்னை மட்டுமே தான் நம்பி, அன்பு செலுத்துவது இதன் தன்மையாகும். ஆனால், வசமிழந்து மயங்கிய நிலையில், யாரும் தனக்குத் தானே உதவிக் கொள்ள முடியாது: ஆகவே, உடலால் சம்பந்தமுடைய மனைவி, மக்களும், எந்தக் காலத்திலும் துணையாயிருந்து உதவ முடியாது. தன்னைத் தானே நம்பி இருக்கவும் முடியாது. இவை இரண்டாலும் நிலைத்த பயன் இல்லை.

இவ்வாறின்றி, எந்தக் காலத்திலும், எந்த நிலையிலும் உதவக் கூடிய திறனும், தன்மையும் உதவ வேண்டும் என்ற பரந்த மனமும் கொண்ட ஒருவரிடம் அன்பு செலுத்தி, அவரைத் துணையாகக் கொள்வது தான் மிகச் சிறந்த வழியாகும்.

அதன் காரணமாகவே, "என்னில் யாரும் எனக்கினி யாரில்லை" என்று தொடங்கிய திருநாவுக்கரசர், "என்னிலும் எனக்கு இனியவன் ஒருவன் உளன்" என்று இனியவனாக இறைவனைச் சுட்டிக்காட்டி முடிக்கிறார்.

"ஆரேனும் அன்பு செயின் அங்கே தலைப்படுங்காண், ஆரேனும் காணா அரன்" என்று கூறி, தேவாதி தேவர்கள் தேடியும் காணாத சிவபெருமான், யாராவது ஒருவர், இருந்த இடத்தில் இருந்தபடியே அவனிடம் அன்பு காட்டினால் பக்தி செலுத்தினால், அந்த அடியவன் இருக்குமிடம் தேடி அருள் செய்ய ஓடி வருவான் அந்த விடையவன் என்றும் விளக்கம் தருகிறது திருக்களிற்றுப்படியார். இதில் குறிப்பிட்டுள்ளது போல், சிவபெருமான், அன்பினில் விளைந்த ஆரமுது; பக்தி வலையில் படுவோன்; அவன் அன்புக்கு வசப்படுபவன் மட்டுமன்று; அவனே அன்புருவானவன், அன்புதான் சிவம் - சிவம்தான் அன்பு. ஆகவே அன்பும் சிவமும் இரண்டென்று கூறுபவர் அறிவிலார் என்பது திருமூலர் கருத்து. முறுகிவரும் அன்பில் சிவம் விளங்கும்; சிவத்தில் அன்பு புலப்படும்; இரண்டும் ஒன்றுதான்.

அகிலத்தையே ஆட்டிப்படைக்க வல்ல அளவிலா வலிமை படைத்த ஆண்டவன், மிக எளிதாக அன்பு வசப்பட்டு ஆளாவான். ஆகவே, அத்தகைய ஆணையை நாம் தேடிக் கொள்ள வேண்டுமானால், அன்பு செய்ய வேண்டும். பல் பிறவிப் புண்ணியத்தால் வருவது அன்பு. அவனருளாலேதான் அது நமக்கு வர வேண்டும். ஆகவே "அவனருளாலே அவன் தாள் வணங்கி" என்று மாணிக்கவாசகர் சிவபுராணத்தில் குறிப்பிட்டுள்ளார். "ஆங்கவன் அருளால் பக்திகள் உண்டாம், பக்தியால் அவனருள் உண்டாம்" என்று வாயு சங்கிதை கூறுவது போல, அன்பும் அருளும் ஒன்றுக் கொன்று காரணம் ஆனவை காரியமாகவும் நிலைபெறக் கூடியவை.

ஆண்டவன்பால் கொண்டுள்ள "பக்தி" யாகிய அன்பின் காரணமாக, நெக்கு நெக்குருகி அகங் குழையும் அடியவர்கள், தம் வசமழிந்து நிற்றல் இயல்பு. இப்படித் தம் வசம் இழந்து நிற்கும் நிலையும் மூன்று வகைப்படும். இறைவனின் திருப்பெயரை அவன் திருப்புகழைக் கேட்டதும் வசமழிதல் தலையாய நிலை ஆகும்.

*"முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்*
*மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்*
*பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்*
*பெயர்த்தும் அவனுக்கே பிச்சி யானாள்*
*அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்*
*அகன்றாள் அகலிடத்தார் ஆசா ரத்தைத்*
*தன்னை மறந் தாள்தன் நாமங் கெட்டாள்*
*தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே!"*

இந்தத் திருவாசகமும் மணிவாசகப் பாடலில் ஆண்டவனாகிய தலைவனைத்

தலைக்கூடும் தலைவியாக அடியவன் உருவகிக்கப்படுகிறான். தலைவி முதலில் அவன் பெயர் கேட்டாள்; அவன் இருக்கும் விதம் கேட்டாள்; பின்னர் அவனது ஊர் கேட்டாள். இவைகளைக் கேட்ட அளவிலே அவள் தன்வசமிழந்து, அவன் மேல் பித்துக் கொண்டவளாகவே மாறிவிட்டாள். இப்படிக் காதலால் கேட்டவுடனேயே நிலையழிதல் தலையாய நிலையாகும். காதால் கேட்டதும் மயங்காமல், கண்ணால் அவனைப் பார்த்த பின் மயங்குவது இடைநிலை அன்பு, கேட்பதும் பார்ப்பதும் கிளர்ச்சியூட்டாமல், அவனைக் கலந்தால் மட்டும் வசமிழக்கும் அன்பு கடைநிலை அன்பாகும்.

இத்தகைய அன்பை நிலையாக அடையவும் அவனருள் வேண்டும். ஆகவேதான் முதலில் "இறவாத இன்ப அன்பு" வேண்டினார் காரைக்கால் அம்மையார்" அன்பர் உள்ளம் கரந்து நில்லாக் கள்வனே! நின்றன் வார்கழற்கு அன்பு எனக்கு, நிரந்தரமாய் அருள்வாய் நின்னை ஏத்த முழுவதுமே" என்று உருகினார் மணிவாசகர். களவு எனப்படுவது மறை - பிறர் அறியாமை என்பார்கள். பிறர் காணாமல் திருடுபவன் கள்வன்; அவன் கரந்து நிற்பான். ஆனால், அன்பையும், நம் மனத்தையும் திருடும் கள்வனான இறைவன், அன்பர் உளத்திற்கு என்றும் மறைந்து நில்லாதவன். அந்த உறுதியுடன், அவனது நிரந்தர அன்பை வேண்டி நிற்கிறார் மாணிக்கவாசகர்.

இவ்வாறு ஆண்டவனிடம் அன்பு காட்டுவதால் அவனைப் போற்றுவதால் புகழ்வதால் அவனுக்கு ஆட்பட்டுப் பணிபுரிவதால், இறைவன் எய்தும் பயன் எதுவும் இல்லை. அறுசுவை உணவை ஆக்கிப் படைத்து நாம் உண்கிறோம். அந்த உணவிற்கு நம்மால் எதுவும் பயன் உண்டா? இல்லை. மாறாக நாம்தான் உணவால் பயன் பெறுகிறோம்.

*"பொன்னால் பிரயோசனம் பொன்படைத்*
*தார்க்குண்டு; பொன்படைத்தோன்*
*தன்னால் பிரயோசனம் பொன்னுக்கங்*
*கேதுண்டு; அத் தன்மையைப் போல்*
*உன்னால் பிரயோசனம் வேணதெல்*
*லாமுண்டு; உனைப்பணியும்*
*என்னால் பிரயோசனம் ஏதுண்டு*
*காளத்தி ஈஸ்வரனே!"*

என்று பட்டினத்தடிகள் பகர்வது போல, இறைவனுக்கு நம்மால் பயனில்லை; நாம் வாழ்த்துவதால் அவன் வாழப் போவதில்லை. நாம் அவனை வாழ்த்துவது, நாம் வாழ்வதற்காகத்தான். ஆகவே, அவனை வாழ்த்தி நாம் வாழ்வோம்; அவனது வாழ்த்தாலும் நாம் வாழ்வோம்.

சிவம் என்பது அன்பு, சைவம் என்பது சிவத்துடன் தொடர்புடையது; அதாவது அன்புடன் தொடர்புடையது. ஆகவே "சிவபணி" என்பது அன்புப் பணியேயாகும். சிவனை நினைந்து உலகுக்கும், உலகிலுள்ள உயிர்த்தொகுதிக்கும், அடியார்க்கும் ஆற்றும் அருந்தொண்டெல்லாம் அன்புப் பணிகளெல்லாம் "சிவபணி" என்றே கூறலாம்.

எல்லா உடலிலும் இறைவன் உறைகிறான். ஆகவே, இறைவனைச் சுமந்து திரியும் உடல், நடமாடும் திருக்கோவில் ஆகிறது. அந்த உடலில் வாழும் உயிருக்கு நாம் ஒரு தொண்டு செய்வோமானால், அத்தொண்டின் பயன் உடலையும், அதுதாங்கும் உயிரையும் மட்டுமன்றி, உள் நிறைந்து ஒளிரும் இறைவனையும் சார்கிறது. ஆனால் நாம் இறைவனுக்குச் செய்யும் தொண்டு அவனை மட்டுமே சாரும்; அதன் பயன் மனிதனைச் சாராது. ஆகவே, ஒரு செயல் செய்து அதன் மூலம் ஒரே பயனைப் பெறுவதைக் காட்டிலும், அதே செயல்மூலம் இரு பயன்களை எய்துவது சிறந்தது என்று திருமூலர் திரு மந்திரம் கூறுகிறது.

"மக்கள் தொண்டே மகேசன் தொண்டு" என்பார்கள். "எவ்வுயிரும் என்னுயிர்போல் எண்ணி இரங்கவும்நின் தெய்வஅருட்கருணை செய்யாய் பராபரமே!" என்று கூறித் தன்னுயிர் போல் மன்னுயிரைப் போற்றும் பண்பைத் தனக்கு அருளுமாறு வேண்டும் தாயுமான சுவாமிகள், அவ்வாறு அன்பு காட்டுவதன் பயனையும் அடுத்து விளக்குகிறார். "அன்பர் பணிசெய்யஎனை ஆளாக்கி விட்டு விட்டால், இன்பநிலை தானே வந்து எய்தும் பராபரமே!" என்றும் அழியாத பேரின்பத்தை அடைவதற்கு ஒரே வழி, அன்பர்க்குப் பணி செய்வதுதான் என்பதை அழகாகப் படம் பிடித்துக் காட்டுகிறார்.

ஆனால், இந்த மக்கள் பணியின் அடிப்படையாகத் தெய்வபக்தி திகழ வேண்டும். இரசம் பூசாத கண்ணாடியில் உருத்தெரியாது. அதுபோல், தெய்வநம்பிக்கை என்ற பிடிப்பு இல்லாத இதயத்தில், மனச்சாட்சி ஒரு நிலையில் இயங்காது. ஆகவே, உறுதியான நிலையில் மக்களுக்குப் பணிபுரியச் சைவர்களுக்குச் சிவனருள் வேண்டும். சிவனை நினைந்து, உலகுக்கும், அடியார்கள் உள்ளிட்ட உலக மக்களுக்கும், ஏனைய உயிர்த் தொகுதிகளுக்கும் ஒல்லும் வகையெல்லாம் ஓயாது தொண்டு செய்வதே "சிவபணி" ஆகும்.

"ஒல்லும் வகை" என்றால், எந்த வகையில் தொண்டாற்றலாம். நிதி மிகுந்தவர் பொற்குவை நல்கலாம்; நிதி குறைந்தவர் காசுகள் கொடுக்கலாம்; மதி நிறைந்தவர் அறிவை வழங்கலாம்; ஆண்மையாளர் உழைப்பினை நல்கலாம்; அதுவும் அற்றவர் வாய்ச் சொல் அருளலாம். தம்மிடம் இருப்பதை, அது தேவைப்படும் இல்லாதவருக்கு வழங்குவதும், உடலால் உதவுவதும், சிவ நினைவோடு செய்யப்படுமானால், அது "சிவபணி" ஆகும்.

அந்தச் சிவம் என்னும் பொருளும் ஆதிசக்தியாம் பராசக்தியோடு இணைந்தே இயங்குகிறது. அவ்வாறு இயங்கும் போது தான், அது எதையும் சாதிக்கக் கூடிய வலிவோடும் பொலிவோடும் விளங்குகிறது. அந்த ஆதிபராசக்தி பிரிந்து விட்டால், சக்தியற்ற சிவன் இயக்கமற்றுச் "சிவனே" என்று அமர்ந்துவிடுவானாம்.

*"சிவன் எனும் பொருளும் ஆதி சக்தியொடு*
*சேரின் எத்தொழிலும் வல்லதாம்*
*அவள் பிரிந்திடின் இயங்கு தற்கும் அரி(து)*
*அரிதே ணாமறை இசைக்குமால்!"*

இவ்வாறு சக்தியின் தனிப்பெரும் சக்தியைப் பற்றியும், சிவனுக்கே தனிப்பெரும் சக்தியாக அவள் விளங்குவது பற்றியும் சவுந்தரிய லகரி கூறுகிறது.

ஆகவே, ஆதிபராசக்தியோடு கூடிய ஆதீஸ்வரனை உள்மனத்தில் உறுதியாக எண்ணி அவன் அருளைத் துணைக் கொண்டு சிவனுக்கும் மக்களுக்கும், ஏனைய உயிர்த்தொகுதிகளுக்கும் தம்மால் இயன்ற வழிகளிலெல்லாம் அன்பு காட்டித் தொண்டு செய்வதே - பணிபுரிவதே, “சிவபணி” ஆகும். அத்தகைய அருட் பணியை அவனருளாற் புரிந்து அனைவரும் உய்திபெற அன்னை மகா மாரி அம்மன் அருட் சக்தியை அருள்வாயாக!

# மேலைச்சிவபுரி

புதுக்கோட்டை மாவட்டம், பொன்னமராவதி ஊராட்சி ஒன்றியத்தில், மேலைச்சிவபுரி ஊராட்சி முக்கியமான ஒன்றாக உள்ளது. நகரத்தார் (நாட்டுக்கோட்டைச் செட்டியார்)கள் நிறைந்த ஊராட்சியாக உள்ளது. இவ்வூரில் உள்ள சிவன் கோவிலைப் புதுப்பித்து, புனருத்தாரணம், குடமுழுக்கும் செய்து மலரும் வெளியிட உள்ளதை மகிழ்வோடு மக்கள் வாழ்த்தி வரவேற்கின்றனர்.

**பெயர்க் காரணம்**

மேலைச்சிவபுரி, வார்ப்பட்டு வருவாய்க் கிராமத்தின் ஒரு பகுதியாக உள்ளது. இவ்வூர் மேலைச்சிவபுரி என்றும், மேலச் செவல்பட்டி என்றும், பெயர், இம்மாவட்டத்தில் திருமயம் வட்டத்தில் மேற்கே அமைந்திருப்பதால் ஏற்பட்டுள்ளது. இங்கே மிக அழகாகக் கோவில் கொண்ட சிவபெருமான் கோவில் உள்ளது. இது போலவே, இவ்வட்டத்தில் திருமயம் ஊராட்சி ஒன்றியத்தில் பில்லமங்கலம் கிராமத்தின் ஒரு பகுதியாக, கீழச்சிவபுரி என்றும், கிழச் செவல்பட்டி என்றும், நகரத்தார் கிராமம் விளங்கி வருகிறது. கீழச் சிவபுரி, மேலச்சிவபுரி வரலாற்றுச் சிறப்புக்களின் ஒற்றுமைகள்.

| | | |
|---|---|---|
| **கீழச்சிவபுரி** : | கிழச்செவல்பட்டி : | **மேலச்சிவபுரி** : மேலச்செவல்பட்டி |
| வருவாய்க் கிராமம் | பில்லமங்கலம் | வார்ப்பட்டு |
| சிறப்புப் பெயர் : | சுந்தர பாண்டியபுரம்<br>அரசு நாராயண பெருந்தரு | ரங்க கிருஷ்ண முத்துவீர பூபால சமுத்திரம். |
| கல்விப்பணி : | ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் கலாசாலை<br>மகளிர் உயர்நிலைப்பள்ளி<br>வேதபாடசாலை | சன்மார்க்க சபை<br>கணேசா செந்தமிழ் கல்லூரி |
| மருத்துவ வசதி : | அரசு மருத்துவமனை | ஆரம்ப சுகாதார நிலையம் |

இது போன்ற பல ஒற்றுமைகள் கொண்டுள்ள, நகரத்தார்கள் நிறைந்த பெருமை மிகுந்துள்ள ஊரே மேலச்சிவபுரியாகும் பொன்னமராவதி ஒன்றியப்பகுதி வரலாற்றில் நகரத்தாரின் பங்கு

மேலைச்சிவபுரி, வேந்தன்பட்டி இரண்டும் தொடரான நகராக இருந்தும் தனித்தனி ஊராட்சியாக விளங்குகின்றன. சிறப்புமிகு இவ்விரு ஊராட்சி எல்லைகளிலும் கல்வெட்டு ஆதாரங்கள் எதுவும் கிடைக்கவில்லை எனினும், வேந்தர்களின் பெயர் கொண்டு, ஊர்களும், ஊரணிகளும் காணப்படுகின்றன. வரலாற்றுப் பெருமைக்கு எடுத்துக் காட்டாகும். குறிப்பாக: சோழ சிரோன்மணி ஊரணியும் உள்ளது.

**சுந்தர சோழபுரம்**

சுந்தரம் செட்டியார் என்ற நகரத்தார் பிரிவில் ஒரு வகையினர் சிறப்பாக வாழ்ந்துள்ளர். இதற்கு தேசியுகந்நபட்டினம் என்ற பழம் பெயரும் உண்டு. இங்கே சுயம்பிரகாசமூர்த்தி என்றும், தான்தோன்றீஸ்வரர் என்று சிவபெருமானும் பொலிஞ்சு நின்ற பிரான், விண்ணகர எம்பெருமான் என்று பெருமானும் கோவில் கொண்டுள்ளன. முதலாம் ராஜ ராஜ சோழனுக்கு கி.பி. 997ல், இந்நகரத்தார்,1 பலம் பொன் வீதம், குடும்பவாரியாகக் கொடையளித்ததும், ஆண்களேயன்றி மகளிரும், நிலக் கொடையளித்தும், கோவில் கட்ட தான தர்மங்கள் செய்த சூரியச் சிலைச் செட்டி பற்றியும் கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன.

செவலூர் இவர்களின் பெருமை மிகு திருப்பணி, தான தர்மங்கள், கொடைகளுக்காக, கோவிலுக்கு விநாயகரும், சுப்பிரமணியரும், நாச்சியாரும், ஏறியருளப் பண்ணும் போது பூஜை, திருநாளுக்கு "இளையாந்தங்குத நகரத்தார் தம்பிரான் வந்தான்" என்று கூறப்பட்டதற்கும், தினமும் பரிவட்டம் கட்ட வேண்டுமென்றும் கி.பி. 1458ம் ஆண்டு கல்வெட்டு சிறப்பித்துக் கூறுகின்றது. மலையடியூரில் 28 மனை இடமும், வடக்குத் தெருவும் இருந்துள்ளன.

**பொன்னமராவதி**

ஐநூற்றுவன் பெருந்தெருவில், வியாபாரிகளாக, நகரத்தார்கள் விளங்கியதையும், நந்தவனம், ஏரி, நிலம் விட்டதையும் கி.பி.1293 ம் ஆண்டு கல்வெட்டு விளக்குகின்றது. அரசமலை:- (அரசர் மிகாமன் நிலை)

கி.பி. 1283ன் கல்வெட்டு, இராச சிலைச் செட்டி மின் தர்மங்கள் பற்றி விளக்குகின்றன. வையாபுரியில் எழுந்தருளியிருக்கின்ற அருள்மிகு முருகன் கோவில் பராமரிப்பும் நகரத்தார் பெருமையை விளக்கி நிற்கின்றன.

**சாத்தனூர்**

அருவிமாநகர் என்றும் பெயர் பெற்றது. சாத்தனூர் இவ்வூரில் வியாபாரிகள் வாழ்ந்த பெருந்தெருவும், வாரண வாயில் பெருந்தெருவும், இவர்களின் நிலக் கொடை நந்தவனம், கோவில் திருப்பணிகள் பற்றியும் விளக்குகின்றன.

**வேந்தன்பட்டி**

*மீனாட்சி சொக்கேஸ்வரர், கொடும்பாளுரிலிருந்து வந்த நந்தி, நெய் நந்தியாகி அருள்பாவித்து வரும் சிவன் கோவிலின் சிறப்புமிகு பராமரிப்பு, நகரத்தார் அருள் தொண்டினை எடுத்துக்காட்டி நிற்கின்றது.*

*இப்படி, வரலாற்றுக் காலக் கோவில்களில் பூஜை, புனஸ்காரங்கள் தடைப்பட்ட போதெல்லாம் கொடையளித்து, விளக்கேற்றி, கொடையளித்த செய்திகளை ஏராளமான கல்வெட்டுக்கள் சான்று கூறி நிற்கின்றன.*

*நகரத்தார் என்றாலே இவர்களின் செல்வச் செழிப்பும், கோவில் திருப்பணிகளும், அன்று முதல் இன்று வரை நிலை பெற்றிருப்பதையே, மேலைச்சிவபுரி சிவன் கோவில் குடமுழுக்கும் உலகத்திற்கு எடுத்துக்காட்டி நிற்கும். வளர்க நகரத்தார் இறைத்தொண்டு.*

**மேலைச்சிவபுரியில் வளர்ச்சி பணிகள்**

*ஊரக வளர்ச்சித் துறை, ஊராட்சி ஒன்றியம், ஊராட்சிகளின் நிர்வாகத்தின் மூலம் ஊரக வளர்ச்சிப் பணிகளை நிறைவேற்றி வருகின்றன. அவற்றையும் இங்கே குறிப்பிடுவது பொருத்தமேயாகும்.*

**மேலைச்சிவபுரி**

*திருச்சி மாவட்ட ஆட்சித் தலைவரின் ந.க. 47950/61. நாள் 04-12-1961 ன் படி ஊராட்சியாகியது. மேலைச் சிவபுரி ஒரே கிராமமாக இருந்தும், மேலைச்சிவபுரி பிள்ளையார் வயல், அருங்கலையிருப்பு என மூன்று குக்கிராமமாக 4 07 வீடுகளையும், 2.10. ச.கி.மீ. பரப்பும் உடையதாக அமைந்துள்ளது. ஊராட்சி மன்றக் கட்டிடம் 1ம், தொலைக்காட்சிப் பெட்டி 1ம், வானொலிப் பெட்டி 1ம், தமிழ் கல்லூரி 1, மேல்நிலைப்பள்ளி 1, துவக்கப்பள்ளி 1ம், மேல்நிலை நீர்த்தேக்கத் தொட்டி 2ம், ஆழ் குழாய்க் கிணறு 6 ம், வீதி விளக்குகள் 126 ம், அங்கன் வாடி மையம் இணைப்பு சாலை, மயானச் சாலை வசதிகளுடனும் செயல்பட்டு வருகின்றது.*

*இவ்வூராட்சி சராசரி ஆண்டு வருமானம் ரூ. 30,000/- த்தில், 7 பணியாளர்களுடன் தன்னிறைவு பெற்ற ஊராட்சியாக நடைபெற்று வருகிறது.*

**இரா. இராமமூர்த்தி**

*தனி அலுவலர் மேலைச்சிவபுரி ஊராட்சி மற்றும்*
*ஆணையர். பொன்னமராவதி ஊராட்சி ஒன்றியம்*

# மீனாட்சி சொக்கலிங்கம்

மாலவன் தங்கையாம் மங்கைக் கரசிதனை
ஆலவாய்ச் சொக்கர் அடைந்திட்டார் – கோலவிழி
மீனாட்சி தானுமே மெய்மறந்தாள்; அண்ணனைக்
காணாது உற்றாள் துயர்.

பிட்டுக்கு மண்ணைப் பெருமான் சுமக்கமண்
வெட்டியுடன் சென்றாங்கே கண்ணயர்ந்தார் – இட்ட அடி
பாண்டியன் தன்மேலும் பட்டதனால் வந்தவரும்
ஆண்டவனே என்றுணர்ந்தார் ஆங்கு.

எத்தனை விளையாடல் எம்பெருமான் செய்தாலும்
அத்தனையும் நன்மை அடைந்திடுமே – நித்திலத்தில்
எல்லாம் அவனன்றி ஏதுமிலை என்றறிந்து
நல்வழி யிற்செல்வோம் நாம்.

பொன்னும் மணியும் புகழோடு நல்வாழ்வும்
இன்னும் பலவும் தருபவளாம் – நன்மனத்தில்
தன்னாட்சி செய்யும் தனக்குவமை இல்லாத
மீனாட்சித் தாயே துணை.

அன்னை வடிவே அருமருந்தே நீ இந்தச்
சின்னஞ் சிறுஊரும் சீர் பெறவே எண்ணி
வலமாகச் சொக்கருக்கு வந்தமர்ந்தாய் நாளும்
உளமாரக் காப்பாய் உவந்து.

கவிஞர் – K.R. இராமநாதன் B.Sc.
மேலைச்சிவபுரி

# பள்ளிப் பிள்ளைகளுக்கு நீதி நூல் கல்வி

'பதிப்புச் செம்மல் டாக்டர் ச. மெய்யப்பன்'

தமிழ் மொழி தொன்மையது. நீண்ட நெடிய மரபினை உடையது. காலந்தோறும் தோன்றிய புலவர்கள் தம் ஆளுமையால் மொழிக்கு நலமும் வளமும் சேர்த்துள்ளார்கள். தமிழர் வாழ்வு அறஞ்சார்ந்த வாழ்வு. அல்லல் நீக்கி நல்லன கைக் கொண்டு வாழும் நல்வாழ்வே தமிழர் நாள் வாழ்வு. இல்லற நெறியாயினும் வாழ்க்கை நெறியாயினும் வளமாக அறக்கோட்பாடுகளை வகுத்துக் கொண்ட இனம் தமிழினம். ஒவ்வொரு செயலும் முடிவு மட்டுமின்றி வழியும் தூயதாக இருக்க வேண்டும் எனக் கருதுவார்கள். குறி மட்டுமின்றி நெறியும் அறஞ்சார்ந்ததாக அமைத்துக் கொண்டவர்கள் தமிழர்.

பாட்டிலும் தொகையிலும் சங்கச் சான்றோர் அறநெறிக் கோட்பாடுகள் விரவிக் கிடக்கின்றன. பதினென் கீழ்கணக்கு முழுவதுமே நீதிப் பேழைகள். திருமுறைகள், காப்பியங்கள், சிற்றிலக்கியங்கள், தமிழர் வகுத்த வாழ்வியல் நெறியின் அடையாளங்களைத் தடம் பதித்துள்ளன. தமிழ் முழுவதும் நீதி வேரோடியிருந்தாலும், சிறுவர்க்கென வகுக்கப்பட்ட நீதி நூல்கள் தனிச்சிறப்புடையன.

எனவே அருளிய, ஆத்திசூடி, கொன்றை வேந்தன், தொடக்கக் கல்வியின் தோற்றுவாய், நெடுங்கணக்கின் முதல்பாடம், அகரவரிசை கற்றலுக்கு அடிப்படை நூல், சிறுவர்க்கான செந்தமிழ் நீதிநூல்கள் சொற்செட்டும், கட்டமைப்பும் உடையவை. ஓசை நயமிக்கவை, ஓதி இன்புறத்தக்கவை, இயல்பாக நெஞ்சில் நிலைப்பவை நினைவில் கொண்டுவர ஏற்ற யாப்பினை உடையவை.

தமிழகக் கல்வி வரலாற்றில் கல்வியே நீதி இலக்கியமாய் தொடங்குகிறது. தொடக்கக் கல்வி பாடத் திட்டம் குருகுலக் கல்வி தொடங்கி சிறு நூல்கள் மனப்பாடம் செய்தலும் நினைவாற்றலை வளர்ப்பவைகளாகும். நீதி நூல் தொடர்கள் வெறுஞ் சொற்களல்ல, ஒலிக் கூட்டமும் அல்ல. கருத்தாழமிக்க வாழ்க்கைச் சட்டங்கள், தாய்ப்பாலோடு தரும் தமிழறிவு வாழ்நாள் முழுதும் உடலுக்கும் உள்ளத்திற்கும் உயிருக்கும் ஊட்டம் தருவன. மாசுமருவற்ற பிஞ்சு நெஞ்சங்களில் உயிரோவியமாய் கருத்தோவியங்கள் அவர்கள் வாழ்நாள் முழுதும் நல்வழி நடத்திச் செல்கின்றன.

'இளமையிற்கல்' எனும் நல் வாக்கிற்கேற்ப அழியா ஓவியங்கள். வாழ்க்கையைச் செம்மைப்படுத்தும் கருத்துக் கருவூலங்கள். நீதி நூல்கள் மொழி நடையாலும் சொல்லும் நெறிகளாலும் வெளிப்பாட்டு உத்திகளாலும் சாகாவரம் பெற்ற சிரஞ்சீவிகளாகி விட்டன. நீதி நூல்களின் நிலைப்பேற்றிற்குக் காரணம் வாழ்வியல் உண்மைகளை சொல்லிய முறைதான்

செறிவுமிக்க திருக்குறளின் "தன்னெஞ்சறிவது பொய்யற்க" என்ற குறளின் உயிர்ப்பு எளிமையாக எல்லோருக்கும் புரியும் வண்ணம் "நெஞ்சாரப் பொய் தன்னை சொல்ல வேண்டாம்"

என மக்கள் நடையில் மலர்கிறது. இந்த வகையில் எளிமையாகச் சொன்னால்தான் தாய்மொழிப் பயிற்சியும் நீதிக் கல்வியும் நிலைத்த வாழ்வு பெறும். நெடுங்கணக்கைப் போதிக்கும் போக்கிலேயே நீதி கற்பிக்கும் போக்கு தமிழர் கல்வி நெறியாகும்.

மனத்தின் மலர்ச்சி பெறுங்காலத்து எதை, எப்படி, எங்கு கொடுப்பது என்பதற்கு இலக்கியமாக இலங்குவது சிறுவர் நீதி நூல்கள். ஐந்து வயது முதல் பத்து வயது வரை படி நிலைகளில் நீதி நூல்கள் பாடத் திட்டத்தில் முன்பு வகுக்கப் பெற்றிருந்தது. சென்ற நூற்றாண்டில் யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர் பெருமான் தம் கால பாடநூல் வரிசைகளில் இந்நீதி நூல்களை முறைப்படி இணைத்து சிறுவர்களை நல்வழிப்படுத்தினார். சூறாவளி என வந்த 'நர்சரிக் கல்வி முறை' தமிழ் நெடுங்கணக்கை மறக்கச் செய்தது. இது தாய் மொழியைப் புறக்கணித்து தமிழர் நீதியியலை இளந்தமிழ் உள்ளங்கள் அறியா வண்ணம் இருட்டடிப்பு செய்து விட்டது. தாய்மொழிப் பற்றானர்களும் புலமை மிக்கோரும் சான்றோரும் தமிழறிவும் இல்லாத கல்விக் குழுக்கள் மலிந்து பிழை மலிந்த பாடத் திட்டங்களை வகுத்து நீதிக் கல்வியை முற்றாக நீக்கிவிட்டன.

தமிழ்நாட்டு இளஞ்சிறார் வாழ வளர உருப்பட புதிய கல்விக்கு ஏழு நீதி நூல்களும் கட்டாயம் இடம் பெற வேண்டும்.

ஆத்திசேர் கொன்றை அழகுதமிழ் மூதுரை
பாத்திசேர் நல்வழி பண்புலகம் - பூத்த
நறுந்தொகை நன்னெறி ஏழும் குழந்தைக்
குறுந்தமிழ் என்றறிந்து கொள்

(வ.சுபமா. பாடல்)

வள்ளுவம் வகுத்த என் ஆசான் மூதறிஞர், செம்மல், வ.சுப. மாணிக்கனார் அவர்கள் தமிழ்ச் சிறார்களின் உள்ளங்களில் இந்நீதி நூல்கள் பதிய வேண்டும் என்று திட்டமிட்டு பல ஆண்டுகளாகக் காரைக்குடி பகுதியில் இதைப்பரப்ப வழிவகை செய்துள்ளார்கள். இவ்வியக்கம் நாடெங்கும் பரவ வேண்டும்.

நீதியைத் திணிப்பதல்ல, புகட்டுவதும் அன்று

இயல்பான மொழிக் கல்வியோடு நல்லது இது, தீயது இது என இனங்காட்டும் வாழ்வியல் கல்வி வகுத்துத் தருவது நம் கடன்

வாழ்க்கைக்கான கல்வியை வளரும் பயிர்களுக்கு உரமாக்க வேண்டும். மூத்தோர் சொல் அமிர்தம் என்பதனை அவர்தம் பட்டறிவின் பயன்களைப் பள்ளி சிறார்கள் தொடக்க கல்வி பெறும் நாளிலே பெற வேண்டும். நீதி நூல் தொடர்கள் பழமொழிகளாய் உவமைகளாய் உருவம் பெற்று தமிழர் எழுத்திலும் பேச்சிலும் உலா வருகின்றன.

"செய்வன திருந்தச் செய்" எனும் செந்தமிழ்த் தொடருக்கு பெரிய விருத்தியுரையே எழுதலாம். எதிலும் ஒழுங்கு, முறைமை, முழுமை, நிறைவுடைமை காண்பது இக்கால மேலாண்மைக் கல்விக் கோட்பாடு. இதனை எத்தனை எளிய தமிழில் அன்றே பழந்தமிழர் பால்போலும் பைந்தமிழில் பாடி விட்டனர்

வீரியமிக்க நீதிநூல் விதைகள் தமிழர் வாழ்விலும் இலக்கியத்திலும் விழுது விட்டுள்ளன. நமக்கு கிடைத்த குலதனமாகிய நீதிச் செல்வத்தை நாம் ஒரு நாளும் இழத்தல் கூடாது. சிறிய தொடர்களாயினும், சீரிய சிந்தனையுடையவை. சிறுவர்களுக்கான இலக்கியமாயினும் தமிழரை நன்னெறிப்படுத்தும் பெருஞ்செல்வங்கள், கருத்து வன்மையால், கால வெள்ளத்தால் காலச் சூறாவளியில் அழிக்க முடியாத கவிதைப் பேழைகள்

*தொன்று தொட்டு வரும் இம்மரபுச் செல்வத்தை*
*மதித்துப் போற்றுதல் நம் கடமை.*

## கடவுள் நம்பிக்கை

*மனிதன் பண்பாட்டைக் காட்டக் கூடியவை யாவை?*

காலங்காலமாக வளர்ந்து வரும் கடவுள் நம்பிக்கை, சமய ஒற்றுமை, சமய உணர்வு, கலை, இலக்கியச் செல்வாக்கு, கல்வி அறிவு முதலியன அவனைச் சிறிது சிறிதாகப் பண்படுத்தி, இன்றையநிலைக்குக் கொண்டு வந்திருக்கின்றன...... சிற்பம், சித்திரம், காவியம், ஆடல், பாடல் யாவுமே புத்துயிர் பெற்று வளர்ந்திருக்கின்றன. வானளாவும் கோயில்களைக் கட்டியதில் தமிழர்களுக்கு இணையானவர்கள் உலகில் வேறெங்கும் இல்லை; என்ற பெருமையைப் பெற்றவர்கள் நாம்.... நமக்குப் பொருளாதார வளர்ச்சி மட்டும் போதாது. மனிதனுடைய நல்லுணர்ச்சிகளையோ, நற்சிந்தனைகளையோ நாம் சமய ஒற்றுமையுடன் இழந்து விடுவோமானால், பிறகு அவற்றை மீட்கப் பல தலைமுறைகள் கூட ஆகலாம்.

*அகிலன்*

*சுப. மு. ராம. முத்தப்பன்*
மேலைச்சிவபுரி.

உ

சிவமயம்

ஸ்ரீ பழனியாண்டவர் துணை

# மேலைச்சிவபுரி சாமியாடி முத்தப்ப செட்டியார் வரலாறும் அருள்மிகு சுப்பையா கோவில் சக்திவேலாயுத் சுவாமி வரலாறு விபரமும்

ஆறு. சுப. ஆறுமுகம்
மேலைச்சிவபுரி

சுமார் ஆறு தலைமுறைகளுக்கு முன்னர் ஸ்ரீ கற்பக விநாயகர்கோவில் என்னும் பிள்ளையார்பட்டிக்கோவில் பிரிவைச் சேர்ந்த சாமியாடி முத்தப்ப செட்டியார் அவர்கள்..... பிடாரம் பட்டி என்னும் அனேக சிவாலயங்கள் நிறைந்த ஊரில் வசித்து வந்தார்கள். அது நாளில் மேலைச்சிவல்பட்டியில் நாட்டுக்கோட்டை நகரத்தார் இல்லாததால் சேர்வைகாரரும் ஊராரும் முத்தப்ப செட்டியாரை அழைத்து வந்து மரியாதை செய்து தங்கச் செய்தார்கள். அன்று முதல் இன்று வரை சேர்வைக்காரர் குடும்பத்தார் முத்தப்ப செட்டியார் குடும்பத்தாருக்கு ஆண்டு தோறும் பொங்கல் பானை சீரோடும், சிறப்போடும் கொடுத்து வருகிறார்கள்.

முத்தப்ப செட்டியார் ஆண்டுதோறும் தைமாதம் கார்த்திகையன்று மேலைச்சிவல் பட்டியிலிருந்து காவடி கட்டி பாத யாத்திரையாக பழனிக்கு சென்று காவடி முத்திரையை செலுத்தி வந்து சிவல்பட்டியில் தன் வீட்டில் வைத்து சுக்கிர வாரந்தோறும் பூஜை செய்து வந்ததில் பழனியாண்டவர் கிருபையால் வெகுபேர் காண திருவிளையாட்டுக்கள் விளையாடி வந்தார். வேட்டைக்கு வந்த புதுக்கோட்டை தொண்டமான் ராஜாமருதப்பன் இது அதிசயத்தைக் கேள்விப்பட்டார். உடனே முத்தப்ப செட்டியார் வீட்டிற்கு சென்று வணங்கி, பழனியாண்டவரிடம் நான் வந்த (நினைத்த) காரியத்தை கேட்டுச் சொல்லும்படி கூறினார். முத்தப்ப செட்டியார் பழனியாண்டவர் அருளால் நினைத்த காரியத்தையும், நடக்கப் போவதையும் கூறினார். முத்தப்ப செட்டியார் அருள் வாக்குப்படி நடந்ததால் அவர் மகிமை அறிந்து அகமிக மகிழ்ந்த தொண்டமான் மருதப்ப ராஜா தன்னுடைய பல்லக்கையே அனுப்பி வைத்து முத்தப்ப செட்டியாரை சகல அரச மரியாதையுடன் அழைத்து வந்து உபசரித்து வணங்கி, பொற்சால்வையும் (பொன்னாடையும்) மோகராமாலையும், வளைதடியும், குத்தீட்டியும் கொடுத்து, தங்களுக்கு யாது வேண்டும் கூறுங்கள், தரச்சித்தமாய் உள்ளேன் என்றார். முத்தப்ப செட்டியார் அரசரிடம் என் கோவில் வீட்டுக்கு தாமிரவேல் ஒன்று சாஸ்த்திர முறைப்படி வல்லுனர்களைக் கொண்டு செய்து தரும்படியும், அதை என் கோவில் வீட்டில் வைத்து பூசை செய்து வரும்படிக்கும், பழனிக் கோவிலுக்கு நான் காவடி எடுத்துப் போகும் போது இந்த வேலாயுதத்தையும் எங்கள் சாதிநேமங்கோவில் பழநியப்பனுடன் சேர்ந்து பள்ளையம் போட்டு பூஜை செய்து வரும்படி உத்திரவாக வேண்டும் என்றும் கூறினார். அதன்படி தொண்டமான் செய்து கொடுத்து பழனிக்கு திருமுகம் எழுதி அனுப்பி நகரத்தாரை

அரண்மனைக்கு அழைத்து வந்து வெகு மரியாதை செய்து, முத்தப்ப செட்டியாருக்கு தாமிரவேலாயுதம் ஒன்று சாஸ்த்திர முறைப்படி செய்து கொடுத்திருப்பதாயும் பழநி அன்னதான மடத்தில் இந்த தாமிர வேலாயுதத்தையும் நிறுத்தி பூசை செய்யுங்கள் என்று உத்திரவு செய்தார். அதருபடியே நடத்தி வருகிறோம் என்று, ஏழு கோவில் நகரத்தார்களும் சம்மதித்து வேலாயுதத்தை வாங்கி வந்தார்கள்.

தொண்டைமான் ராஜா மருதப்பர் உத்திரவு செய்தபடியால் பழனி அன்னதான மடத்து பார்வதி அம்மாள் இரும்பு வேலாயுதம், தேவகோட்டை நகரத்தார் உபயம் சொர்ணரெத்தின வேலாயுதம், குன்றக்குடி மடத்து உபயம் வெள்ளி வேலாயுதத்துடன் இந்த மேலச்சிவல்பட்டி முத்தப்ப செட்டியார் கோவில் வீட்டு தாமிரவேலாயுதத்தையும் ஆறுகால் சவுக்கையில் நிறுத்தி வைத்து அபிஷேக அலங்காரம் செய்து, பள்ளையம் போட்டு பூசை செய்து காளாஞ்சி, பஞ்சாமிர்தம், விபூதிப்பை முதலிய மரியாதை மேலைச்சிவல்பட்டி முத்தப்ப செட்டியார்க்குக் கொடுத்து வருகிறோம். தங்கள் புத்திரர், பௌத்திரர், சந்திரர், சூரியர், உள்ளவரைக்கும் நடத்திவருவோமாகவும், இந்த தர்மசாசனத்திற்கு விகாதம் இடர்செய்தவர்கள், காசியில் கங்கையில், ஆயிரத்தெட்டு காராம் பசுவைக் கொன்ற தோஷத்திலேயும், தீர்த்தவாசங்களில், குரு, மாதா, பிதா, சிசுவதை செய்த தோஷத்திலேயும், போகக்கடவாராகவும்; இந்த சாசனப்பட்டயத்தை பரிபாலனம் செய்த பேர்களுக்கு, காசியில், கங்கையில் ஆயிரத்தெட்டு கோதானம் செய்தபலனும் கிடைக்கும். ஆல்போல் தழைத்து, அருகுபோல்வேரூன்றி, மூங்கில் போல் சுற்றம் முசியாமல் வாழ்ந்திருப்பார்களாகவும் என்று ஏழுகோவில் நகரத்தார்கள் அனைவோர்களும் சம்மதித்து பட்டயம் எழுதிக் கொடுத்து மரியாதை செய்தார்கள் (பழனி அன்னதான மடத்தின் கல்வெட்டின் அட்டவணை தொடர்ச்சி எண் 149 பக்கப்படி நிர் 21 வரிப்படி)

புதுக்கோட்டை மன்னர் மருதப்பருக்கு பிள்ளை இல்லாததால் மேலைச்சிவபுரிக்கு முத்தப்ப செட்டியாரிடம் வந்து கேட்டதற்கு, என்ஸ்தலத்தில் தம்பதி சமேதராய் ஒரு மண்டலம் இருந்து சுக்கிர வாரந்தோறும் வழிபட்டு வந்தால் குழந்தைப் பேரு கிடைக்கும் என்று கூறினார். அதன்படி புதுக்கோட்டை அரசர் மேலைச்சிவல்பட்டியில் ஒரு மண்டலம் தங்கி இருந்து சுக்கிர வாரந்தோறும் வழிபட்டு ஆண் குழந்தை பெற்றெடுத்தார். (அப்போது அரசர் வந்து தங்குவதற்காக சேர்வைகாரர்களும், ஊராரும் அமைத்துக் கொடுத்ததுதான் இப்போது கச்சேரிக்கூடம் என்று வழங்கப்படும் இராமயணக்கூடம்.)

முத்தப்ப செட்டியார் சொல்லியபடி மன்னருக்கு ஆண்குழந்தை பிறந்ததால் முத்தப்ப செட்டியாருக்கு பல்லக்கு அனுப்பி சகல அரச மரியாதையுடன் வரவேற்று ஊருக்கு அருகில் உள்ளதாய்ப் பார்த்து ஒரு குளத்து வயலை கொடுத்து வயலுக்கு முத்தப்ப செட்டியார் ஏந்தல் என்றும், முத்தப்ப செட்டியார் கண்மாய் என்றும் பெயரிட்டு நியமனம் செய்தார். இப்போதும் அது செட்டியார் வயல் என்றும், செட்டியார் கண்மாய் என்றும் வழங்கப்பட்டு வருகிறது.

முத்தப்ப செட்டியார் பரம்பரையாக வந்த தற்போது உள்ள மூன்று கரைகாரர்களும் முறைப்படி ஆண்டுதோறும் தைப்பூசத்திற்கு 5 நாள் முன்னதாக

வருகின்ற கார்த்திகை தினந்தன்று இரவு சுப்பையா கோவில் வீட்டிலிருந்து ஸ்ரீ சக்தி வேலா்யுத சுவாமியுடன் காவடிகளும் சேர்ந்து பாதயாத்திரையாக புறப்பட்டு பிரான்மலை சிவன் கோவில் சென்று பானக்க பூசை நெய்வேத்யம் செய்து கற்பூர தீபம் பார்த்து அங்கிருந்து புறப்பட்டு சமுத்திராபட்டியை அடைந்து மாலையில் சக்திவேலாயுத சுவாமிக்கு அபிஷேக ஆராதனைகளும் அன்னதானமும் செய்து; அங்கிருந்து புறப்பட்டு சானார் பட்டிக்கு அடுத்துள்ள குயவபட்டியை அடைந்து வேலாயுத சுவாமிக்கு அபிசேக ஆராதனைகளும் அன்னதானமும் செய்து, அங்கிருந்து புறப்பட்டு நகரத்தார் ஊரணி என்ற செம்மடப்பட்டியை அடைந்து அபிஷேக ஆராதனைகளும் அன்னதானமும் செய்து அங்கிருந்து புறப்பட்டு நகரத்தார் ஊரணி என்ற செம்மடப்பட்டியை அடைந்து அபிசேக ஆராதனைகளும் அன்னதானமும் செய்து அங்கிருந்து புறப்பட்டு இரவு குழந்தை வடிவேலன் திருக்கோவில் அடைந்து பானக்க பூசை நெய்வேத்தியம் செய்து அங்கிருந்து புறப்பட்டு காலை 7 மணிக்கு ஆயக்குடியில் கடுக்காய் பாறை அடைந்து அங்கிருந்து வேலாயுத சுவாமி, குன்னக்குடி வேலாயுத சுவாமியுடன் பழனி நகரத்தார் அன்னதான மடத்தை அடைந்து முதல் நாள் பூசை கொள்ளுதல் காவடிகளும், பாதயாத்திரையினரும் கடுக்காய்ப் பாறையிலிருந்து இடும்பன் குளம் அடைந்து, தீர்த்தமாடி, இடும்பருக்கு அர்ச்சனை செய்து காவடியை மட்டும் இடும்பன்மலை தென்பாகத்தில் குன்னக்குடியிலிருந்து வந்த காவடிகளும் நம் காவடிகளும் வைத்து பள்ளயம் போட்டு நெய்வேத்தியம் தூபம் பார்த்து சாமியாடி செட்டியார் அவர்கள் பேரில் சுவாமி வந்து விபூதி பிரசாதம் பெற்று அடிவாரத்தில் அன்னதானம் செய்வித்தல் அதன் பிறகு பழனி அன்னதான மடத்திலிருந்து தேசிகர்களும், நகரத்தார்களும் மேளதாள வாத்தியங்களுடன் அடிவாரத்திற்கு சாமியாடிச் செட்டியார் அவர்களையும், காவடிகளையும், நகரத்தார் பெருமக்களையும் அழைத்து அன்னதான மடத்திற்கு அழைத்துச் செல்வார்கள். புனர்பூசம் முதல் ஐந்து நாட்கள் பழனி அன்னதான மடத்தில் அபிஷேகம், பூஜை, ஆராதனைகள் செய்து, மலைக்கு காவடி செலுத்தி ஆறாம் நாள் மலையில் அபிஷேகம் செய்து ஏழாம் நாள் மாலை மலைத் தீபம் வைத்தும் அன்னதான மடத்தில் சாமியாடி செட்டியார், தேசிகர்கள், எல்லோரும் வந்து தீபம் பார்த்து பரிபட்டம் கட்டி, படித்திட்டம் பெற்று. சாமியாடிச் செட்டியாரிடமும், பூசாரிச் செட்டியாரிடமும் தேசிகர்களிடமும் விபூதி பிரசாதம் பெற்று வேலாயுதசுவாமியும், காவடிகளும் புறப்பட்டு, மறுநாள் திண்டுக்கல் வந்தடைந்து பகல் 12 மணிக்கு அபிஷேக ஆராதனை செய்து அன்னதானம் நடத்தி அன்னதானம் நடத்தி அங்கிருந்து புறப்பட்டு மறுநாள் சமுத்திராப்பட்டி வந்து சேர்ந்து அபிஷேக ஆராதனை செய்து அன்னதானம் நடத்தி அங்கிருந்து புறப்பட்டு மறுநாள் சமுத்திராப்பட்டி வந்து சேர்ந்து அபிஷேக ஆராதனை செய்து அன்னதானம் நடத்தி மறுநாள் அதிகாலையில் பானக்க பூசை செய்து சாமியாடிச் செட்டியாரிடம் விபூதி பிரசாதம் விபூதிப்பை மரியாதையும் பெற்றுக் கொண்டு மாலை 4 மணிக்கு மேலச் சிவபுரி எருத்தலாங்கண்மாய் வந்து சேர்ந்தல், பிள்ளையார் கோவிலில் இருந்து மேளவாத்தியங்களுடன் சுப்பையா கோவில் பங்காளிகள் ஆண் பெண் அனைவருடன் பொதுமக்கள் எல்லோரும் சேர்ந்து, எருத்தலாங் கண்மாய் அடைந்து

மாலை அணிவித்து தீபம் பார்த்து அழைத்து வந்து, பிள்ளையார் கோவிலில் அபிஷேகம் செய்து தீபம் பார்த்து வேலாயுத சுவாமியை எடுத்துக் கொண்டு சுப்பையா கோவில் வீட்டில் வைத்து தீபம் பார்த்து காளாஞ்சி மரியாதை பெற்றுக்கொண்டு எல்லோருக்கும் முறைகாரர் வீட்டில் அன்னதானம் செய்து வருகிறார்கள்.

இப்போது சுப்பையா கோவில் திருமண மண்டபம் கட்டி இருக்கும் இடத்தை வேந்தன்பட்டி முரு.மு.மெ. நாராயணன் செட்டியார் என்ற முத்துக்கருப்பஞ் செட்டியார் அவர்கள் நன்கொடையாக வழங்கினார்கள். அவ்விடத்தில் முரு.ஆறு. ஆறுமுகம் செட்டியார் அவர்கள் பெருமுயற்சி எடுத்து சுற்றுமதில் சுவரும், கிணறும், நன்கொடையாகக் கட்டிக் கொடுத்தார்கள். அதில் சுப்பையா கோவில் பங்காளிகள் பணம் எடுத்து திருமணமண்டபம் (ஹால்) கட்டி முடித்துள்ளார்கள். சாப்பாட்டு ஹாலும், சமையல் கொட்டகையும் விரைவில் கட்டிமுடிக்க ஏற்பாடுகள் செய்து வருகிறோம். திருமணமண்டபத்தில் இதுவரை 35 திருமணங்கள் சிறப்பாக நடந்துள்ளன அருள்மிகு சக்திவேலாயுத சுவாமியின் அருளால் கட்டிடம் மேலும் வளர்ந்து எல்லா வசதிகளும் பெற்றுத் திகழ இருகை கூப்பி வணங்கி வேண்டிக் கொள்கிறோம்.

சுப்பையா கோவில் அருள்மிகு சக்தி வேலாயுத சுவாமிக்கு ஆரு. சுப. சுப்பிரமணியஞ் செட்டியார் தண்ணீர் பந்தல் முன்பாக இரண்டு மகேஸ்வர பூசையும், சுவாமிநாத வினாயகர் கோவில் முன்பாக இரண்டு மகேஸ்வர பூசையும், புதிதாக கட்டி இருக்கும் சுப்பையா கோவில் திருமண மண்டபத்தில் 07-05-82 -ல் ஒரு மகேஸ்வர பூசையும் நடந்தன. ஒன்பது ஆண்டுகளுக்கு முன் பழைய கட்டிடமாக இருந்த சுப்பையா கோவிலை முழுமையாக புதுப்பித்துக் கட்டி கும்பாபிசேகம் செய்து புதுப்பொலிவுடன் திகழ்ந்து வருகிறது.

நினைத்ததை அளித்திடும் மனக்குறை அகற்றிடும் வழித் துணை வந்திடும் அருள்மிகு சக்தி வெற்றி வேலாயுத சுவாமியின் இன்னருள் பெற்றிட வேண்டுகிறேன்.

ஆறு.சுப. ஆறுமுகம்

உ

ஓம் முருகா

# வளமுடன் வாழ்க ! வாழ்க !!

ஆலவாய் சொக்கேசர் அங்கயற் கண்ணியுடன்
ஆடுதற் காசை கொண்டு
அகிலபுவனம் போற்ற அழகான மதுரையில்
ஆவணியை தேர்ந்தெடுத்து
ஆடினார் அறுபத்து நாலுவிதம் ஆடினார்
அதற்கு மேல் ஆடுதற்கு
தேடினார் திக்கெட்டும் தென் மதுரைக் கீடாக
சிவபுரியைத் தேர்ந்தெடுத்தார்
மணிமகுடமில்லாமல் வணிகனுரு வாய் வந்து
வாகுடன் வளையல் விற்றார்
மதிப்பதற் கியலாத மாணிக்கமும் விற்று
மதியத்தில் விறகும் விற்றார்
மண்சுமந்தார் மதுரை வைகைக்கு நிகரான
மணி முத்து ஆறு தண்ணில்
மன்னவன் பாண்டியன் கண் சிவந்தடித்தநற்
காட்சியும் காண நின்றார்

நாட்டுக்கு கோட்டை என்னும் நகரத்தார் இதயத்தில்
நடமாடும் மீனாட்சி நீ
தேட்டுக்கு வழிகாட்டி செல்வத்தை தந்து நற்
செயல்புரிய வைப்பவளும் நீ
தென் பழநியப்பனை செங்கண்மால் மருகனை
தேர்ந்தெடுத்திட்டவளும் நீ
தேவரும் 'வரும் யாவரும் வணங்கிடும்
சிவபுரி மீனாட்சி நீ
சொக்கரில் பாதி நீ சோர்வுற்ற பிள்ளைக்கு
சோறூட்டி வளர்ப்பவளும் நீ
தக்க சமயங்களில் தாய் போலும் முன் நின்று
சங்கடம் தீர்ப்பவளும் நீ
வேழமாய் ஒரு பிள்ளை வேலோடு மறுபிள்ளை
மேன்மை பெறத் தந்தவளும் நீ
வேள் வணிகர் மரபுக்கு வித்தாக நின்றிடும்
வேத நாயகியும் நீயே

நன்மார்க்க வழிகாட்டி நாணயம் பிசகாத
நகரத்தார் வாழும் நகராம்
சன்மார்க்கம் தழைத்திட தருமநெறி தவறாத
சான்றோர்கள் வாழும் நகராம்
ஆயிரம் ஆயிரம் புலவர் தமை நாட்டுக்கு
அள்ளிக் கொடுத்த நகராம்
பாயும் மணி முத்தாறு பாண்டிநகர் வைகையென
பாராட்டுகின்ற நகராம்
ஆலவாய்ச் சொக்கேசர் அறுபத்து நாலு விதம்
ஆடிவரும் அழகு நகராம்
கோலமயில் மீதேறி குன்றுதொறும் ஆடிவரும்
குமரன் விளையாடும் நகராம்
சிந்தை களி கூறவே செல்வ விநாயகருடன்
திருமகள் உலாவும் நகராம்
செந்தமிழும் ஆங்கிலமும் செழித்திடும் நல் மேலை
சிவபுரி எங்கள் நகராம்

தணிகை வடிவேலனைத் தரணிக்குத் தந்திட்ட
சங்கரி தயாபரியும் நீ
தாமோத ரானந்த கோவிந்தன் தங்கை நீ
சகல புவனங்களும் நீ
வணிகர்குலம் காத்திடும் மாதங்கி பைரவி
வாலை மனோ கரியும் நீ
வானோர்கள் போற்றிடும் வளமான சிவபுரியில்
விளையாடும் மீனாட்சி நீ
தெவிட்டாத செந்தமிழை தேன் போலு முருவாக்கி
திக்கெட்டும் தந்தவளும் நீ
தேட்டமுடன் யாவர்க்கும் நாட்டமிகு நலந்தந்து
கேட்ட வரம் அருள்பவளும் நீ
தேரேறி ஆவணியில் பாரோர்கள் போற்றவே
சிவனோடு பவனி வருவாய்
தித்திக்கும் சிவபுரியில் சிங்காரப் பொற் கோயில்
சிறந்திடக் கண்ட தாயே

முன்நாளில் நாம் செய்த புண்ணிய வசத்தினால்
முன்னோர்கள் தேடி வைத்த
அன்னை மீனாட்சியின் ஆலயத் திருப்பணிக்கு
அள்ளிக் கொடுத்த பேரும்
தக்க சமயங்களில் தானாக முன் வந்து
தாராளமாய் தந்த பேரும்
தகுதிக்கு மேலாக சாமிக்குத் தானென்று
சலியாமல் தந்த பேரும்
எழில் மண்டபம் கட்ட இதமாக முன்னின்று
ஏற்றமுடன் தந்த பேரும்
எல்லோரும் போற்றவே இறைவன் திருப்பணியை
ஏற்று முடித்த பேரும்
செய்ய திருமாலுடன் திருமகளும் மலைமகளும்
சேர்த்து நல்லருள் புரிந்திட
வையகம் உள்ளளவும் வடிவேலன் அருள் பெற்று
வளமுடன் வாழ்க வாழ்க

*முருகனடிமை கதி. மாணிக்கம்*

மேலைச்சிவபுரி

# பிரதோஷப் பெருமை

திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள்

காலத்திற்கு அதிக வலிமையுண்டு. காலம் அறிந்து ஒரு தருமம் செய்தால் ஞாலமே நமது வசமாகும். அதனை வலியுறுத்த திருவள்ளுவர் "காலம் அறிதல்" என்று ஓர் அதிகாரத்தை அமைத்தார். "ஞாலம் கருதினும் கை கூடும், ஞாலம் கருதி இடத்தால் செயின்" என்றும் குறிப்பிட்டார். "பாலோடாயினும் காலம் அறிந்து உண்" என்பது பழமொழி. இவை காலத்தின் சிறப்பை உறுதி செய்கின்றன.

இறைவனை எப்பொழுதும் வழிபட வேண்டும். அதிலும் குறைகளை நீக்கி நிறைவு தரும் புண்ணிய நாட்களில் இறைவனை வழிபட்டால் - ஜெபம் செய்தால் ஒன்றுக்குக் கோடி மடங்கு மிகுதியான உயர்ந்த பயன் விளையும். சோமவாரம், சிவராத்திரி, தைப்பூசம், பங்குனி உத்திரம், கந்தர் சஷ்டி, வைகுண்ட ஏகாதசி, திருவாதிரை, சூரிய சந்திர கிரகண காலங்கள் போன்ற புண்ணிய நாட்களில் பக்தியுடன் வழிபாடு புரிபவர்கள், பாவங்களினின்றும் நீங்கி, புண்ணியம் பெற்று, இகம், பரம், வீடு என்ற மும்மை நலங்களையும் எளிதில் பெறுவார்கள்.

விரத நாட்களில் உண்ணாமல் நோன்பிருந்து, ஆலய வழிபாடு செய்து, திருமுறைகளை ஓதி, திருவைந்தெழுத்தை ஜெபிக்க வேண்டும். ஆலய வழிபாடு, உடல் நலத்தைத் தரும் - திருமுறைகளை ஓதுவது, வாக்கு நலத்தைத் தரும் - பஞ்சாட்சர ஜெபம், மன நலத்தைத் தரும். இவை இணைந்து, முக்கரண நலம் தந்து நம்மைக் காக்கும்; வினைகள் விலகும்; அருளாற்றல் உண்டாகும். சிவ வழிபாடு செய்த மார்க்கண்டேயர், எமனையே வென்று, வீடு பேறு பெற்றார். இத்தகைய விரதங்களில் தலையாய விரதம், சிவபெருமானை வழிபடும் "பிரதோஷ விரத" மாகும்.

## பிரதோஷ வரலாறு

அசுரர்களை வெல்வதற்காக, நரை, திரை, மூப்பு, மரணம் இன்றி வாழ விரும்பிய தேவர்கள், திருமாலின் ஆலோசனைப்படி, திருப்பாற்கடலைக் கடைந்து அமுதம் பெற முயன்றார்கள். மந்தரகிரியை மத்தாகவும், சந்திரனை தறியாகவும் வாசுகி என்ற நாகராஜனைத் தாம்புக் கயிறாகவும் அமைத்தார்கள். திருமாலோ கூர்மாவதாரம் எடுத்து, மந்தரகிரியைத் தன் முதுகில் தாங்கினார். அசுரர்கள் தலைப்புறமும், தேவர்கள் வால்புறமும் நின்று, திருப்பாற்கடலைக் கடைந்தார்கள்.

அன்று தசமிதிதி, ஒரு வேளை உண்டு, விரதம் இருந்து, பாற்கடலைக் கடையும் போது, வருத்தம் தாளாது பதை பதைத்த வாசுகி நஞ்சை உமிழ, பாற்கடலிலிருந்தும் நஞ்சு தோன்றியது: அந்த ஆலால நஞ்சின் உக்கிரம் தாளாமல், தேவரும் அசுரரும் அஞ்சி ஓடினார்கள். வெண்ணிறத் திருமால் விஷ வேகத்தால் நீல நிறமானார். எல்லோரும் அரனைத் தஞ்சம் அடைந்தார்கள்.

சிவபெருமானும் சுந்தரரை அழைத்து ஆலால விஷத்தைத் திரட்டி வரச் செய்து உண்டருளினார். செம்மேனி எம்மானின் கண்டத்தில் அது தங்கி, "நீல கண்டர்" ஆனார். அந்நாள் ஏகாதசி நன்னாள்.

சிவபெருமான் ஆணைப்படி மறுபடி பாற்கடலைக் கடைந்தார்கள். 'அதிலிருந்து இலக்குமி, ஐராவதம், காமதேனு, கற்பகதரு, சிந்தாமணி, கௌஸ்துப மணி, சூடாமணி, உச்சைச்ரவம் என்று ஒவ்வொன்றாகத் தோன்றின. இலக்குமியைத் திருமால் ஏற்றுக் கொண்டார். ஏனைய பொருள்களை இந்திராதி தேவர்கள் அடைந்தார்கள்.

ஏகாதசியாகிய அந்நாளில் இரவு முழுதும் உறக்கமின்றிப் பாற்கடலைக் கடைந்த பின், மறுநாள் துவாதசியன்று அதிகாலை அமிர்தம் தோன்றியது. அதனைத் தேவர்கள் பகிர்ந்து உண்டு ஆடியும் பாடியும் மகிழ்ந்தார்கள்.

மறுநாள் - 13 ஆம் திதியான திரயோதசி நாளில், உயிர் காத்து உதவிய சிவபெருமானை மறந்தமைக்கு வருந்திய தேவர்கள், அவரிடம் சென்று போற்றி, மன்னிப்புக் கேட்டனர். அவரும் மகிழ்ந்து, தேவர்களுக்கு அருள்புரியத் திருவுள்ளம் கொண்டு, கயிலையில், அன்று மாலை பிரதோஷ வேளையில் (மாலை 4-30 முதல் 6-00 மணி வரை), ரிஷப தேவரின் இரு கொம்புகளுக்கு இடையில், அம்பிகையும் தேவர்களும் காணத் திருநடனம் செய்தருளினார்.

**விரதமுறை**

வளர்பிறை, தேய்பிறை என்ற இரண்டு பட்சங்களிலும் வரும் திரயோதசி திதியன்று அதிகாலை எழுந்து நீராடி, நீறாடி, நித்தியக் கடன்களை முடிக்க வேண்டும். சிவாலயம் சென்று வழிபட வேண்டும். அன்று முழுவதும் உணவின்றி உபவாசமாக இருக்க வேண்டும். திருமுறைகளை ஓத வேண்டும்.

பிரதோஷ நேரமான 4-30 மணி முதல் 6-00 மணி வரை சிவாலயம் சென்று, ஐந்தெழுத்தை ஓதி, உள்ளம் உருகி, வழிபட வேண்டும். தேவியுடன் கூடிய சந்திரசேகரர் ஆலயத்தை மூன்று முறை வலம் வருவதைக் கண்டு சேவித்து வணங்க வேண்டும். அங்கு முதல் சுற்றில் வேத பாராயணமும், இரண்டாவது சுற்றில் திருமுறைப் பாராயணமும், மூன்றாவது சுற்றில் நாதஸ்வர இன்னிசையும் நடைபெறுவதைக் கேட்டுயிக்க வேண்டும்.

சுவாமி திருமுன் இருக்கும் இடப தேவருக்கு அறுகம்புல் மாலையும், சிவப்பு அரிசி நிவேதனமும், நெய் விளக்கும் வைத்து வழிபட வேண்டும். பிரதோஷ வேளையில், சிவலிங்க மூர்த்தத்தை இரு கொம்புகளுக்கும் இடையே கண்டு, வணங்க வேண்டும். திருவைந்தெழுத்தை ஜெபம் செய்ய வேண்டும்.

**சோம சூக்தப் பிரதட்சிணம்**

மற்றைய நாட்களில் ஆலயத்தை மூன்று முறை வலம் வரும் வழக்கத்திற்கு மாறாக சோம சூக்தப் பிரதட்சிணம் செய்ய வேண்டும். ஆலகால விஷம் துரத்த, அஞ்சி ஓடிய தேவர்கள், சிவமூர்த்தியிடம் சரணடைய வலம் வந்து ஓடினார்கள். ஆலகால விஷமோ அப்பிரதட்சணமாகச் சென்று எதிர்த்தது. அஞ்சிய தேவர்கள் வந்த வழியே திரும்பி ஓட, அந்த விஷம் அங்கும் சென்று அச்சுறுத்தியது. இவ்வாறு தேவர்கள் வலமும் இடமுமாக ஓடிய அந்த நிகழ்ச்சி தான் "சோம சூக்தப் பிரதட்சிணம்" என்று பெயர் பெற்றது.

# கோயில்களை நோக்கி.......

டாக்டர். இரா. கலைக்கோவன், எம்.பி.பி.எஸ்., டி.ஒ.எம்.ஏ.,
இயக்குநர்
டாக்டர். மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம்
திருச்சிராப்பள்ளி - 620 017.

தமிழகத்தில் கண்படும் இடமெல்லாம் விண்முட்டும் கோபுரங்களும் வான் தழுவும் விமானங்களுமாய்த் திருகோயில்களின் சிந்தையள்ளும் காட்சிகள் தான். பல மரபுப் பேரரசர்கள் தங்கள் உடல், பொருள், ஆவி மூன்றையும் தத்தம் செய்து தமிழ் நாட்டின் பட்டி தொட்டியெல்லாம் இறை மணமும் கலை மணமும் கலந்து கமழ எழுப்பிய இத்திருக்கோயில்களின் இன்றைய நிலை நெஞ்சில் கனலெழுப்புமளவு மோசமாகியுள்ளது. மக்களாலும் மன்னர்களாலும் மகிழ்ந்து புரக்கப்பட்ட இக்கோயில்கள் இன்று புல் புதர்கள் மண்டி, மரம், செடி, கொடிகள் வளர்ந்து மக்கள் நடமாட முடியாத நிலைக்குத் தள்ளப்பட்டிருப்பதற்கும் சுவர்கள் விரிசல் விட்டு, மதில்கள் சிதறி, மாடங்கள் குலைந்து, சில இடங்களில் திருமேனிகளே வீழ்ந்து போயிருக்கும் நிலைக்கு ஆளாக்கப்பட்டிருப்பதற்கும் யார் காரணம்?

தேவையென்றால் கோயிலுக்கு ஓடி கற்பூரம் ஏற்றி அருச்சனை செய்து இறைவனுக்கு விண்ணப்ப வேண்டுதலிடும் மனித மனம் மற்ற நேரங்களில் அந்தக் கோயில்களை ஏறெடுத்தும் பார்க்காதிருப்பது எதனால்? மக்கள் சமுதாயம் கோயில்களைச் சார்ந்து, கோயில்களைச் சூழ்ந்து குதூகலித்திருந்தது ஒரு காலம். அதே சமுதாயம் நாளடைவில் கோயில்களை நீக்கி ஒதுக்கமாய்ப் போனதால், வீழ்ச்சி இரண்டு பக்கமும் விவரிக்க முடியாத வேதனைகளோடு விரிந்து பரந்து வருவதைப் பார்க்க முடிகிறது.

கோயில்களை ஏன் புரக்க வேண்டும், கோயில்களுக்கு ஏன் போக வேண்டும், அங்கு என்ன இருக்கிறது என்றெல்லாம் இளைய மனங்கள் கேள்விக் கனைகளைத் தொடுக்கின்றன. பரபரப்பான வாழ்க்கை வேகங்களும் பளபளப்பான விளம்பர மோகங்களும் வாழ்க்கையை மிக செயற்கையாக்கிக் கொண்டு வருகின்றன. மின்னுவதையெல்லாம் பொன்னாக பார்க்கும் அசட்டுத்தனம் வாழ்க்கையின் ஆணிவேரை அசைக்கத் தொடங்கியிருந்தும், அதன் பொருள் புரியாமல் புதைந்து கொண்டிருக்கும் மக்கள் சமுதாயம், நாளைகள் நரகமாகி கொண்டிருப்பதை உணராமலேயே இருக்கிறது.

கோயில்களுக்கு ஏன் போக வேண்டும்? அங்கு என்ன இருக்கிறது? இந்தக் கேள்விகளை இன்று பலர் கேட்கிறார்கள். இந்தக் கேள்விகளைச் சற்றே மாற்றி இப்படிக் கேட்டால் அவர்களின் பதில் என்னவாக இருக்கும். கோயில்களுக்கு ஏன் போகக் கூடாது! அங்கு என்ன இல்லை?

கோயில்கள் வழிபாட்டுத் தலங்கள், இறையுணர்வும், சமய நோக்கும் கொண்டு வாழ்க்கையை அமைதிப் புலமாக்கிக் கொள்ளும் ஆர்வத்துடன் திருக்கோயில் படிகளைத் தொட்டால், வாழ்க்கை வீச்சுக்களில் விக்கித்துப் போயிருக்கும் மனம், சுமைகளை விலக்கிச் சுந்தர அமைதியில் சுகமாய் மூழ்கும். கடவுள் எங்கும் இருக்கிறார். அவர் நமக்குள்ளும் இருக்கிறார். பின் எதற்குக் கோயிலுக்குச் சென்று வழிபட வேண்டுமென்று சிலர் கேட்கிறார்கள். கடவுள் எங்கும் இருப்பதும் நமக்குள் இருப்பதும் உண்மை தான். இந்த உண்மை நம் முன்னோர்க்கு நம்மை விட நன்றாகத் தெரியும், இருந்தாலும் எங்கும் பரவியிருக்கும் அந்த வல்லமையை ஓரிடத்தில் நிலை நிறுத்தி அனைவரும் கூடிக் காணும் வாய்ப்பேற்படுத்தவே கோயில்கள் வந்தன. நம்பிக்கைகளில்லாமல் வாழ்க்கையே இல்லை. அந்த நம்பிக்கைகளின் முழு முதலாய் நம் முன்னோர்கள் கண்ட மந்திரமே திருக்கோயில்கள். நமக்கொரு வீடு என்பது போல், நாம் வழிபடும் இறைவனுக்கொரு தலம் என்று விழைந்தோர் விருப்பமெல்லாம் கோயில்களாயின. இந்தக் கோயில்கள் முதன் முதலில் இறை வழிபாட்டு நோக்கில் தான் எழுப்பப்பட்டன என்றாலும் பின்னாளில் அவை வரலாற்று விடிவிளக்குகளாய், வாழ்ந்த சமுதாயம் வரப்போகும் தலைமுறைகளுக்கு விட்டுச் சென்ற சரித்திர ஏடுகளாய் மாறி அமைந்தன. தங்கள் வாழியிடங்களுக்குத் தந்த முக்கியத்துவத்தை விட, இறைக் கோயில்களுக்கு அதிக முக்கியத்துவம் தந்து எழுப்பினர். அதனால் தான் இன்று ராஜசிம்மரின் அரண்மனையையோ, ராசராசரின் மாளிகையையோ நம்மால் பார்க்க முடியவில்லை. ஆனால் அவர்களால் ஆர்வக் கனவுகளோடு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் எழுப்பப்பட்ட திருக்கோயில்கள் இன்று நமக்கு உலகப்புகழை வழங்கித் தந்துள்ளன. உலகின் சிறப்புக்குரிய மரபுச் சின்னங்களின் பட்டியலில் அவை இடம் பெற்றுள்ளன.

இந்தத் திருக்கோயில்களின் கட்டடக்கலை நுணுக்கங்கள் அந்நாளைய தமிழரின் கட்டுமானத் திறத்தைக் காட்டுகின்றன. இன்றைக்கு வளர்ந்தோங்கியிருக்கும் மிக நவீன தொழில் திறமும் அறிவியல் அள்ளித் தந்திருக்கும் கருவிகளும் செய்முறைகளும் தரமுடியாத ஒழுங்கை, நிறைவை அன்றைக்கு உள்ளார்ந்த ஈடுபாட்டுடன் பணியாற்றிய மனிதக் கைகள் உருவாக்கியுள்ளன. விரிசல் விடாத, தண்ணீர் தேங்காத, இறங்கிப் போகாத தள அமைப்புகளை இன்றைய கட்டுமானங்களில் காண்பதரிது. ஆனால், ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் கட்டப்பட்ட கோயில்கள் இன்றைக்கும் எந்தச் சலனமும் இன்றி கட்டுக் குலையாக் கட்டடங்களாய்க் காட்சியளிப்பது, அந்தக் கால கட்டுமானப் பொறியியலின் கண்ணில் நிற்கும் அதிசயமல்லவா.

ஐம்பத்தாறுக்கும் மேற்பட்ட சின்னஞ்சிறு கோயில்கள் புடைசூழ அகல விரிந்து அமர்ந்திருக்கும் காஞ்சியின், கயிலாசநாதர் கோயிலும், ஒரே வளாகத்தில் மூன்றாய் அமர்ந்தும் திசைக்கொரு பார்வை தரும் கடற்கரைக் கோயில்களும், தொட்டு விடுவேன் என்று தொடமுடியாத வானத்தை நோக்கி எழுந்து நிற்கும்

ராஜராஜீசுவரமும் தமிழ் நெஞ்சின் கட்டுமான வித்தைகளல்லவா! உலகின் பல பக்கங்களில் இருந்தும் வரும் பொறியியல் வல்லுநர்கள், எப்படிச் செய்திருப்பார்கள் என்று வியந்து பேசும் ராஜராஜீசுவரத்தின் உள்ளீடற்ற விமான எழுச்சி, கல்லடுக்கி வானளந்த தமிழர்கள் என்ற பெருமையை அல்லவா நமக்கு வாங்கித் தந்திருக்கிறது. இந்தக் கல்லடுக்கல் இன்று ஏன் சாத்தியமில்லாமல் போயிற்று. செங்கல்லின் நான்கு பக்கமும் சிமெண்ட் பூசினால் தான் இன்றைக்குச் சுவரெழுப்ப முடியும். ஆனால், அன்றைக்கோ கல்லின் எந்தப் பக்கமும் எதுவும் தடவாமலேயே சுவரெழுப்பிக் காட்டினர். பொறியியல் இன்று வளர்ந்திருக்கிறதா? அன்று வளர்ந்திருந்ததா? பூச்சு இல்லாத சுவர்கள் அசைக்க முடியாத உறுதியோடு நிற்க, பூச்சால் குளிப் பாட்டப்படும் சுவர்கள் பெருமழையில் விழுகின்றன.

கட்டடத்திறன் காண மட்டுமா கோயில்கள்? அங்குள்ள சிற்பங்கள் அந்நாளைய மனிதர்களின் நாகரீக, பண்பாடு காட்டவில்லையா? குடந்தைக் கீழ்க் கோட்டம் ஒரு நடை போய் வந்தால் தெரியும். அங்குள்ள கருவறைப் புறக்கோட்டப் பெண் சிற்பங்கள் அணிந்திருக்கும் அணிகலன்கள், ஆடைகள், அவர்கள் நிற்கும் எழில், அவர்தம் மெய்ப்பாடுகள் என எத்தனை கற்க முடிகிறது. சிற்பங்கள் வழி அந்நாளைய கலைகள், வாழ்க்கை, போர்முறை என்று பலவும் அறிய வாய்ப்பிருக்கிறது. கோயில் உட்சுவர்களில் வரையப்பட்டிருக்கும் ஓவியங்கள் அந்நாளைய வண்ணங்களின் சிறப்பு, அவை கலக்கப்பட்ட நேர்த்தி, அவற்றால் விளக்கப்படும் சமுதாயக் காட்சிகள் என்று வரலாற்றை நம் கண் முன்னே விரித்து வைக்கின்றன. கோயில் சுவர்களில் வெட்டப்பட்டிருக்கும் கல்வெட்டுக்கள் ஒவ்வொன்றும் அந்நாளைய மனித மனங்களின் மொத்தப் படப்பிடிப்பாய் விளங்குகின்றன. இந்தக் கல்வெட்டுக்கள் மட்டும் இல்லாமல் போயிருந்தால் நாம் யார் என்பதே தெரியாமல் போயிருக்கும். நம்மை நமக்கு அடையாளம் காட்டும் இந்தத் தலைப்பெழுத்துக்கள் இன்றைக்குப் படும் துன்பங்கள் எண்ணிலடங்கா. இந்தக் கல்வெட்டுக்களின் அருமை தெரியாத கோயிலார் இவற்றுக்கு இழைக்கும் தீமைகளை எப்படிச் சொல்வது? பல கோயில்களில் இந்தக் கல்வெட்டுக்களின் மேல் சுண்ணாம்பையோ அல்லது வண்ணக் கலவைகளையோ பூசி விடுகிறார்கள். பூச்சில்லாமல் கல்லடுக்கிய அந்தக் காலத் திறன் மதிக்கத் தெரியாத இந்தக் கால மேதாவிகள் கற்களுக்கிடையில் அள்ளிப் பூசும் சிமெண்ட் அந்தக் கற்களில் தொடராக உள்ள கல்வெட்டுக்களை மறைத்து விடுகிறது. பின் மெல்லக் கீழிருக்கும் எழுத்துக்களைத் தின்றும் விடுகிறது. திருக்கோளக்குடியில் கல்வெட்டுகளுக்கு இழைக்கப்பட்டிருக்கும் தீமை இன்னமும் கண்களில் ரத்தம் வரவழைக்கிறது. திருப்பத்தூர் திருத்தளிநாதர் கோயிலிலோ கல்வெட்டுள்ள சுவரொன்றில் வண்ணம் அடித்து அதன் மேல் புதிதாகப் பாடலொன்றும் எழுதி நிரந்தரமாக அக்கல்வெட்டை அழித்திருக்கிறார்கள். சில கோயில்களில் கல்வெட்டுள்ள கற்களைத் திருப்பணியின் போது தலைகீழாக மாற்றி வைத்து விடுகிறார்கள். இன்னும் சில கோயில்களில் கல்வெட்டுள்ள கற்கள் தரையமைப்புக்குப்

பயன்படுத்தப்பட்டுள்ளன. இந்த நாட்டின் வரலாற்றைத் தரும் இக்கல்வெட்டுக்களுக்கு நேரும் இக்கொடிய கேடுகளைப் பற்றி இன்றைக்கு யாருமே கவலை கொள்ளாதிருப்பது இந்த நாட்டின் அலட்சியப் போக்கிற்கு ஆதாரமாகின்றது. தலைப்பெழுத்தே இல்லாமல் போனாலும் கவலைப்படாத ஒரு சமுதாயம் உருவாகிக் கொண்டிருக்கிறதோ என்ற அச்சம் நெஞ்சைக் கவ்வுகிறது.

பெருந்தூக்கத்திலிருக்கும் தமிழர்களைப் பள்ளியெழுச்சி பாடியோ, மெல்ல வருடியோ எழுப்ப முடியாத நிலை. இந்தத் தூக்கம் தட்டியெழுப்பினாலாவது கலையுமா? காலம் தான் பதில் சொல்ல வேண்டும். இளைய தலைமுறை விழிப்படைந்து, நிலைத்த நிம்மதிக்கு எது தேவை என்பதைப் புரிந்து கொண்டு வரலாற்றின் கலைகளின் பெருமையுணர்ந்து புத்துணர்ச்சி கொள்ளும் வரை கோயில்கள் வாழ்ந்திருக்குமோ என்பதும் தெரியவில்லை. இந்தத் துன்பமான சூழலில் கருத்துள்ள சிலராவது கையிணைத்துக் குரல் கொடுத்தால், சிறிதளவிலேனும் முயற்சிகளில் முனைப்பு கொண்டால், ஒரு வேளை தமிழகத்துத் தலைப்பெழுத்துக்களாம் திருக்கோயில்கள் காப்பாற்றப்படலாம்.

# திருக்குன்றக்குடி

டாக்டர் சி. செயபாரதி, அலோர் ஸ்டார் – மலேசியா

குன்றமிருக்கும் இடமெல்லாம் குமரன் இருக்கும் இடம் என்பது ஆன்றோர் வாக்கு. தமிழ்மொழியில் தற்சமயம் வழங்கும் நூல்களில் மிகப் பழமையானது தொல்காப்பியம் என்னும் நூல். அது ஒரு சிறந்த நூல். மலைகளும் மலைச் சார்ந்த இடமும் குறிஞ்சி நிலம் எனப்படும். அந்த நிலத்துக்குரிய சிறப்பு தெய்வமாக முருகனைக் குறிப்பிடுகிறார். அந்நூலின் ஆசிரியர் தொல்காப்பியர். "சேயோன் மேவும் மைவரை உலகும்" என்பதே அவருடைய சூத்திரம்.

இன்னொரு பழமையான நூல் திருமுருகாற்றுப்படை. அந்நூலிலும் முருகனின் மலை சம்பந்தம் நன்கு வலியுறுத்தப்படுகின்றது. எல்லா மலைகளிலும் முருகன் உறைவதை குன்று தோறாடல் என்று அந்த நூல் கூறுகிறது.

அனைத்துக் குன்றுகளிலும் முருகன் இருந்தாலும் சில குன்றுகளே சிறப்புப் பெற்று விட்டன. அவ்வாறு திருமுருகனின் குடியாய் விளங்கும் குன்றுதான் குன்றக்குடி. பழங்காலத்தில் இவ்வூர் திருக்குன்றக்குடி என்றழைக்கப்பட்டது.

தமிழ்க்குடி மக்களின் சிறப்பை மேலும் பெருக்கித் தந்தவர்கள் தமிழ் தனவைசியர்களான நாட்டுக்கோட்டை நகரத்தார். மரபால் இவர்கள் சைவ சமயத்தைச் சார்ந்தவர்கள். அம்மையப்பர் என்னும் பெயரில் விளங்கும் சிவனை சிறப்பாக பழங்காலந்தொட்டு வணங்கி வந்திருக்கிறார்கள். அவர்களுடைய சிறப்பான குலத்தெய்வமாக விளங்குபவன் முருகனே. திருமுருகனை பழநியில் விளங்கும் தண்டாயுதபாணியின் திருக்கோலத்தில் பரம்பரையாக தரிசித்து வரும் பேற்றினைப் பெற்றவர்கள்.

நகரத்தார்களின் இருப்பிடம் தற்சமயம் செட்டி நாடு என்று அழைக்கப்படுகிறது. பழங்காலத்தில் கேரளசிங்கவள நாடு, திருமலை நாடு, புறமலைநாடு. பூங்குன்ற நாடு, கழனி வாசல் நாடு போன்ற சில நாடுகளின் பகுதிகளைக் கொண்டு விளங்கியது. தற்காலத்தில் இந்நிலப்பகுதி திருச்சி, இராமநாதபுரம், புதுக்கோட்டை ஆகிய மாவட்டங்களின் பகுதியில் புதுப் பெயர்களோடு விளங்குகிறது.

செட்டி நாட்டு நிலப்பகுதியின் ஏறத்தாழ மையப்பகுதியில் விளங்குகிறது குன்றக்குடி. சதுரமான வடிவம் கொண்ட அழகிய சிற்றூர். சதுரத்தின் நடுவே குன்று. குன்றின் அடிவாரத்தில் மிகப் பழமையான குகைக் கோயில். குன்றின் உச்சியில் முருகனின் கோயில். கோயிலுக்குச் செல்ல படிகள் உண்டு. தோகையடி விநாயகரை வணங்கியே மேலே செல்ல வேண்டும். இதே குன்றில் பழங்காலத்தில் சமணர்கள் மடம் ஒன்று இருந்திருக்கின்றது. சதுர வடிவின் விளிம்பாக நாற்புறமும் விளங்குபவை நான்கு தேரோடும் வீதிகள்.

இந்த திருநகரே நாட்டுக்கோட்டை நகரத்தாருக்கு, பழநிக்கு அடுத்த சிறப்பு வாய்ந்த முருகத் தலமாக விளங்குகின்றது.

மலை மேலுள்ள கோயில் கோட்டை போல் கட்டப்பட்டிருக்கிறது. இக்கோயில் எவ்வளவு பழமையுடையது என்பது தெரியவில்லை. ஆனால் சுமார் ஐநூறு ஆண்டுகளுக்கு முன்னர் அருணகிரிநாதர் இங்கு வந்து இத்தலத்தில் குடியிருக்கும் முருகனைப் பாடியுள்ளார். அதற்கும் முன் சுமார் முன்னூறு ஆண்டுகளுக்கு முன்னர் பிற்கால பாண்டியர்கள் காலத்திலும் இக்கோயில் இருந்திருக்கிறது.

அருணகிரிநாதர் இக்கோயிலுக்கு வந்து சென்ற பின்னர், ஏதோ ஒரு காரணத்தால் இக்கோயில் சிறப்பிழந்து இருந்தது. அதற்கு ஒரு விடிவு காலத்தை முருகனே உண்டு பண்ணிக் கொண்டான்.

இருநூறு ஆண்டுகளுக்கு முன் செட்டி நாட்டின் பெரும் பகுதி சிவகெங்கைச் சீமை என்னும் சிற்றரசைச் சேர்ந்திருந்தது. இக்காலத்தை தமிழகத்தின் இருண்ட காலம் என்று வரலாற்றாசிரியர்கள் வர்ணிப்பர். அரசுகள் வீழ்ச்சியுற்றிருந்தன. முகலாயர், ஆங்கிலேயர், பிரஞ்சுக்காரர் முதலியவர்களின் ஆர்ப்பாட்டம் அதிகமாக இருந்தது. தடியெடுத்தவன் தண்டல்காரன். அந்தந்த இடங்களை ஆண்டு வந்த சமீன்தார்களே தங்கள் குடிமக்களைக் கொள்ளையடித்து வந்தனர். சமுதாயம் நிலைகுலைந்து எங்கும் வறுமையும் நம்பிக்கையின்மையும் அறியாமையும் பயமும் குழப்பமும் நிலவிய காலமது. அப்போது சிவகங்கைச் சீமையின் அதிகாரத்தை மருதுபாண்டியர் என்னும் இரு சகோதரர்கள் கைப்பற்றினர்.

அவர்கள் காலத்தில் சிவகங்கைச் சீமை ஒரு பெரும் மறுமலர்ச்சியை அடைந்தது. பல ஆலயங்கள் புதுப்பிக்கப்பட்டன. கள்ளர் தொல்லை ஒழிந்தது. நிர்வாகம் சீரமைக்கப்பட்டது. வறண்ட பாலைப்பகுதி நிலங்கள் நல்ல விவசாய நிலங்களாக ஆக்கப்பட்டன. வறுமைத் துடைப்புப் பணிகள் நிறைய நடைபெற்றன. பண்டைத் தமிழக அரசின் பெருமைகளை மீண்டும் ஏற்படுத்தினர் மருதுபாண்டியர். அவர்களுடைய அவையில் இருபத்தோரு புலவர்கள் வீற்றிருந்தனர். அவர்களில் தலைமைப் புலவராக விளங்கியவர் சாந்துப் புலவராவார்.

ஒரு சமயம் மருதுபாண்டியர் ராச பிளவை என்னும் கட்டியால் அவதிப்பட்டார். எந்த வைத்தியமும் பலனளிக்கவில்லை. இதைப் பார்த்த சாந்துப் புலவர், "முருகன் திருவருளாலேயே இவ்வியாதி நீங்கும். முருகனின் அடியார்கள் யாராவது திருநீறளித்தால் உடனே குணமாகும். நாட்டுக்கோட்டை செட்டியார்கள் குன்றக்குடி முருகன் பால் பேரன்பு பூண்டவர்கள். இவர்களின் குலதெய்வமும் அவனே. ஆகவே, யாராவது செட்டியாரைக் கொண்டு திருநீறளிக்கப்பெற்றால் நன்மையடையலாம்" என்று ஆலோசனை கூறினார்.

மருதுபாண்டியர் உடனே ஏவலாரை அழைத்து, 'நீங்கள் வெளியில் சென்று கண்ணில் தட்டுப்படும் முதல் செட்டியாரை கூட்டி வாருங்கள்' என்று உத்தரவிட்டார்.

அவ்வாறு வெளியில் சென்ற ஏவலாளர்களின் கண்களில் பலவான்குடி என்னும் ஊரைச் சேர்ந்த காடப்பச் செட்டியார் தட்டுப்பட்டார். அவரை அழைத்துச் சென்று அரசர் முன் விட்டனர். மருதுபாண்டியர் தன்னுடைய நோயகலுமாறு திருநீறு அளிக்கக் கோரினார்.

இதைக்கேட்ட செட்டியாரும் மிகுந்த அச்சமடைந்து இந்த இக்கட்டிலிருந்து தன்னை விடுவிக்குமாறு குன்றக்குடி முருகனைத் துதித்து மன்னருக்குத் திருநீறு தந்தார்.

திருநீறணிந்த பாண்டியரும் பன்னாட்கள் உறக்கமின்றி தவித்த போதிலும் அன்றிரவு ஆழ்ந்த துயில் கொண்டார். அப்போது ஏற்பட்ட கனவில் ஒரு இளந்துறவி மயில் தோகையுடன் வந்து மன்னரின் பிளவையைப் பிதுக்கி ஆணியை நீக்கி ஒரு வாழை இலையில் வைத்து விட்டுப் பிளவையின் வாயில் திருநீறு வைத்துவிட்டு மறைந்தார். விழித்தெழுந்த மன்னர் பிளவை உடைந்திருந்ததைக் கண்டு மகிழ்ந்தார். சாந்துப் புலவரையும் மற்றவர்களையும் அழைத்துக் காண்பித்தார். பிறகு தனக்கு உதவிய காடப்பச் செட்டியாரை எப்போதும் தன்னருகிலேயே இருக்குமாறு பணித்தார். செட்டியார் மூலம் தனக்கு உதவியவன் குன்றக்குடி முருகனே என்றறிந்த மன்னர் குன்றக்குடிக்கு வந்து முருகனை வணங்கிப் போற்றினார். காடும் புதருமாக மண்டிக்கிடந்த குன்றைப் பார்த்து அக்கோயிலை மீண்டும் சிறப்பிக்கச் செய்ய உறுதி பூண்டார்.

அங்குள்ள முருகன் விக்ரகத்தின் அடியில் நிறுவியிருந்த இயந்திரம் புரண்டுக் கிடப்பது முருகன் அருளால் தெரியவந்தது. ஆகவே வேறு இயந்திரத்தைச் சரியாக நிறுவிக் கோயிலை அழகாகவும் விரிவாகவும் புதுப்பித்தார். மலையைச் சுற்றி தென்னஞ்சோலைகளை ஏற்படுத்தினார். மருதாபுரி என்னும் தடாகத்தை அமைத்தார். திருப்பணிகளைச் செய்தவாறு மருதுபாண்டியர் அங்கேயே தங்கியிருந்தார்.

தமக்குப் பேரருள் புரிந்த குன்றக்குடி குமரனின் பேரில் கோவை ஒன்றைப் பாடுமாறு சாந்துப் புலவரைக் கேட்டுக் கொண்டார். புலவரும் விரதம் பூண்டு தோகையடி விநாயகரின் சந்நிதியில் அமர்ந்து ஒரே நாளில் "மயூரகிரிக் கோவை" என்னும் பிரபந்தத்தைப் பாடினார். குன்றக்குடிக்கு மயில்மலை, மயூரகிரி, மயூர நகரம், கிருஷ்ண நகரம், அரசமலை என்றெல்லாம் பெயர்களுண்டு.

*"செந்திரு மார்பன் மருது நராதிபன் செப்புகென்ன*
*மைந்தர் செல்வத்தோடு மாஞானம் வேண்டி மயூரகிரிப்*
*பைந்தமிழ்க் கோவையைப் பாடினன் சர்க்கரைப் பாலனங்கள்*
*இந்திரன் சாந்து மகிபால வால கவீச்சுரனே"*

என்று இக்கோவையின் சிறப்பாயிரம் கூறும்.

நாட்டுக்கோட்டை நகரத்தார் சமூகத்தைச் சார்ந்த பாடுவார், முத்தப்ப செட்டியார் என்பவர் சிறந்த அருட்கவி. சொற்பலிதம் உள்ளவர். ஒரு முறை மழையின்றி நீர்நிலைகள் வற்றிப் போயின. அப்போது முத்தப்பச் செட்டியாரை மழை பெய்விக்கப் பாடுமாறு மக்கள் கேட்டுக் கொண்டனர். அப்போது தேர்த்திருவிழா நடந்து கொண்டிருந்தது. தேர் தெற்கு வீதிக்குச் செல்லவும் செட்டியார் குன்றக்குடி முருகனைச் சிறப்பித்துப் பாடினார். எங்கிருந்தோ மழைமேகங்கள் கூடிச் சற்றைக்கெல்லாம் பலத்த மழை பெய்தது. மீண்டும் ஊரார் வேண்டுகோளுக்கிணங்க முருகனை நினைத்துக் கவிபாட மழையும் நின்றது.

(இரண்டு மாதங்களாக வறட்சியாக இருந்து வந்த அலோர் ஸ்டாரில் இந்தச் சம்பவத்தை எழுதிய சமயத்தில் நல்ல மழை சற்று நேரம் பெய்து ஓய்ந்தது.)

மழவராயணேந்தல் என்னும் ஊரைச் சேர்ந்த சுப்பிரமணிய பாரதி மகப்பேறு வேண்டி குன்றை முருகனின் பெயரால் பிள்ளைத் தமிழ் பாடி நன்மக்களைப் பெற்றார்.

அவர்களில் ஒரு மகனாகிய சிதம்பரபாரதி முருகனின் மீது குன்றக்குடி குமரன் வண்ணத்தைப் பாடினார். குன்றக்குடி சண்முகநாதர் உலா, குன்றக்குடிப் பிள்ளைத் தமிழ், மயூரகிரிக் கலம்பகம், குமரபஞ்சம், குன்றைச் சிலேடை வெண்பா, மயில் மலை சந்த விருத்தம், குன்றக்குடி குறவஞ்சி முதலிய பிரபந்தங்கள் குன்றை முருகன் மேல் இயற்றப்பட்டிருக்கின்றன.

மருதுபாண்டியர்கள் காலத்தில் திருவண்ணாமலையின் சைவ ஆதினத் தலைவர் ஏதோ காரணம் பற்றி சிவகங்கைச் சீமையின் எல்லையில் உள்ள பிரான்மலை என்னும் பறம்புமலையில் தங்கியிருந்தார். மருதுபாண்டியர் அவரை அழைத்து வந்து குன்றக்குடியில் இருக்கச் செய்து ஐந்து முக்கியமான கோயில்கள் அடங்கிய தேவஸ்தானத்தை ஏற்படுத்தி அதை நிர்வகிக்கச் செய்தார். அன்றிலிருந்து திருவண்ணாமலை ஆதீனம் குன்றக்குடியிலேயே இருந்து வருகிறது.

தென்கிழக்காசிய நாடுகளில் முருக வழிபாட்டைப் பரப்பிய பெருமையில் நகரத்தாருக்கு பெரும்பங்கு உண்டு.

பர்மாவில் உள்ள புரோம் நகரிலிருந்து பினாங்கு தண்ணீர் மலை வரையிலும் அவர்களின் இறைத் திருப்பணிகளைக் காணலாம்.

மலேசியத் திருநாட்டில் விளங்கும் முக்கியமான முருகனுடைய கோயில்களில் பல நாட்டுக்கோட்டை நகரத்தார்களால் நிறுவப்பட்டவையாகும். கடல் கடந்தும் முருக வழிபாட்டைச் சிறப்பிக்கச் செய்த நகரத்தாரின் கோயிலான தைப்பிங் முருகன் கோயிலும் இந்நாட்டிலுள்ள முருகன் கோயில்களில் மிகப்பழமையானதொன்று.

## திருக்குன்றக்குடித் திருப்புகழ்

*பிறர்புக ழின்சொற் பயிலுமி ளந்தைப்*
*பருவம தன்கைச் சிலையாலே*
*பிறவித ருஞ்சிக் கதுபெரு கும்பொய்ப்*
*பெருவழி சென்றக் குணமேவிச்*
*சிறுமைபொ ருந்திப் பெருமைமு டங்கிச்*
*செயலும ழிந்தற் பமதான*
*தெரிவையர் தங்கட் கயலைவி ரும்பிச்*
*சிலசில பங்கப் படலாமோ*
*கெறுவித வஞ்சக் கபடமொ டெண்டிக்*
*கிலுமெதிர் சண்டைக் கெழுசூரன்*
*கிளையுடன் மங்கத் தலைமுடி சிந்தக்*
*கிழிபட துன்றிப் பொருதோனே*
*குறமுகி இன்பப் பொருள்பெற அன்றுற்*
*பனமநு வுஞ்சொற் குருநாதா*
*குலகிரி துங்கக் கிரியுயர் குன்றக்*
*குடிவளர் கந்தப் பெருமாளே.*

– தகவல் ராம. முத்தப்பன்

# திருவாளன் திருநீறு

புலவர் மாமணி மா. முத்துராமன். எம்.ஏ., எம்.எட்., சி.ஜி.டி.,
தலைமைத் தமிழாசிரியர்
அ.செ. மேல்நிலைப்பள்ளி பள்ளத்தூர்.

மனைக்கு விளக்காக ஒளி தருபவர்கள் மங்கையர்கள். மாநிலத்தில் அறத்தை வளர்ப்பவர்களும் அவர்களே! "மங்கையராகப் பிறப்பதற்கே நல்ல மாதவம் செய்திட வேண்டுமம்மா" அறம் பேணி வீட்டுடன் நாட்டுக்கு நலத்தையும் தொண்டையும் செய்தால் ஏட்டிலேயும் இடம் பெறுவார்கள்.. ஆம் -

சேக்கிழார் பெருமகனின் செந்தமிழ்க் காப்பியமாம் பெரியபுராணத்தில் சிறந்த இடத்தைப் பெண்களே பெறுகிறார்கள்.

*'தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற*
*சொற்காத்துச் சோர்விலாள் பெண்'*

என்ற குறளுக்கு இலக்கியமாகவும் 'பெண்ணின் பெருந்தக்க யாவுள? எனும் குறளாசானின் கேள்விக்கு விடையாகவும் விளங்குகிறார்கள்.

'நகரத்தார்' செய்த கோவில் பணிகளுக்குக் கணக்கே இல்லை' என்று காஞ்சிப் பெரியவர்களால் புகழப் பெற்றவர்கள். சைவமும் தமிழுமே வாழ்வு என்று நாளும் வாழ்பவர்கள் நகரத்தார்கள்.

*ஓங்கி உலகளந்த உத்தமன் பெயரைப் பாடினாலும்*
*உலகெ லாமுணர்ந் தோதற்கினிய ஈசன் புகழ் பேசினாலும்*
*இருதரப் பெற்ற கோவில்களை எழிலாய்க் கட்டினாலும்*
*இதரக் கடவுளர் வழிபாடுகள் உடன்பாடே யானாலும்*
*இன்றுவரை சைவ மன்றிப் பிறமதம் சார்ந்ததே இல்லை.*

பக்திச் சுவை தந்தே முக்திக்கு வழி வகுக்கும் சக்திப் பெருங்காப்பியம் பெரியபுராணத்தில் ஆண்களில் சிலர் சூழல்கள் காரணமாய் மனம் மாறியே பிறமதம் சார்ந்ததுண்டு. ஆனால் பெண்கள் "பிறமதம் சாராப் பெருமக்களாம் நகரத்தார் போல்" நிலைத்த மனமுடன் வலுவான கொள்கை பேணி, வாழ்வில் மதமெனும் திசைமாறிய ஆண்களைத் திசை திருப்பி வாழ்வித்திருக்கிறார்கள். சைவத்தைத் தழைக்க வைத்திருக்கிறார்கள்.

"ஆடவர் தடம் புரண்டாலும் பெண்டிர் தடம் புரளாது, நெறியில் நின்றொழுகி வாய்மை வரலாற்றை வளப்படுத்தியிருக்கிறார்கள்" என்று இப் பெரியபுராணப் பெண்களை, தவத்திரு அடிகளாரவர்கள் தமிழ் மேடைகளிலே போற்றி வருகிறார்கள்.

வாழ்த்திப் போற்றி வணங்குதற்குரிய பெரியபுராணப் பூவையர் மூவர்.

கணவன் கூன்பாண்டியனை நின்றசீர் நெடுமாறனாய் மாற்றிய பாண்டிமாதேவியெனும் மங்கையர்க்கரசி என்பவரொருவர்.

தெய்வக் காட்சிக்கு மாங்கனி பெற்றுச் சாட்சியாக்கி 'அம்மையே' என்று ஆண்டவனையே அழைக்கச் செய்த புனிதவதியாரெனும் காரைக் காலம்மையார் மற்றொரு மாதராவார்.

மருள் நீக்கியார் என்றிடும் தம்பியை நாவுக்கரசாக மாற்றிட ஆற்றுப்படுத்திய திலகவதியார் என்பவர் அடுத்தொரு அணங்காவார்.

மாதர் மூவருள்ளே, திருவாளன் திருநீற்றைத் தம்பிக்கு அளித்த திலகவதியாரையும் அவர்தம் தியாகத் திருப்பணியையும் காண்போம் இங்கே.

'ஆஸ்திக்கொரு ஆணும்-ஆசைக்கொரு பெண்ணும்' என்பார்கள். ஆனால் அக்கா திலகவதியாரும், தம்பி மருள்நீக்கியாரும் "சைவத்துக் கிருவர்" என்று அவதரித்தார்கள் திருவாமூர் என்றிடும் திருவூரிலே.

மணப்பருவம் வந்ததால் மகள் திலகவதியார்க்குத் தந்தை புகழனார் மணம் பேசி முடித்தார். அரசனிடம் பணிபுரியும் தளபதி கலிப்பகையார் என்பவரே தேர்ந்தெடுத்த மாப்பிள்ளையாவார். மணம் காண மகிழ்ந்திருந்தார் தந்தையார். விதிவலியால் மரணத்தைத் தழுவினார். மரபிற்கேற்ப மனைவி மாதினியாரும் உடன் மாய்ந்தார். நினைப்பதெல்லாம் நடந்து விட்டால் தெய்வம் ஏதுமில்லை என்பது எத்துணைப் பொருத்தம்.

நினைக்காத நிகழ்ச்சிகள் நிகழ்ந்து விடுகிறது. என் செய்வது? தாயையும், தந்தையையும் இழப்பதே இறைவன் நியதி என்றால், இதற்குத் திலகவதியாரும் மருள் நீக்கியாரும் விதி விலக்காகிட முடியுமா? நாட்கள் நகர்ந்தன.

வெந்த புண்ணிலே வேல் பாய்ந்தது போல் அடுத்தொரு செய்தி வந்தது. மணம் பேசியிருந்த மாப்பிள்ளை கலிப்பகையார் போருக்குச் சென்றவிடத்துப் புகழுடம்பு எய்தினார் என்பதுவே அது.

செய்தி கேட்ட திலகவதியார்

"எந்தையும் அனையும் அவர்க்கென்னைக் கொடுக்க இசைந்தார்கள் அந்த முறையால் அவர்க்கே உரியது நான் ஆதலினால் இந்த உயிர் அவருயிரோ டிசைவிப்பன் என உயிர்விடத் துணிந்தார் ஓடி வந்த தம்பி மருள்நீக்கியார் அக்காவின் அடியிணைமேல் விழுந்தார்.

*"அன்னையும் அத்தனும் அகன்ற பின்னையும் நான்*
*உமைவணங்கப் பெறுதலினால் உயிர் தரித்தேன் என்றார்*
*இதனையும் மீறி என்னை நீர் விடுத்துச் சென்றீர் என்றால்*
*யானும் முன்னம் உயிர் நீப்பன்"*
*என்று திடமாய்ச் சொன்னார்.*

மென்மை மணம் தானே பெண்மை மனம். தியாகத்தின் மறுவடிவம் தானே பெண் வடிவம். ஆதலினால் 'தம்பியர் உளராக வேண்டுமென' இம்பர் மனைத்தவம் புரிந்து திலகவதியார் இருந்தார்.

பாடலிபுரத்தில் சமண மதம் பரவியிருந்த நேரம் அந்த நேரம். பாடலிபுத்திரம் சென்றிடவும், சமணம் சார்ந்த கல்வி கற்றிடவும் மருள் நீக்கியார் மனம் நினைந்தது.

தேவர்கள் செய்த தவத்தால் கைகேயியின் "தூய சிந்தை திரிந்தது" என்று கம்பர் பேசுவார். இங்கு அதுபோல் திலகவதியாரின் தியாகம் உலகிற்குத் தெரிய வேண்டுமென்று தம்பியின் மனம் திருந்ததுவோ!

மருள்நீக்கியார் அங்கு 'தருமசேனர்' என்ற பட்டத்தையும் பெற்றார். செய்தியறிந்தார் தமக்கையார். "எதற்காக வாழ்ந்தோமோ... அதுவே பொய்யாகிப் போகிறதே" என்று துடித்தார். தம்பி. "தூய சிவ நன்னெறியே சேர்வதற்கு நாதன் தாளை" வணங்கினார்.

*உள்ளம் உருகி ஒன்றித் தொழுதால்*
*நலமே புரிய நாதன் எழுவார்.... எழுந்தார்.*

இறைவன் ஆட்கொள்ளத் தருமசேனர் வயிற்றில் சூலை என்னும் நோயைக் கொடுத்தார். சமணர்கள் நோய் தீர்க்க முனைந்தார்கள். அவர்களின் மந்திரங்கள் பலிக்கவில்லை. மாயங்கள் வெல்லவில்லை. வயிற்றுவலி குறையவே இல்லை.

"உயிர்துடிப்பு வரும்போது தானே உறவினர் அருமை தெரியும்" யாரும் அறியாத நள்ளிரவில் அக்கா திலகவதியாரை நாடி வந்து காலில்விழுந்து கருணை காட்டுமாறு வேண்டி நின்றார்.

தமக்கையார் திருநீற்றைக் கொடுத்தார். ஆண்டவன் தம்பியின் சூலை நோயை எடுத்தார். அகத்திருளும், புறத்திருளும் நீங்கி உவகை மிகக் கொண்டார்.

*"திருவாளன் திருநீறு திலகவதியார் அளிப்பப்*
*பெருவாழ்வு வந்த தெனப் பெருந்தகையான் பணிந்தான்"*

சமணத்திலிருந்து மீண்டும் சைவம் திரும்பிய மருள்நீக்கியார் பின்பு பதிகங்கள் பாடத் தொடங்கினார்.

பரமனும் "நாவுக்கரசு என்றுல கேழினும் நின் நன்னாமம் நயப்புற மன்னுக" என்று அருளிச் செய்தார்.

நாவுக்கரசரோடு அப்பரெனும் பெயரையும் மருள்நீக்கியார் பின்னாளில் பெற்றார்.

*தப்பாது இந்த நாடு எப்போதும் வாழ்ந்திட*
*ஒப்பரிய செல்வமாம் 'அப்பர் தேவாரம்' வந்ததென்றால்*
*அக்கா திலகவதியாரின் அரிய செயலால் என்பதனை அகிலம் மறக்குமா...?*

# திருமுறைச் செல்வம்

தொல்காப்பியச் செல்வர், டாக்டர் கு. சுந்தரமூர்த்தி

திரு என்பது பல பொருள்படினும், வீடு பேறு அல்லது அதனை வழங்கும் இறைவன் எனப் பொருள் கொள்வது இங்குப் பொருந்துவதாகும். முறை என்பது அதனை அடைவதற்குரிய நெறி எனப் பொருள்படும். எனவே திருமுறை என்பது வீடுபேற்றை அடைவதற்குரிய நெறி அல்லது சிவபரம் பொருளை அடைவதற்குரிய நெறி எனப் பொருள் காண்டல் சிறக்கும்

திருமுறைகளில் ஞானசம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவரும் அருளியிருப்பன தேவாரம் எனப் பிற்காலத்தே பெயர் பெறுவதாயிற்று. திருவாசகமும் திருக்கோவையாரும் எட்டாம் திருமுறை எனப்படும். திருவிசைப்பாவும், திருப்பல்லாண்டும் ஒன்பதாம் திருமுறை எனப்படும். திருமந்திரம் பத்தாம் திருமுறையாகும் பதினோராம் திருமுறை திருவாலவாயுடையார் திருமுகப் பாசுரம் முதலாக நம்பியாண்டார் நம்பிகள் அருளிய திருநாவுக்கரசர் ஏகாதசமாலை. இறுதியாகவுள்ள 40. பிரபந்தங்களைக் கொண்டுள்ளதாகும் பன்னிரண்டாம் திருமுறை பெரிய புராணம் என வழங்கும் திருத்தொண்டர் புராணமாகும்.

பன்னிரு திருமுறைகளையும் அருளிய ஆசிரியன் மார்களின் கால எல்லை சங்க காலத்து இறுதி முதலாக கி.பி. 12ம் நூற்றாண்டு வரையிலாக ஏறத்தாழ ஆயிரத்து இருநூறு ஆண்டுக்கால எல்லைக்குட்பட்டதாகும். ஆயிரத்து இருநூறு ஆண்டுக்கால எல்லைக்குட்பட்ட திருமுறைகளின் வழி தமிழ்ச் சமுதாயத்தின் சமய உணர்வு, கலை, பண்பாடு, நாகரிகம், அரசியல் அமைப்பு முதலிய அனைத்தையும் அறிதற்க இயலுகின்றது.

ஞான சம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர், மணிவாசகர் ஆகிய நால்வரும் சமய குரவர்கள் (சமயா சாரியர்கள்) என அழைக்கப் பெறுவர். காரணம் இவர்களுள் முக்கிய இருவரான, ஞான சம்பந்தரும், நாவுக்கரசரும் கி.பி.7ம் நூற்றாண்டில் தோன்றியவர்கள். இவர்கள் காலம் முதலாகத் தான் தமிழகத்தின் தொன்மைச் சமயமாக சைவ சமயமும் தமிழிசையும் திருக்கோவில் வழிபாட்டு நெறி முறைகளும் மீண்டும் எழுச்சியுறலாயின. சுந்தரர் தம் காலத்தில் வாழ்ந்த மூவேந்தர்களுடன் தொடர்புடையவர் ஆதலால் சைவ சமயம் மேலும் வளர ஏதுவாயிற்று. ஞான நெறியில் நின்ற மணிவாசகரின் திருவாசகத்தால் தமிழ்ச் சைவ உலகம் பக்தி நெறியின் ஆழத்தை மேலும் உணர முடிந்தது. இவ்வகையில் இந்நால்வரும் காலத்தால் செய்த உதவி கைம்மாறு வேண்டாக் கடப்பாடு உடையதாகும்.

சிறப்பாகத் தமிழகமும், பொதுவாக இவ்வுலகும் ஒரு நெறிய மனங் கொண்டு இறை நெறியைத் தழுவி உயருமாறு செய்த பெருமை இத்திருமுறைகளுக்கே உண்டு. இதனைப் பெருமிதத்தோடு உணர்ந்து போற்றுதல் தமிழர்களின் தலையாய கடனாகும்.

பொதுவாகச் சமயநெறி என்பது ஏதோ வயது முதிர்ந்தவர்களால் மேற்கொள்ளப்பட்டு வருவது என்றும் அது அவர்களும் காணாத, பிறர்க்கும் காட்ட

முடியாத ஒன்றை அடைவதாகச் சொல்லிக் கொண்டிருப்பது என்றும் பலரும் கருதுகின்றனர். ஆனால் நம் சைவ நெறி அத்தகையதன்று மண்ணில் நல்ல வண்ணம் வாழவும், எண்ணில் நல்ல கதிக்குச் சேரவும், ஒருங்கு ஆற்றுப்படுத்தும் தகையது. நினக்குப் பால் தந்தது யார்? எனக் கேட்ட தந்தையாருக்கு ஒரு மகவு அடையாளங்குடன் தமக்குப் பால் அளித்த அம்மையப்பரைக் காட்டவும் செய்தது. இம்மையில் மனைவியோடும் மக்களோடும் வாழ்வாங்கு வாழவோ, அவரவர்களும் தத்தம் வாழ்வின் நலம் பேண நெறியான தொரு பணியைச் செய்து உயரவோ நம் சமயம் எத்தகைய தடையும் விதிக்கவில்லை.

திருத்தொண்டர் புராணத்தில் வரும் அடியவர்கள் பலர் பல்வேறு வாழ்க்கை நிலையுடையவர். பல குலத்தைச் சார்ந்தவர் அரசர், உழவர் மிகவும் தாழ்த்தப்பட்டவர் என பல நிலையில் வாழ்ந்தவர்கள். அவர்கள் அனைவரும் தத்தமக்குரிய தொழிலைப் பேணி வந்தவர்களும் ஆவர். ஆயினும் அவர்கள் அனைவரும் இம்மையில் வாழும் வாழ்க்கை நலனோடு, உயிர்ப்பயன் நாடப் பத்திமையையும் மேற்கொண்டு வாழ்ந்தவர்களாவர். உடம்பை வளர்த்தே உயிர் வளர்த்தேனே என்பர் திருமூலர். எனவே உடல் வளர்ச்சியோடு உயிர் வளர்ச்சி பெறுவதும் இன்றியமையாததாகும். என்வே உடல் அழிவுறினும், உயிர் பயணம் தொடர்ந்து நடந்து வருகிறது என்று அறிய வேண்டும். இளங்கோ வடிகளும் “செல்லும்தே எத்துக்கு உறுதுணை தேடுமின்” என்று ஆற்றுப்படுத்தினார்.

எல்லோருக்கும் முன்னோடியான திருவள்ளுவரும்

*‘அன்று அறிவாம் என்னாது அறஞ் செய்க மற்றது*
*பொன்னுங்கால் பொன்னாத் துணை’*

என ஆற்றுப்படுத்தினார். உடலை விடுத்தப்பின் செல்லும் உயிர்ப் பயணம் கால எல்லையைக் கடந்து நிற்பதாகும். அவ்வுயிர்ப் பயணம் எங்குச் சென்று முடியும்? எவ்வகையில் சென்றால் அங்குச் செல்ல இயலும்? என்பதையெல்லாம் வரையறுத்து அறிவுறுத்துவனவே அறநூல்களும் சமயநூல்களும் ஆகும். உயிர் அவ்வாறு சென்று புகுமிடமே உயிரின் சொந்த இடமாகும் அதனை ‘புக்கில்’ என்பர் திருவள்ளுவர்.

இப்பெரும் நிலையை அடைவதற்கு இருவகையில் நம் வாழ்வை அமைத்துக் கொள்ள வேண்டும். ஒன்று எப்படியும் வாழலாம் என்பதை விடுத்து இப்படித்தான் வாழ வேண்டும் எனச் சான்றோர் சென்ற நெறியில் தம் வாழ்வை அமைத்துக் கொள்வதாகும். மற்றொன்று எல்லாவற்றிற்கும் மேலாக கருணையே வடிவாக நிற்கும் இறையருளைப் பேணி வாழ்வதாகும். இவ்விரண்டுமே சமயநெறிக்குரிய இரு கண்களாகும்.

சைவக் குடும்பங்களில் தினசரி வ்ழிபாட்டில் திருமுறைகள் இடம் பெற வேண்டும். நம்பக்கத்து நாடாகிய சிங்கப்பூர், மலேசியாவில் வாழும் தமிழ்க்

குடும்பங்களில் தினசரி வழிபாடும் அதில் திருமுறைகள் ஓதுதலும் சிறப்பாக முறையாக நடக்கின்றது. அங்கு அனைவரும் சிவபுராணம், மற்றும் திருமுறைப் பாடல்கள் நன்கு பயின்றுள்ளனர். இப்பழக்கத்தை தமிழ்நாட்டிலும் நடைமுறைப்படுத்துவது நற்பயனை விளைவிக்கும்.

சமுதாய வாழ்வில் ஏற்படும் சிறுசிறு துன்பங்கள் பல, வறுமை நீங்க, பிணிகள் அகல, மக்கள் திருமணம் கூட, மகப்பேறு பெற நிலமிசை நீடு வாழ இவற்றிற்கெல்லாம் இன்ன இன்ன திருப்பாசுரங்களை ஓதி வழிபட்டால் அல்லல் நீங்கி நன்மை பெறலாம் என நம் பெரியவர்கள் அனுபவ வாயிலாக கூறியுள்ளார்கள். நாமும் அத்திருமுறைப் பதிகங்களை தங்கள் வாய்க் கேட்டு ஓதி நலம் பெறலாம்.

இவ்வாறு உயிர்க்கு அனைத்து நலன்களையும் அருளும் இப்பன்னிரு திருமுறைகளையும், இடையறாது ஓதவும், அதனால் வரும் நலன்களை முறையாகவும் நிறைவாகவும் பெறவும் நம்மனோர்க்கு இறைவன் இன்னருள் பாலிக்க வேண்டுகின்றேன்.

# வள்ளுவம் காட்டும் வாழ்வியல்

இலக்கியச் செம்மல். இரா. இளங்குமரன்

**வள்ளுவர் தனிப்பொது நெஞ்சம் யாது?**

சொல்லுவது செயலுக்கு வரவேண்டும். செயலுக்கு வருமாறு சொல்ல வேண்டும். செயல் செயல் செயல் என்னும் ஓர் அடிப்படைக் கருத்தினைத் தம் நெஞ்சில் நீள இருத்திக் கொண்டே குறள் எழுதியவர் வள்ளுவர். செயல் அடிப்படையை யாண்டும் மறவா உளத்தினர் அப்பெருமகன். ஆதலால் செயலே வள்ளுவம் எனச் செய்க.

"குறள் கற்பேன்; நிற்பேன்; நிற்கக் கற்பேன்; குறள் வாழ்வு வாழ்வேன், வள்ளுவர் ஆணை என்று எண்ணுமின்! எண்ணத் திட்பங் கொள்ளுமின்" என்பவை மூதறிஞர் செம்மல் வ.சுப. மாணிக்கனார் எழுதிய வள்ளுவர் நெஞ்சமாகும். (வள்ளுவம் பக்.26;34)

வள்ளுவம் வழிபட எழுந்த நூல் அன்று; வழிபட்டு நடக்க எழுந்த நூல். வள்ளுவம் மேற்கோள் காட்ட எழுந்த நூல் அன்று; வாழ்வில் மேற்கொண்டு ஒழுக எழுந்த நூல். வள்ளுவம் ஒப்பிக்க எழுந்த நூல் அன்று; ஒப்பில்லா ஒன்றாகக் கொண்டு ஒழுகக் கிளர்ந்த நூல். படிப்பாளியைப் படைப்பாளி நிலைக்கு உயர்த்த எழுந்த நூலைப் படிப்பு நூலாக மட்டும் கொள்ளாமல் அப்படியே வாழ்ந்து காட்டும் படிவ நூலாகக் கொள்ளல் வழிபடுவார், மேற்கோள் காட்டுவார், ஒப்பிப்பார், படிப்பார் கடமையாகும். அதுவே, வள்ளுவர் நெஞ்சம் உணர்ந்த நேரிய செயலாகும்.

இயற்கை உலகைச் சுட்டி, இயக்கும் இயவுளாம் இறைமையைக் காட்டி, அவ்விறைமைப் பண்புகள் இவையென நாட்டி இறைமையை வாழ்த்துகிறார்.

மாந்தர் வாழ்வுக்கும் உயிர்கள் உய்வுக்கும் அடிப்படை அமிழ்தமாம் வான்சிறப்பை அருளிறையின் ஒழுக்காக நிலைப்படுத்துகிறார் வள்ளுவர்.

உலக இயக்கப் பண்பாடு உயர் சான்றோர் வழியது என்றும் தந் நலமற்றுப் பொது நலமுற்ற அவர்களே கண்ணோரில் நின்று உலகைக் கண்ணோட்டத்துடன் காப்பவர் என்றும், உணரச் செய்து மனத்துக்கண் மாசிலா அறப்பயனை வலியுறுத்தத் தொடங்குகிறார்.

அறன் இன்னதெனக் கூற அவாவிய அவர், அறத்தால் பொருள்தேடி அப்பொருளால் இன்புறுதல் என்பதை அறியுமாறு முப்பால் வைப்பை முறையாகப் போற்றுகிறார்.

அறத்தை வாளா கூறாமல் வலியுறுத்திக் கூறுகிறார். ஆம்! இடித்தும் கூறுகிறார்; அடித்தும் கூறுகிறார்; வாயறை அறைந்தும் கூறுகிறார். கையறை அறைந்தும் கூறுகிறார். அவ்வலியுறுத்தலை எப்பாலோர்க்கும் எந்நிலையோர்க்கும் பொருந்தவும் உரைக்கிறார்; கால இட வேறுபாடு காண ஒண்ணா வகையிலும் கூறுகிறார்.

வள்ளுவர் ஒரு சிறிய குடும்பத்தைக் காட்டிக் கோடி கோடியாக விரிந்துள்ள வியனுலகப் பரப்புக் கெல்லாம் விரிக்கின்றார். தாம் தம் நூலை நாடக உத்தியில்

தொடங்குகிறார்! ஏன்? மங்கல விழாக் கோலத்துடன் மணமேடையிலேயே தொடங்கி மணமகனுக்கும் மணமகளுக்கும் மக்களுக்கும் சுற்றத்திற்கும் அறமாண்பைத் திறமாகக் கூறுகிறார். வள்ளுவக் கடைப்பிடியர்க்கு வாய்க்கும் பேற்றை,

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்"

என வாயுறை வாழ்த்தாகவே வழங்குகிறார்.

மணமகனே! மணமகனே! இந்நற்பொழுதிலே மகிழ்வுப் பொழுதிலே மறவாமல் எண்ண வேண்டிய வாழ்வியல் செய்திகள் உண்டு. அவற்றுள் தலையாயது ஒன்று. அது, உன்னைத் தந்த தந்தை, உன்னை ஆகிய தாய், உனக்கு உயிர்த் துணையாக இப்பொழுது உன்னோடு வந்து ஒன்றாகி உடனாகி உயிராகி இருக்கும் துணை! இம்மூவரையும் நீ வாழும் நாளெல்லாம் நிறைபெற்ற துணையாக இருந்து பேணிக் காக்க வேண்டும்.

உன் பெற்றோர் எத்தகையர்? உன் உயிர்க்கும் உடற்கும் உணர்வுகளுக்கும் அறிவு பண்பாட்டு நலங்களுக்கும் மூலவர்கள் அல்லரோ! அவர்கள் தாமே உன் நலங்களுக்கெல்லாம் வைப்பகமும் காப்பகமுமாக இருந்தவர்கள். அத்தொடர்நிலை வாழையடி வாழையாக வாய்ப்பதற்காகத் தானே ஓர் உயிர்த் துணை இன்று உன்னோடு இணைந்துள்ளது. அத்துணையைப் பேணிப் போற்றும் அளவு எவ்வளவு, அவ்வளவு உன் குடும்பம் உயரும்; குலம் உயரும்; உலகம் நலம் பெறும்.

இனிய மணமகனே நீ நீடு வாழ வேண்டும்; நீ தும்மும் போது கூட நீடு வாழ்க என்பவள் உன் துணை. தான் ஊடி நின்றாலும் கூட உனக்குத் தும்மல் வந்தால் தன்னை மறந்து உன்னில் தோய்ந்து "நீடு வாழ்க" என்று வாழ்த்தி நாணி நிற்பவள் அவள்! உன் உயிர் தளிர்க்கச் செய்ய வாய்த்தவள் - வந்தவள் அவள்!

அவள் எலும்பால் தோலால் சதையால் நரம்பால் குருதியால் நீரால் அமைந்தவள் என எண்ணாதே, உன் உயிர் தளிர்க்கச் செய்யும் அமுதால் செய்யப்பட்டவள் என்பதை அறிக. அவளே உனக்கு வேண்டுவ வேண்டுவ வெல்லாம் வழங்கும் கற்பகம். அவள் சிறப்பே உனக்கு ஊர் வழங்கும் சிறப்பு. அவள் வழங்கும் இனிய கொடையே மக்கட்பேறு. அம்மக்களின் உடல்-உரை-செயல் எப்படிப்பட்டவை?

அமிழ்தம் தந்த அமிழ்தம் என்றால் அதுவும் அமிழ்து தானே! அது தொடுதலும் அமிழ்து; அது மொழிதலும் அமிழ்து; அது வழங்கும் உணவும் நீரும் அமிழ்து! அமிழ்திலே திளைக்கச் செய்து ஆருயிர் தளிர்த்தோங்கச் செய்யும் அமிழ்து!

*அந்த அமிழ்து உன் சொத்தா? ஆம், உன் சொத்துத் தான்!*
*அந்த அமிழ்து உன் குடும்பச் சொத்தா? ஆம் உன் குடும்பச் சொத்துத்தான்!*
*அந்த அமிழ்து உன் குல இன நாட்டு மொழிச் சொத்தா?*
*ஆம் இவற்றின் சொத்தும் தான்!*
*ஆனால் இவ்வளவில் நின்றால் என்ன பயன்?*

பெறுமவற்றுள் யாமறிந்த பேறு மக்கட் பேறே என வாழ்த்தி என்ன பயன்? பழிபிறங்காப் பண்பின் மக்கள் வழி வழி வர வேண்டும் என்று பாடுகிடந்து பெற்றதன் பயன் என்ன?

ஆன்றோர் அவையிலும், சான்றோர் அவையிலும் வல்லாண்மையில் வளமையர் அறவர் அருளர் அவைகளிலும் முந்தியிருக்கச் செய்ததன் பயன்தான் என்ன?

உன் குடியளவில் நிற்கவா! சான்றோர் புகழும் சொல்லைக் கேட்டுக் கேட்டுத் தாம் மட்டும் தளிர்த்தலா தந்தையும் தாயும் ஆகிய உங்கள் கடமை!

உங்கள் மக்களை உயர்அறிவர் ஓங்கிய பண்பர் ஆக்குவது உலகுக்காக அல்லவோ! எதிர்கால உலகத்தின் மேதக்க பொருளையல்லவோ உங்கள் திருவயிறு வாய்க்கப் போகின்றது!

*"மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்*
*நன்கலன் நன்மக்கட் பேறு"*
*"தம்மில்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து*
*மன்னுயிர்க் கெல்லாம் இனிது."*

என்பவற்றை எண்ணுக என்கிறார்.

மணமகளை நோக்கிக் கூறுகிறார். "மணமகளே! மணமகளே! இல்வாழ்வான் பெற்றோர்க்குத் துணை, உனக்குத் துணை என்றேன். அவ்வாறானால் அவனுக்கு நீ துணை என்பதும் தெளிவு தானே! நீ அவனுக்கு எப்படித் துணை?

நீயே மனைத்தக்க மாண்புத் துணை; கணவனுக்குத் துணை;

அவன் நிலை அறிந்து உதவும் வாழ்வுத் துணை!

நீயே குடும்பத்துக்குக் காலத்தால் உதவும் மழை போன்றவள். வேண்டும் என்னும் போதில், வேண்டியவாறு பெய்யும் மழை போன்றவள் தன்னைக் காப்பவள் நீ! தன்னைக் கொண்டவனைக் காப்பவள் நீ! உயர்புகழுக்கு இடமானவள் நீ! கடமையிற் சோர்வில்லாக் காரிகை நீ!

உன்னைக் காக்கச் சிறை வேண்டுமா? உன் நிறை காவல் முன் சிறையெல்லாம் தூள் தூள் அல்லவா!

உன்னைப் போலவே உயர்குணங்கள் எல்லாமும் அமைந்தானே உன் துணை, உங்கள் வாழ்வு தானே மண்ணிலேயே விண்ணகமாகத் திகழும் வாழ்வு!

உன் நடை மென் நடை! உன் நகைப்பு மெல்லிது! இனியவே கூறும் இயற்கை! விருந்தோம்பும் விழுப்பம்! பழியறியா புகழ் வாழ்வு

மக்களைப் பெற்ற பேறுடைமையில் மகிழ்பவளா நீ!

இல்லை! இல்லை! மேலோர் புகழும் மேலாம் மக்களைப் பெறுதலும் மேலோர் பழிக்கும் செயல்புரியா மேலாம் மக்களைப் பெறுதலும் அல்லவோ நோன்பெனக் கொண்டனை!

உன் வயிறு பசித்துக் கிடக்கும் நிலையிலும், உன் வயிற்றுப் பிறந்த பிறவி, உன் வயிற்றுப் பசியைத் தீர்ப்பதற்காக மாறான வழியில் பொருள் தேடுவதையும் விரும்பாத மாசிலாமணி அல்லவோ நீ! பழிச் செயல் செய்யும் நிலையில் தான் பெற்ற மகன் என்று

எண்ணி அதனைப் பொறுத்துக் கொள்ளாப் புகழ்ப் பிறப்புக் கொண்டவள் அல்லவோ நீ! உன்னினும் பெறுமைப் பிறப்பு ஏதேனும் உண்டோ? இல்லையே!" என்கிறார்.

இனி மக்களை நோக்கிச் சொல்கிறார் வள்ளுவர். மணவிழாவுக்குப் பெற்றோர் கூட்டம் வருவது போல் மக்கள் கூட்டமும் வரத்தானே செய்யும்!

மக்களே! மக்களே! நீங்கள் தாமே வருங்காலக் கணவன் மனைவியர்! நீங்கள் தாமே வருங்காலப் பெற்றோர்! கணவன் மனைவியர்க்கும் பெற்றோர்க்கும் இன்று சொல்லியவை, உங்கள் வருங்காலத்திற்கு உரியவை அல்லவா? இவ்வுயரிய மக்களைப் பெற இவர் பெற்றோர் என்ன பேறு பெற்றனரோ என்று உலகம் புகழ உங்கள் வாழ்வை அமைத்துக் கொள்ள வேண்டும் அல்லவோ!

நீங்கள், 'கற்பன கற்றல் வேண்டும்; குற்றமறக் கற்றல் வேண்டும்; கற்றப்படி நிற்கக் கற்றல் வேண்டும்!

செல்வத்தில் செல்வம் கல்விச் செல்வம் அல்லவா!

தோண்டத் தோண்ட ஊறும் ஊற்றுப் போல ஊறுவது

அல்லவோ கல்வி!

எந்நாடும் தம்நாடாய், எவ்வூரும் தம் ஊராய் ஆக்கும்

கல்வியைக் காலமெல்லாம் கற்க வேண்டும் அல்லவோ!

ஒருமுகப்பட்டு நீங்கள் கற்றால் என்றென்றும் கைகொடுத்து

உதவும் கருந்தனமாக அல்லவோ அமையும் அது!

கல்லாப் பிறவி ஒரு பிறவியா?

கல்லாப் பிறவி களர் நிலம் போன்ற பிறவி அல்லவா!

கல்லாதார் எவ்வளவு அழகராய் இருந்தாலும் என்ன?

மண்ணால் செய்த பொம்மைக்கும் கூட அழகு இல்லையா? கல்லாதவரும் கூடக் கற்றாரை அடுத்துக் கேட்கலாமே,

நல்ல செய்திகளை?

எந்த அளவு கேட்டாலும் அந்த அளவு நலம் தானே!

ஆற்றுப் பெருக்கு அற்ற நாளில் ஊற்றுச் சுரப்பு

உதவுவது இல்லையா? அதுபோல் கல்வியால் பெற

முடியா அறிவையும் கேள்வியால் ஒரளவு பெற்றுக் கொள்ளலாமே! வழுக்கல் நிலத்தில் நடப்பார்க்கு ஊன்றுகோல் உதவுவது போல் உதவுமே, உயர்ந்த கேள்விச் செல்வம்!

கல்வி அறிவு - கேள்வி அறிவு - உண்மை அறிவு - பட்டறிவு என்பனவெல்லாம் என்ன பயன் செய்வன?

உண்மையை உணர்த்தும்! தெளிவை ஆக்கும்!

போனபோக்கில் மனத்தைப் போகவிடாது தடுத்துக் காக்கும்!

அவ்வறிவுதானே, வருவதை உரைக்கும்; எதிரதாக் காக்கும்; அதிர வருதலை அகற்றும்; அஞ்சாமையை ஆக்கும்!

உலகம் உவப்பச் செய்து உலகாக ஆக்கும்.

"உள்ளம் உடைமை உடைமை" என்பதை அறிவுதானே நிலைநாட்டும்!

அந்த அறிவே, பிறிதின் நோயைத் தன்நோயாகக் கருதச் செய்து உதவும்!

அந்த அறிவே, ஊருணி நீர் ஊருக்குப் பொதுவாக உதவுவது போல், ஒப்புரவுக்குப் பயன்படும்" என்கிறார்.

ஒவ்வொரு குடும்பமும் இவ்வாழ்வியலைக் கடைப்பிடியாகக் கொண்டால், இவற்றின் கூட்டமைப்புத் தானே உலகம்! உலகமே வீடுபேற்று நிலையமாக - இன்ப உறையுளாகத் திகழும் அல்லவோ!